# அனுஷ்டான வேதாந்தம்



प्रज्ञानं ब्रह्म


விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

# அனுஷ்டான வேதாந்தம்

(விவேகானந்த சுவாமிகளின் கருத்தைத் தழுவியது)




விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115, எலமனூர் ஸ்டேஷன்,
திருச்சி ஜில்லா
1978

# அனுஷ்டான வேதாந்தம்

ஐதிகமாக வந்துள்ளவை ஆறு தர்சனங்கள். அவை களையே, ஆறு சாஸ்திரங்கள் என்றும் பகர்வதுண்டு. அவைகளுள் தலையாய தர்சனம் வேதாந்தம் என்பது. அதற்கு மறைமுடி என்பது மற்றொரு பெயர். இது சமயங் களுக்கெல்லாம் அடிப்படையானது. அகச்சமயம் எதுவும் வேதாந்தத்துக்கு முரண்பட்டதாயிருக்க முடியாது. வைதிக மதங்களுக்கெல்லாம் இது ஆதாரமானதாதலால் இது முற்றிலும் அனுஷ்டானத்துக்கு உரியதாக வேண்டும். வெறும் வாய்ப்பேச்சுக்கு மட்டும் உதவுவதாய்ப் போய்விட் டால் இதில் பயன் ஒன்றுமில்லை. மற்று புத்தி சாதுர்யத்தை விளம்பரப்படுத்துதற்கான மனோ முயற்சியாகவும் இது முடிந்து விடலாகாது. வாதம் பிரதிவாதம் ஆகியவைகள் தம்மளவில் பாராட்டத்தக்கவைகளேயாம். ஆனல் வேதாந்த மதம் என்பது வெறும் சம்வாதத்துக்குரியதன்று. அது முற்றிலும் பழக்கத்துக்குரிய கோட்பாடாகிறது. நமது வாழ்க்கையின் ஒவ்வொரு பகுதியிலும் அது நன்கு கையாளப் படுதல் வேண்டும். மனதில் வைக்கவேண்டிய மற்றுமொரு விஷயம் உண்டு. அத்யாத்மிக வாழ்க்கையும் லௌகிக வாழ்க்கையும் ஒன்றோடொன்று ' சம்பந்தப்படாதவைகள் என்று பலர் கருதி வருகின்றனர். இது அறியாமையினல் கற்பித்துக்கொண்ட வேற்றுமையாகும். ஆதரவற்ற இவ் வெண்ணத்தை அறவே அகற்றிவிடுதல் அவசியம். ஏனென் ருல் வாழ்வு என்பது யாண்டும் ஒன்று; அதைப் பிளவு படுத்த முடியாது என்கிறது வேதாந்தம். ஆக, சமயநெறி புகட்டுகின்ற கோட்பாடுகள் ஜீவிதத்தின் எல்லாப் பகுதி களிலும் பிரவேசித்திருக்கின்றன. எப்படி நாம் எண்ணு

கின்றேமோ அப்படி நாம் மாறி யமைகிறேம். ஆதலால் நம் எண்ணம் யாவும் வேதாந்தக் கோட்பாடுகளினின்று வடி வெடுத்த எண்ணங்களாக வேண்டும். அவ்வெண்ணங்களே பிறகு செயலாக உருவெடுக்கின்றன. வாழ்க்கைத் தத்து வங்கள் யாவை என்பதை முதலில் அறிந்துகொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேம். பானையை வனையும் குயவன் முதலில் அதை மனதில் கிரகிக்கிறன்; பிறகு அதற்கு ஸ்தூல வடிவம் தருகிறன். அங்ஙனம் நாம் வேதாந்தக் கோட்பாடு களை முதலில் ஓர்ந்து பிறகு பழக்கத்துக்குக் கொண்டு வரு வோம். வனாந்தரங்களிலே குகை வாசம் செய்பவர்களும் இக்கோட்பாடுகளை அனுஷ்டிக்கலாம். பெரிய நகரங்களின் ஆரவாரம் நிறைந்த வீதிகளில் இருப்பவர்களும் இவைகளை அனுஷ்டிக்கலாம். பின்பு இதற்குரிய தனிச்சிறப்பு ஒன்று உண்டு. ஆரணியங்களிலே விச்ராந்தி பெற்றிருந்தவர்களும் வேதாந்தக் கோட்பாடுகளை உணர்ந்தார்கள். ராஜ்ய பரிபாலனம் பண்ணும் பேரலுவல்களிலே ஈடுபட்டிருந்த ஜனகன் போன்ற முடிசூடிய மன்னர்களும், வேதாந்தக் கோட்பாடுகளை உணர்ந்தார்கள். இவ் இருதரத்தாருள் வியவகாரங்களை ஏராளமாகச் செய்துவந்த பாராளும் வேந்தர்களே வேதாந்தத்தின் கோட்பாடுகளின் பெரும் பகுதியைத் தங்கள் வாழ்க்கையின் மூலம் விளக்கியவர் ஆகின்றனர்.

உபநிஷதங்களில் முக்கியமானவை பத்து. அவைகளுள் ப்ருஹதாரணியக உபநிஷதம் என்பது ஒன்று. ஆரணிய வாசிகளாகிய ரிஷிகளால் இயற்றப்பெற்ற பெரியநூல் என்பது அதன் பொருள். அந்த நூலிலே வரலாறு ஒன்று உண்டு. அதாவது:—

அருணர் என்ற ரிஷி ஒருவர் இருந்தார். அவருடைய புத்திரர் ஆருணி என்பவர் ஆவார். அந்த ஆருணிமுனிவர்க்கு மைந்தனாக வாய்த்தவன் சுவேதகேது என்ற இளைஞன். கற்கவேண்டிய கலைஞானங்களையெல்லாம் அந்த ரிஷி புத்திரன் தந்தையிடமிருந்து கசடறக்கற்று உணர்ந்தான். அவனுடைய கல்வியும் பூர்த்தியாயிற்று என்று பிதாவானவர் பகர்ந்தருளினார். கொஞ்சம் வித்யா கர்வம் பிடித்தவனாக சுவேதகேது பாஞ்சாலநாட்டை நோக்கி ஏகினான். அந்நாட்டு மன்னர்கள் எல்லாரும் கல்வியிலும் கேள்வியிலும் புகழ் பெற்றவர்கள். இந்த ரிஷி புத்திரன் சென்ற காலத்தில் பிரவஹணன் என்று பெயர் படைத்தவன் வேந்தனாயிருந்தான். அவன் தந்தை ஜீவலன் என்ற ராஜரிஷி. தந்தைக்கேற்ற மைந்தனாக அம்மன்னன் இருந்தான். கற்றவர்கள் பலர் யாண்டும் அவனைப் புடைசூழ்ந்திருந்தனர். அக்கழகத்தினர் அனைவரையும் தனது கல்வித்திறமையால் தோற்கடித்துவிட்டுப் பிறகு வேந்தனையும் விவாதத்தில் வெல்ல வேண்டும் என்ற எண்ணம் சுவேதகேதுவுக்கிருந்தது. வாலிபனுக்கு வித்யா கர்வம் பிடித்திருந்ததை வேந்தன் குறிப்பால் அறிந்துகொண்டான். பின்பு சம்பாஷணையொன்று நேர்ந்தது :—

"குமாரா" என்று வேந்தன் கூவினான்.

"ஐயே" என்று இளைஞன் விடைவிடுத்தான்.

"உன் தந்தையிடம் நீ கல்வி பயின்றவன் அல்லவா?" என்று அரசன் அரவினான்.

"ஆம்" என்று மைந்தன் மறுமொழி சொன்னான்.

"மாண்டபின் மக்கள் எப்படிப் பிரிந்து போகிறார்கள் என்பது உனக்குத் தெரியுமா?"

"தெரியாது"

"இவ்வுலகுக்கு அவர்கள் எப்படித் திரும்பி வருகிருர் கள் என்பது உனக்குத் தெரியுமா?"

"தெரியாது"

"திரும்பத் திரும்பச் சாகின்றவர்களால் மறுவுலகம் ஏன் நிரம்பப் பெறுவதில்லை என்பது உனக்குத் தெரியுமா?" என்று மேலும் கோமான் கேட்டான்.

"தெரியாது"

"எத்தனை முயற்சிகளின் விளைவாக மானுடப்பிறவி வருகிறது?"

"அதுவும் தெரியாது"

"தேவலோகம் அல்லது பித்ருலோகம் அடைவதற்கான உபாயம் உனக்குத் தெரியுமா?"

அதுவும் தனக்குத் தெரியவில்லை, என்ருன் ரிஷிபுத்திரன். அரசன் கேட்ட இன்னும் சில கேள்விகளுக்கும் சுவேதகேது விடை சொல்லமுடியவில்லை. அதை யெல்லாம் தெரிந்துகொள்ளுவதற்கு அவன் அரசனிடம் மாணுக்கனுகக் கொஞ்சகாலம் வசித்திருக்கவேண்டும் என்ற கட்டளை பிறந்தது. அப்படிச் செய்ய இளைஞனுக்கு சம்மதமில்லை. புண்பட்ட மனதுடன் அவன் பிதாவிடம் திரும்பியோடினன். "நான் கற்கவேண்டியதை யெல்லாம் கற்ருய்விட்டது என்று தாங்கள் உறுதி கூறவில்லையா?" என்று தந்தையிடம் பிரலாபித்தான். "நுண்ணறிவாளா, உனக்கு நேர்ந்த தீங்கு யாது?" என்று தந்தை ஆருணி முனிவர் விசாரித்தார். பிரவஹணன் என்ற அரசன் கேட்ட ஐந்து கேள்விகளுக்குத் தான் விடையளிக்க முடியாது அவமானப்பட்டு வந்திருந்ததைத் தந்தையிடம் வருத்தத்துடன் அவன் வெளி

யிட்டான். தமக்கும் அவ்விஷயம் ஒன்றும் தெரியாது என்று தந்தையார் ஒத்துக்கொண்டார். உண்மையில் அது அவருக்குத் தெரிந்திருக்குமாகில் மைந்தனுக்கும் புகட்டியிருந்திருப்பார். சிஷ்யனுயிருந்த மைந்தனிடமிருந்து எந்த வித்தையையும் அவர் மறைத்து வைத்திருக்கவேண்டிய அவசியமில்லை. இந்த ரகசியங்களை அறிந்துகொள்ள முனிவர் தாமே அரசனிடம் போனுர். ஆங்கு அவர் மரியாதையுடன் வரவேற்கப்பட்டார். பிறகு சிஷ்ய பாவனையுடன் அரசனிடம் அவர் சிறிதுகாலம் வசித்திருந்தார். அப்பொழுது இந்த ரகசியங்களெல்லாம் அவருக்குப் புகட்டப்பட்டது. மேலும் ஒரு விஷயத்தை மன்னன் முனிவர்க்கு எடுத்து மொழிந்தான். அதாவது இக்கோட்பாடுகளை யெல்லாம் ராஜரிஷிகளே அறிந்திருந்தார்கள்; வெறும் வேள்வி வேட்கின்ற வேதியர்க்கு அவ்வித்தையானது விளங்கியதன்று. ஆயினும் முனிவரும் முனிப் புதல்வனும் அறிய விரும்பியதை வேந்தன் புகட்டினுன். பல உபநிஷதங்களினின்று இவ்வுண்மை நமக்கு வெளியாகிறது. அதாவது வேதாந்த தர்சனமானது வனத்தில் தியானம் பண்ணிக்கொண்டிருந்த முனிவர்களிடமிருந்துதான் உதித்தது என்பதன்று. ஒய்வு ஒழிவு இன்றி இவ்வுலக வாழ்க்கையில் ஆழ்ந்து ஈடுபட்டிருந்தவர்கள் பலர் வேதாந்த தர்சனத்தின் நுட்பமான பகுதிகளை ஓர்ந்து உணர்ந்து உலகுக்கு அளித்திருக்கின்றனர். கோடிக்கணக்கான மக்களை ஆண்டுவரும் பேரரசன் ஒருவன் எத்தனை விதமான அலுவல்களை உடைத்திருப்பான் என்பதை நாம் யூகிக்கமுடியும். வினையாற்றுதலில் அவனுக்கு மிக்கான் ஒருவன் இருக்கமுடியாது. இங்ஙனம் பார் ஆளும் வேந்தர் பலர் பாரமார்த்திக விஷயங்களை ஆழ்ந்து சிந்திக்க வல்லவர்களா யிருந்திருக்கின்றனர்.

வேதாந்தம் என்பது முற்றிலும் அனுஷ்டானத்துக்கு உரியது. அதாவது வாழ்க்கையில் கையாளக் கூடியது என்பதை நாம் மேலே கூறிய விஷயம் விளக்குகிறது. இக் கோட்பாடானது கடைசியாக பகவத்கீதையில் உயர்ந்த தொரு கோப்பு எடுக்கிறது. இது பிரசித்திபெற்றுள்ள நூல் ஒன்று என்பதை நாம் அறிவோம். வேதாந்த தர்சனத் துக்கு பகவத்கீதையே ஒப்பற்ற வியாக்கியானமாகிறது. இது போர்க்களத்தில் வைத்துப் புகட்டப்பட்டது இதன் தனிச் சிறப்பு ஆகும். போராட்டத்தினின்று பின்வாங்க எத்தனித்த அர்ஜுனனுக்கு அது கிருஷ்ண பரமாத்மாவால் போதிக்கப்பட்டது. பேருக்கத்துடன் வினையாற்றவேண் டும் என்னும் கோட்பாடு அப்புஸ்தகத்தின் ஒவ்வொரு பக்கத்திலும் திகழ்ந்த வண்ணமாயிருக்கிறது. அத்தனை விதமான அலுவல்களுக்கிடையில் ஒருவன் மனத்தகத்து அமைதியே வடிவெடுத்தவனாக இருக்கவேண்டும் என்பதும் அதன் கோட்பாடாகும். உடலைக்கொண்டு ஓயாது உழைப் பதற்கிடையில் உள்ளமானது ஒடுங்கி உபரதி பெற்றிருக்க வேண்டும் என்பதே வினையின் கோலம். அத்தகைய உயர் நிலையை அடையவேண்டுமென்று வேதாந்தம் நமக்கு விளக்கி யருள்கிறது. அகர்மம் அல்லது வினையைக் கடந்திருப்பது என்பதை நாம் முயற்சியற்று வெறுமனே உட்கார்ந்திருப் பது என்று பொருள்படுத்துகிறோம். சோம்பலுற்றுச் சும்மாவிருப்பது ஒருக்காலும் நமது குறிக்கோள் ஆகாது. வெறுமனே இருப்பது மேலானநிலை யென்றால் நம்மைச் சுற்றிலுமுள்ள சுவர்களை மகாமேதாவிகள் எனல் வேண் டும்; ஏனென்றால் அவைகள் வினையாற்றாது வெறுமனே இருக்கின்றன. தவறுதலான இக்கொள்கையை நாம் உயர் தத்துவம் என்று அங்கீகரிக்கலாகாது. இக் கொள்கை

யின்படி மண்ணாங்கட்டிகளும் மரக்கட்டைகளும் உலகில் மிகச் சிறந்த சான்றோர்கள் ஆய்விடும்; ஏனென்றால் அவைகள் வினையாற்றாது சும்மாவிருக்கின்றன. இனி, மற்றொரு விதமான தவறுதலையும் மனிதன் அறியாமையினால் செய்துவிடக்கூடும். செயலற்று ஜடம்போன்று கிடக்கிற ஆள் காமத்தால் அல்லது குரோதத்தால் தூண்டப்பெற்றுக் கர்மங்கள் புரிவானாகில் அது கர்மயோகம் ஆகாது. வாழ்வின் குறி இன்னதென்று வேதாந்தம் வற்புறுத்துகின்றது. வேதாந்தம் புகட்டுகின்ற கர்மயோகம் அலாதியானது. சோம்பலுக்கு அதில் இடமில்லை. ஆசாபாசத்துக்கும் அதில் இடமில்லை. சாசுவதமான சாந்தத்தோடு கூடிய அலுவல்களை அது புகட்டுகிறது. அலை வீசாத கடல்போன்ற அமைதி மனத்தகத்து இருக்கவேண்டும். அனுகூலமாக அல்லது பிரதிகூலமாக என்னதான் நிகழ்ந்தபோதிலும் மனதின் நடுநிலை பிறழாதிருத்தல் வேண்டும். ஜீவிதத்தில் நமது சொந்த அனுபவத்தையே ஆராய்ந்து பார்த்தால் அத்தகைய மனப்பான்மைதான் நன்கு வினையாற்றுதற்கு உற்ற உபாயமாகும் என்பதை நாம் கண்டுகொள்வோம்.

யந்திரம் ஒன்றை இயக்குதற்கு விசை வேண்டும். நீர் ஆவி, எண்ணெய், மின்சக்தி முதலிய விசைகள் யந்திரங்களை ஓட்டுகின்றன. அதேபாங்கில் மனிதனை வேலையில் தூண்டுதற்கு ஏதாவது மனோவேகம் இருக்கவேண்டுமென்று பலர் கருதுகின்றனர். மனோவேகமானது ஆக்கிரகம், அபிலாஷை, ரோஷம் இப்படியெல்லாம் வடிவெடுக்கிறது. இத்தகைய தூண்டுதல் இல்லாவிட்டால் மனிதன் ஒன்றையும் செய்ய மாட்டான் என்ற எண்ணம் பொதுவாக நிலவி வருகிறது. மானுட வாழ்க்கையைப் பற்றிய பூரண அனுபவம் இல்லாதவர்கள் அங்ஙனம் எண்ணுவர். ஆனால்

அனுபவம் வந்தபிறகு அக்கொள்கை சரியானதல்ல என்பது புலப்படும். ஆக்கிரகமானது குறையுமளவு வினையாற்றும் வல்லமை அதிகரிக்கிறது. நம்மிடத்தில் அமைதி குடி கொள்ளுமளவு நமக்கு நலன் விளைகிறது. அமைதியுற்றிருப் பவன் அதிகப்படியாக வேலைசெய்ய வல்லவனாகிறான். உள் ளத்தில் அடங்காது உதித்துவரும் காமம் குரோதம் முதலிய உணர்ச்சிகள் நமது உள்வலிவைக் கறந்துவிடுகின்றன. அதனால் நரம்புத் தளர்ச்சி ஏற்படுகிறது. மனதில் நிலை குலைவு உண்டாகிறது. பிறகு வினையாற்றும் வல்லமை குறைந்துபட்டுப் போகிறது. ஆக்கத்துக்கு ஏதுவான வினையாக வடிவெடுக்கவேண்டிய சக்தியோ பொருளற்ற உணர்ச்சியாகத் தோன்றி விரயமாய்விடுகிறது. மனது அமைதியுற்று நடுநிலையில் இருக்கும்பொழுதே அதனுடைய ஆற்றல் அனைத்தும் நல்வினையின்கண் செலுத்தப்படுகிறது. இத்தொல் உலகம் தோற்றுவித்துள்ள அரும்பெரும் தொண் டர்களது வரலாறுகளை ஆராய்ந்து பார்த்தால் அவர்கள் அனைவரும் அமைதியே வடிவெடுத்துள்ள அற்புதப் பெரு மக்கள் என்பது புலப்படும். மனத்தகத்து அவர்கள் படைத்துள்ள நடுநிலையைக் கலைத்துவிடக்கூடிய சம்பவம் எதுவுமில்லை. முன்கோபி ஒருவன் செயற்கரிய செயல் எதையும் சாதிக்க முடியாது என்பதும், சினத்தை வென்ற வன் எதையும் சாதிக்க வல்லவன் என்பதும் இப்பொழுது விளங்கும். உள்ளத்தில் பொங்கி எழுகின்ற சினத்துக்கும், வெறுப்புக்கும், அவைபோன்ற பொருந்தா உணர்ச்சிகள் பலவற்றிற்கும் அடிமைப்படுபவன் அறப்பணியாற்ற உத வான். தன்னைத்தானே அவன் சின்னா பின்னமாக்கிக் கொள்கிறான். பயன்படும் பணியொன்றையும் அவன் புரி யான். சித்தமிசை சாந்தமும், க்ஷமையும், உறுதியும்,

இனிமையும் படைத்திருப்பவனே பெருஞ் செயலாளன் ஆகின்றான்.

உயர்ந்த லட்சியம் ஒன்றை வேதாந்தம் புகட்டுகிறது. இப்பொழுது நாம்அடைந்துள்ள நிலைக்கும் இனி நாம்அடைய வேண்டிய லட்சியத்துக்கும் வெகுதூரம். இப்பொழுது நாம் பழக்க வழக்கத்தில் கொண்டுவந்திருப்பது சாமான்ய மானது. இனி நாம் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர வேண்டிய லட்சியம் மிக மேலானது. மக்களிடத்து இரண்டு வித இயல்புகள் உண்டு. உயர்ந்த லட்சியம் ஒன்றை நமது சாதாரணமான வாழ்க்கையோடு சமரசப்படுத்துவது ஒரு வித இயல்பு; நமது மட்டமான வாழ்க்கையை உயர்ந்த லட்சியத்தின்கண் உயர்த்துதல் மற்றொருவித இயல்பு. இவ்விரண்டுக்குமிடையில் உள்ள வேற்றுமையை அறிந்துகொள்ளுதல் அவசியமாகிறது; ஏனென்றால் உயர்ந்ததைக் கீழ் நிலைக்கு இழுத்து வருவதே நமது பொதுவான போக்கு ஆகும். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒரு மனிதன் ஏதேனும் ஒருவித வேலைசெய்ய வல்லவனாயிருக்கிறான். அவ் வேலையில் பெரும்பகுதி கேடு நிறைந்ததாயிருக்கலாம்; காமம், குரோதம், லோபம், சுயநலம் ஆகிய துச்சமான சுபாவத்தால் தூண்டப்பெற்றதாக அது இருக்கலாம். அத்தகைய மனிதனுக்கு உயர்ந்த லட்சியம் ஒன்று போதிக்கப் படுகிறது என்று வைத்துக்கொள்வோம். அந்த உயர்ந்த லட்சியத்தின்படி மனிதன் சுயநலத்தையும் சுகபோகத்தையும் விட்டுவிடவேண்டும் என்று ஏற்படுகிறது. அது சாத்தியப் படாது என்ற எண்ணம் உடனே மனிதனுக்கு வந்துவிடுகிறது. போகத்தை அனுபவித்துக் கொண்டிருப்பதற்கு இடையில் யோகத்தையும் கையாளலாம்என்ற லட்சியத்தை எடுத்துப் புகட்டினாலோ, அதை ஏற்க அம்மனிதன் உடனே

முந்துகிருன். உறுதியற்ற அம்மனிதனுக்கு எது சாத்திய மாகிறதோ அதுவே அனுஷ்டானத்துக்கு உரியது என்று அவன் முடிவுகட்டுகிருன். சாஸ்திரத்துக்கு ஒத்ததுஎன்பதை ஒவ்வொரு மனிதனும் தனக்கேற்றவாறு பொருள்படுத்துவது போன்று அனுஷ்டானத்துக்குரியது என்பதையும் தனக் கேற்றபடி பொருள்படுத்துகிருன். ஒவ்வொருவனும் தன்னையே அளவையாகவோ முன்மாதிரியாகவோ எடுத்துக் கொள்ளுதலிலே கருத்துடையவனுக இருக்கிருன். 'எனது கொள்கை சாஸ்திரத்துக்கு ஒத்தது, உன் கொள்கை முரண் பட்டது' என்ற முடிவுக்கு ஒவ்வொரு மனிதனும் வருகிருன். சாத்தியப்படுவது எது என்பதைப் பற்றியும் அதே பாங்கில் மனிதன் எண்ணி வருகின்ருன். அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர எது ஒன்று ஒரு மனிதனுக்குச் சாத்தியப்படு கிறதோ அவ்வொன்றுதான் உலகில் எல்லார்க்கும் சாத்தி யப்படுவதாகிறது. கடையொன்று வைத்துக் கடைக்காரன் ஆவது ஒருவனுக்கு சாத்தியமாகிறது. அத்தகையவன் கடை வைப்பது ஒன்றுதான் உலகில் மனிதனுல் சாதிக்க முடிந்த காரியம் என்று நினைக்கிருன். இன்னெருவன் திருடனுகி ருன். அவன் திருடுதல் ஒன்றையே சாத்தியப்படக்கூடிய காரியமென்று எண்ணுகிருன்; அதைத் தவிர வேறு எதுவும் நிறைவேற்றவல்ல செயலாகாது என்பது அவன் கொள்கை. இதினின்று ஒரு விஷயம் விளங்குகிறது. எதை மனிதன் விரும்புகிருனே, எதைச் செய்ய அவன் வல்லவனுகிருனே அது ஒன்றுதான் அனுஷ்டானத்துக்குரியது; அது ஒன்று தான் சாதிப்பதற்கு ஏற்றது என்று மனிதன் முடிவு கட்டு கிருன்.

மனிதனிடத்துள்ள இந்த இயல்பை ஞாபகத்தில் வைத் துக்கொண்டு வேதாந்த தர்சனத்தைப் பற்றி இனி விசாரிப்

போம். அது முற்றிலும் அனுஷ்டானத்துக்குரியது என்று நாம் பகர்கிறோம். அப்படி இயம்புகையில் அந்த உயர்ந்த லட்சியத்தில் விருப்பமுள்ளவர்களுக்கே அது சாத்தியம் என்பதை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். அது வாழ்க்கை சம்பந்தமான மகோன்னதமான கோட்பாடு என்பது உண்மை. ஆயினும் அது முற்றிலும் அனுஷ்டானத்துக் கேற்றதேயாம். மனிதனால் கையாள முடியாத கோட் பாட்டை அது புகட்டுகிறதில்லை. மனிதன் தெய்வத்தன்மை வாய்க்கப் பெற்றவன் என்னும் லட்சியத்தை அது புகட்டு கிறது. "தத்துவம் அஸி" என்பது மஹாவாக்கியம். அதுவாக நீ உள்ளாய் என்பது அதன் பொருள். வேதாந்தத் தின் சாரம் முழுதும் இந்த மஹாவாக்கியத்தில் இருக் கிறது. இதைக்குறித்து ஆழ்ந்த ஆராய்ச்சிகள் நிகழ்ந்தன. விதவிதமான விவாதங்கள் விளைந்தன. வாதப் பிரதிவாதங் கள் உண்டாயின. பூர்வபக்ஷம் என்னும் கோட்பாடுகள் தோன்றுவனவாயின. இவை யாவினின்றும் ஓர் உண்மை வெளியாயிற்று. மானுட வடிவம் தாங்கியுள்ள ஆத்மா வானது தனது எதார்த்த நிலையில் தூயது; சர்வக்ஞத்வம் அல்லது பேரறிவு படைத்திருத்தல் அதன் இயல்பாகும். ஆத்மாவைக் குறித்துப் பேசுங்கால் பிறப்பு இறப்பு என்பன பொருள்படாத மூட நம்பிக்கைகளாம். ஆத்மா எப்பொழுதா வது பிறப்பெடுத்ததன்று; இனி அது எப்பொழுதாவது சாகப்போவதுமன்று. சாவைக் குறித்து நாம் எண்ணுகிற எண்ணங்களும், அதைக் குறித்து நாம் அஞ்சுதலும் மூட நம்பிக்கையினின்று உதிப்பனவாம். நம்மால் சாதிக்கக் கூடிய காரியம் இன்னது, சாதிக்கக்கூடாத காரியம் இன் னது என்றெல்லாம் நினைப்பதும் மூட நம்பிக்கையே யாம். எதையும் செய்து சாதிக்கும் வல்லமை நம்மிடத்துண்டு.

மக்கள் முதலிலே தங்கள்மீது முழுநம்பிக்கை வைக்க வேண்டுமென்று வேதாந்தம் புகட்டுகிறது. தனக்குப் புறத்திலே வெகு தூரத்தில் உள்ள ஒரு தெய்வத்தின்மீது நம்பிக்கை வைக்காதவன் நாஸ்திகன் என்று உலகில் உள்ள சில மதங்கள் புகட்டி வருகின்றன. ஆனால் வேதாந்தம் புகட்டும் கோட்பாடு அத்தகையதன்று. தான் உடல் அன்று; உடலை அணிந்திருக்கும் ஆத்மா தான் என்று நம்பாதவனே நாஸ்திகன் என வேதாந்தம் புகட்டுகிறது. மஹிமை அனைத்தும் வாய்க்கப் பெற்றுள்ள ஆத்மாவில் நம்பிக்கை வைக்காதவனே நாஸ்திகன் என்று வேதாந்தம் போதிக்கிறது. தத்துவ விசாரம் செய்யாத பலர்க்கு இக்கோட்பாடானது பயங்கரமானது. தான் ஆத்மா என்று அனுபூதியில் அறிவது ஆகாத காரியம் என்று பலர் எண்ணுகின்றனர். ஆனால் மக்கள் யாவரும் ஆத்ம ஞானத்தைப் பெறலாம் என்று வேதாந்தம் வற்புறுத்துகிறது. இது விஷயத்தில் ஆண் பெண் என்கிற வேற்றுமையில்லை; சிறுவன் சிறுமி என்கிற வேற்றுமையும் இல்லை; ஜாதிவேற்றுமைக்கும் இதில் இடமில்லை; மக்களாகப் பிறந்துள்ள அனைவரும் இவ்வுண்மையை அறிந்துகொள்ளலாம். யாருக்கும் எவ்விதப் பிரதிபந்தமும் கிடையாது. ஏனென்றால் ஏற்கனவே பலபேர் இதை அனுபவபூர்வமாக அறிந்திருக்கின்றனர்; அனைவர்க்கும் சொந்தமாக இது யாண்டும் நிலைத்துள்ளது என்கிறது வேதாந்தம்.

பிரம்மாண்டத்திலுள்ள சக்தி யனைத்தும் யாண்டும் நமக்குச் சொந்தமானது. கண்களைக் கைகளால் பொத்திக் கொண்டு இருள் சூழ்ந்து கிடக்கிறதென்று கூக்குரலிடுபவர் நாமே. உண்மையில் நம்மைச் சுற்றிலும் இருள் இல்லை என்பதை நாம் அறிதல் வேண்டும். மறைத்துக்கொண்டிருக்கும் கைகளை அப்புறப்படுத்தினால் என்றென்றுமுள்ள

வெளிச்சத்தைக் காண்போம். இருள் ஒருக்காலும் இருந்த தில்லை; பலவீனம் என்னும் நோய் ஒருநாளும் இருந்ததில்லை. அறிவிலிகளாகிய நாம் நம்மைப் பலவீனர் என்று புலம்பு கிறோம்; அறிவிலிகளாகிய நாம் நம்மைப் புனிதமற்றவர் என்று புலம்புகிறோம். இங்ஙனம் இவ்வுயர்ந்த லட்சியமா னது முற்றிலும் அனுஷ்டானத்துக்குரியது என்று வேதாந் தம் வற்புறுத்துகிறது. காலமெல்லாம் இது அனுஷ்டிக்கப் பட்டு வந்துள்ளது என்றும் அது இயம்புகிறது. பெரு நிலையாகிய மெய்ப்பொருளே நமது சொந்த சொரூபம் என் றும் வேதாந்தம் விளம்புகிறது. மெய்ப்பொருளுக்கு அன் னியமாக நீ காண்பதெல்லாம் மித்தை, பொய்யானது. 'நான் ஓர் அற்ப ஜீவன், இறந்துபட்டுப்போபவன்' என்று நீ கூறும்போதெல்லாம் நீ பொய் பேசுகிறாய்; உன்னை நீ ஏமாற்றிக்கொள்கிறாய்; இழிவுபட்டு, வலிவற்ற, கடை கெட்ட பான்மையை மதிமயக்கத்தால் உனக்கு நீ உண்டு பண்ணிக் கொள்கிறாய்.

பாபம் என்பதை வேதாந்தம் அங்கீகரிக்கிறதில்லை; மனிதன் தவறுதல் செய்துவிடுகிறான் என்பதை அங்கீகரிக் கிறது. தவறுதல்கள் எல்லாவற்றிலும் மிகப்பெரிய தவறு தல் எது என்பதையும் வேதாந்தம் விளக்குகிறது. நீ வலி வற்றவன், நீ பாபி, துன்பமே வடிவெடுத்தவன், உன்னிடம் சக்தியொன்றுமில்லை, நீ இதைச் செய்ய முடியாது, அதைச் செய்ய முடியாது— இப்படியெல்லாம் பகர்வதுதான் பெருங் குற்றம். ஏனென்றால் இப்படி நினைக்கின்ற போதெல்லாம் ஏற்கனவே உன்னைப் பந்தப்படுத்துகிற சங்கிலியில் இன்னு மொரு வளையத்தை இணைத்து ஒட்டிவிடுகிறாய். உன் ஆத்ம சொரூபத்தை மூடிக்கொண்டிருக்கும் மாயை என் னும் ஆவரணத்தின்மீது இன்னுமொரு படலத்தைப்

போடுகிறுய். எனவே, எவன் ஒருவன் தன்னைப் பலவீன ஞக எண்ணிக் கொள்கிருனே அவன் தவறு செய்கிருன். எவன் ஒருவன் தன்னைத் தூய்மையற்றவன் என்று எண்ணிக்கொள்கிருனே அவன் தவறு செய்கிருன். மேலும் உலகத்தினுள் கெட்ட எண்ணத்தை அவன் சொரிந்தவன் ஆகிருன். இப்பொழுது நாம் கடைப்பிடிப்பது மயக்கம் பூண்ட வாழ்வு, பொய்யான வாழ்வு. மாயப்பிரபஞ்சவாழ்வு என்பது இதுவே. ஆதர்ச ஜீவிதமாகிய பாரமார்த்திகப் பெருவாழ்வுடன் இத்தகைய மித்யா ஜீவனத்தை சமரசப் படுத்துவது வேதாந்தத்தின் கோட்பாடு அன்று. பொய் யான இவ்வாழ்வு ஒழிந்துபட்டுப் போகவேண்டும். என் றென்றும் நிலைத்திருக்கும் பாரமார்த்திகப் பெருவாழ்வே உருப்படவேண்டும்; அதுவே ஒளிரவும் வேண்டும். தூய்மை என்பது தனக்குச் சொந்தமல்லாததாயிருந்து, மனிதன் அதைப் படிப்படியாகப் பெறுகிருன் என்பது உண்மையல்ல. ஒளிர்விடும் தன்மை பொன் முதலிய உலோகத்தில் இருப்பது போன்று, தூய்மை, பூரண சுத்தநிலை—யாண்டும் ஆத்மா வினிடத்துள்ளது. அதை மேலும் மேலும் வியாபகப் படுத்துவது, அதாவது தோற்றத்துக்குக் கொண்டுவருவது ஞானவாழ்வாகும். ஆவரணம் என்று சொல்லப்படுகிற திரை நீங்குகிறது; அதனல் ஆத்மாவின்கண் இயல்பாயுள்ள தூய்மை தானுகத் தோன்ற ஆரம்பிக்கிறது. எல்லை காணுத தூய்மை, முக்திநிலை, பேரன்பு, பேராற்றல் இவை யாவும் யாண்டும் நமக்குச் சொந்தமானவைகளாம்.

வனந்தரங்களிலும் மலைக்குகைகளிலும் வசிப்பவர்களா லேயேதான் இந்த லட்சியம் அடையப்பெறும் என்று வேதாந்தம் புகட்டுகிறதில்லை; வாழ்க்கையில் அவரவர்க் குகந்த எல்லாவிதமான நிலையில் இருப்பவர்களாலும் இது

அடையப்படும். வேதாந்த தத்துவங்களைக் கண்டறிந்த சான்றோர் வனங்களிலும் குகைகளிலும் வசித்தவர்கள் அல்லர் என்பதை ஏற்கனவே நாம் ஆராய்ந்திருக்கிறோம். அவர்கள் ஜீவிதத்தில் சர்வ சாதாரணமான தொழில் புரிந்த வர்களும் அல்லர். வாழ்விலே பேரியக்கங்கள் பல தொடுத் திருந்த பேரரசர்களே இக் கோட்பாடுகளைக் காணலாயினர் என்று நாம் யூகிக்க இடமிருக்கிறது. சேனைகளைச் சமர்க் களத்திலே செலுத்தியவர்களும், சிம்மாசனத்திலே வீற்றி ருந்து செங்கோல் பிடித்தவர்கள், கோடிக்கணக்கான குடி களின் நலன் கோலினவர்களுமே வேதாந்தத்தை அனுஷ் டித்திருக்கின்றனர். இவ்வேந்தர்களைப் பற்றிய மற்றோர் உண்மையையும் நாம் கருத்தில் கொள்ளுதல் வேண்டும். பெயரளவில் அரசன் என்று ஒருவனைப் பிடித்து உட்கார வைத்துவிட்டு அதிகாரங்களையெல்லாம் மற்றவர் கைப் பற்றிக்கொண்டிருக்கும் இக்காலத்திய நிலையைப் போன்ற தன்று அப்பண்டைக் காலத்தின் நிலை. பூரண அதிகாரத் துடன் அரசர் ஆணை செலுத்திய அக்காலத்தில்தான் அதே அரசர்களிடமிருந்து இவ்வேதாந்தக் கோட்பாடுகள் வெளியே வருவனவாயின. நானுவிதமான அலுவல்களுக் கிடையிலே இவ்வுயர்ந்த கோட்பாடுகளைப்பற்றிச் சிந்திக்க வும் சுவானுபூதியில் அவைகளை உணரவும் மற்ற மாந்தர்க்கு அவைகளை எடுத்துப் புகட்டவும் அன்னவர்க்கு இயன்றது. அப்பேரரசர்கள் வாழ்க்கையுடன் சீர்தூக்கிப் பார்த்தால் நமது வாழ்வு ஓய்வு மிக அமையப்பெற்றது என்று சொல்ல வேண்டும். அத்தகையவர்களாகிய நமக்கு வேதாந்தத்தை அனுஷ்டானத்தில் கொண்டுவருவது இன்னும் மிக எளிது ஆகவேண்டும். ஆற்றுதற்கு அலுவல் அதிகம் இல்லாது காலமெல்லாம் பெரிதும் நிம்மதியாயிருக்கிற நாம் அவ்

வேதாந்தக் கோட்பாடுகளை அனுபவபூர்வம் ஆக்காவிட்டால் நமக்கு அது வெட்ககரமானதாகும். ஆதிக்கம் படைத்த பண்டைக் காலத்துப் பேரரசன் ஒருவனுடைய தேவைகளோடு சீர்தூக்கிப் பார்த்தால் நமது தேவைகள் மிக அற்பமானவைகளாம். மண்ணுலக வாழ்க்கை சம்பந்தமான தேவைகள் பல நமக்கு இருப்பதால் வேதாந்த விசாரம் செய்ய நமக்கு அவகாசமில்லை என்கிறோம். ஆனால் குருக்ஷேத்திரப் போர்க்களத்தில் பல அக்ஷௌஹிணி வடிவாகிய படைகள்மீது ஆணை செலுத்திய அர்ஜுனனுடைய தேவைகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நமது தேவைகள் எம்மாத்திரம்! எனினும் அமர்க்களத்தின் கோலாகலத்தினுள் ஆத்ம தத்துவ விசாரம் செய்யவும், அப்படி விசாரித்தறிந்த உண்மைகளைத் தன் வாழ்விலே காரியப்படுத்திக் கொள்ளவும் அக்கோமகனுக்குக் காலம் கிடைத்தது. அவ்வரசனுடைய வாழ்வைவிட அதிக நிம்மதியானதும், சௌகரியமானதும், வசதிகள் நிறைந்ததுமாகிய நமது வாழ்விலே நிச்சயமாக நாமும் அவ்வளவு சாதித்தாகவேண்டும். நாம் நினைத்துக்கொண்டிருப்பதைவிட அதிக நேரம் நம் ஒவ்வொருவர் கைவசத்திலும் உளது. அந்த நேரத்தை நல்ல காரியத்துக்குப் பயன்படுத்தவேண்டும் என்ற உண்மையான அவாமட்டும் நமக்கு இருந்தால் போதுமானது. நம் கைவசமுள்ள அவகாசத்தைக்கொண்டு நாம் ஏதோ ஒரு லட்சியத்தை மட்டுமல்ல, விரும்பினல் இருநூறு லட்சியங்களை இந்த ஜீவிதத்திலேயே நிறைவேற்றி வைத்துவிடலாம். ஆனல் உயர்ந்த லட்சியத்தை நம்முடைய சாமானியமான கீழ்நிலைக்கு இழுத்துவிடலாகாது. வீண் சாக்குச் சொல்லுதல் நமது வாழ்வில் உள்ள பெருங் குற்றங்களில் ஒன்றாகும். மடைமை நிறைந்த தேவைகளை, மடைமை நிறைந்த ஆசைகளை நமக்கு நாமே வீணில் உண்டுபண்ணிக்

கொள்கிறோம். பயனற்ற அவ்வாசைகளையும் குறைபாடுகளை யும் களைந்துவிட நம்மால் இயலாது என்ற மயக்கத்துக்கும் பிறகு நாம் ஆளாகிவிடுகிறோம். ஆசாபாசத்துக்கு அடிமைப் பட்டுள்ளவர்கள் எதை லட்சியமாகக் கொள்கிறார்களோ அதுதான் பாராட்டத்தக்க லட்சியம் என்று நமக்கு நாம் சமாதானம் தேடிக்கொள்கிறோம். மனத்தகத்துப் புதைந்து கிடக்கும் வாசனைகளே வாழ்வின் குறிக்கோள் என்னும் பெயர் பெற்று விடுகின்றன. அத்தகைய மதிமயக்கம் கொள்ளலாகாது. வேதாந்தம் புகட்டுகின்ற கோட்பாடு அதுவன்று. கண்கூடாயுள்ள நமது கீழ்த்தரமான வாழ்வை ஆதர்சத்துக்கேற்ற நல்வாழ்வாக மாற்றவேண்டும். இப் பொழுது நாம் வாழ்ந்துவரும் சிறுவாழ்வை நித்தியமான பெருவாழ்வாக மாற்றவேண்டும்.

அகண்டமாய் உள்ளது ஒன்று என்ற நடுநாயகமான கருத்தையே யாண்டும் வேதாந்தம் புகட்டுகிறது என்பதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண் டும். எதனிடத்தும் இரண்டு வஸ்துக்கள் என்பன இல்லை. வாழ்வு என்பதில் இரண்டுவிதமான வாழ்வுகள் இல்லை. இரண்டு விதமான உலகங்கள் என்பதும், அந்தந்த உலகத் துக்கேற்ற தனி வாழ்வு என்பதும் கிடையாது. சுவர்க்கம் போன்ற பதவிகளைப்பற்றி முதலில் வேதம் விசேஷமாய்ப் பகர்கிறது. பிறகு உயர்ந்த தத்துவதர்சனம் போன்ற விஷ யங்களுக்கு வரும்பொழுது இக்கொள்கைகளை யெல்லாம் வேதம் தூர ஒதுக்கிவைத்துவிடுகிறது. ஜீவித்திருப்பது என்பது யாண்டும் ஒன்று. வியாபகமாயுள்ள ஜகத் என் பது யாண்டும் ஒன்று. யாண்டும் இருப்பது ஒன்று. அனைத்துமாய்க் காட்சி கொடுப்பது அந்த ஒருபொருளே. அப்பொருளின் பரிமாணத்தில் வேற்றுமையுண்டு. ஆனல்

அதன் பிரகாரத்தில் வேற்றுமையில்லை. இதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஸ்தாவரம் என்பதும் உயிர், ஜங்கமம் என்பதும் உயிர். ஒன்று நிலைத் திணை, மற்றொன்று இயங்குதிணை. ஸ்தாவரத்தில் உயிர் கீழ்நிலையில் இருக்கிறது. ஜங்கமத்தில் மேலானதாகப் பரிமாணித்திருக்கிறது. பின்பு ஒன்றை உயிர் என்றும் மற்றதை உயிர்க்கு அன்னியமானதென்றும் சொல்லலாகாது. பிரகாரம் அல்லது தன்மையில் ஒன்று. பரிமாணம் அல்லது தோற்றத்தில் வேறுபட்டது. விதவிதமான உயிர்களுக் கிடையில் உயிர்த்தன்மையில் வேற்றுமையில்லை. பிரகாரத் தில் பேதமில்லையென்று பரிபாஷையில் சொல்லப்படுகிறது. உயிர்த்தன்மையில் விலங்குகள் வேறானவை என்றும் மக்கள் வேறானவர் என்றும் வேதாந்தம் ஒருபொழுதும் ஏற்றுக் கொள்ளாது. ஆடுமாடுகளுக்கு ஆத்மா இல்லையென்றும் மனிதனுடைய உணவுக்காகக் கடவுளால் அவைகள் படைக் கப்பட்டவையென்றும் சில மதவாதிகள் கூறுகின்றனர். பொருந்தாத இக்கொள்கையை வேதாந்தம் ஏற்றுக்கொள்வ தில்லை.

உயிர்கள் அனைத்தும் அகண்ட சத் சொரூபத்தில் அடங்கியிருக்கின்றன. கேடு அடையாது மானுட ஜீவிதம் என்றென்றும் நித்தியமாயிருக்கிறதென்றால், மற்ற சிற்றுயிர் களின் ஜீவிதமும் அத்தகையதேயாம். பேருயிர் சிற்றுயிர் என்ற பாகுபாடு அந்தந்த உயிர் அடைந்துள்ள பரிபாகத்தை அடிப்படையாகக்கொண்டதாம். உயிர்த்தத்துவம் என்ற கோட்பாட்டில் பேருயிருக்கும் சிற்றுயிர்க்கும் வேற்றுமை யில்லை. ஓர் அற்ப ஜீவ அணுவும், உயர்நிலையெய்துள்ள மனிதனும் உயிர் தத்துவத்தில் சம அந்தஸ்துப் பெறுகிறார் கள். இவ்விரண்டினுள் ஜீவ அணு ஒடுங்கிய நிலையில்

இருக்கிறது, மனிதன் ஓங்கிய நிலையில் இருக்கிறான். பின்பு உயிர்த்தத்துவத்தின் உயர் நிலையில் வைத்துக் காணுமிடத்து ஜீவ அணுவுக்கும் மானுட ஜீவிதத்துக்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. மலையடிவாரத்தில் சமதரையில் நின்றுகொண்டு பார்த்தால் பாதத்தில் மிதியுண்டு கிடக்கும் புல்லுக்கும் வானுற வளர்ந்துள்ள மரத்துக்கும் ஏராளமான வித்தியாசமிருக்கிறது. ஆனால் மலையுச்சிக்குச்சென்று கீழ் நோக்கிப்பார்த்தால் மரமும் புல்லும் ஒரேவிதமான காட்சி கொடுக்கின்றன. அதேபாங்கில் பாரமார்த்திகப் பெருநிலையினின்று காணுங்கால், மிகக் கீழ்நிலையில் உள்ள விலங்கும் மிகஉயர்நிலையில் உள்ள மனிதனும் சமநிலை பெறுவதுவிளங்கும். கடவுள் நம்பிக்கை வைத்திருக்கிற ஒரு மனிதனுக்குச் சிற்றுயிர் பேருயிர் என்கிற பேதமில்லாது எல்லாஉயிர்களும் ஒரேபாங்கில் புலப்படவேண்டும். ஈசுவர சிருஷ்டியில் உள்ள உயிர் வகைகளுள் மானுடர் என்னும் உயிர்களிடத்து அன்புள்ளவனாகவும், விலங்கு இனம் என்னும் உயிர்களிடத்து அன்பில்லாதவனாகவும், ஈசுவரன் இருப்பானாகில் அவன் அரக்கனைவிடக்கொடியவன் ஆவான். அத்தகைய இயல்புடைய தெய்வத்தை வணங்குவதைவிட நாம் பலதடவை மாண்டொழிவது மேலானது. வணங்குதற்குப் பதிலாக வாழ்நாள் முழுதிலும் அத்தகைய தெய்வத்தோடு போராடுவது மேல். ஆனால் உண்மையில் ஈசுவரன் உயிர் வகைகளுள் பக்ஷபாதம் வைப்பவன் அல்லன். சில உயிர்களை ஈசுவரன் பாராட்டுகிறான், மற்றவைகளை வெறுக்கிறான் என்று இயம்புபவர் பொறுப்பற்றுப் பேசுகின்றனர். அத்தகைய மாந்தரே உள்ளன்பில்லாத அறிவிலிகள் ஆகின்றனர். இது மனிதனுக்கு சாத்தியப்படக் கூடியதா என்ற கூற்றைத் தவறுதலாகக் கையாளுதற்கு மற்றொரு சான்றை ஈண்டு எடுத்துக்கொள்

வோம். மாமிச உணவை உண்பது மனிதனுக்கு உயர்ந்த லட்சியமல்ல. மாமிச உணவை விலக்கி வைப்பதே உயர்ந்த லட்சியமாகும். அவ்வுணவை உண்பவன் அதில் குற்ற மொன்றுமில்லை யென்று லட்சியத்தைக் கீழ்நிலைக்குக் கொண்டுவரலாகாது. தான் செய்கிற குற்றத்தைக் குற்ற மென்று ஏற்றுக்கொள்ளுதல் மேல். அதைக் குணமென்று கருதி மாமிசம் சாப்பிடுதல் பொருந்தாது. ஊன் உண்ணா திருப்பது, உயிருக்கு இன்னா செய்யாதிருப்பது உயர்ந்த லட்சியமாகும். ஏனென்றால் விலங்கு இனமும் மனிதனுக்கு உற்ற உறவு ஆகின்றது. மானுடரை மட்டும் தனக்கு உற்றார் என்று கருதினால் போதாது. விலங்கு இனத்தையும் தனக்குச் சொந்தம் என்று கருதுகிற மனிதன் சர்வஜீவ சகோதரத்துவத்தில் இன்னும் ஒருபடி மேலே போனவன் ஆகிறான். மனிதர்களிடத்தில் மட்டும் சகோதரபான்மை காட்டினால் போதும் என்று சொல்லுவது சிறு பிள்ளைத்தனமாகும். மற்று எல்லா உயிர்களிடத்திலும் அன்பாயிருக்கவேண்டும் என்றால் அது சாத்தியப்படுமா என்று பலர் ஆக்ஷேபிக்கின்றனர். ஆக, சாத்தியப்படுதல் என்பதும் அவரவர் பரிபக்குவத்துக்கு ஏற்றதாயிருக்கிறது.

பழக்கத்தில் வந்துள்ளதையே விடாது பற்றிப்பிடித் தல் என்னும் பாங்கு மானுட இயல்பில் ஊறிக்கிடக்கிறது. புதிய வாழ்க்கை முறையில் ஒருபடி மேல்நோக்கிச் செல்ல மனிதனுக்கு விருப்பம் உண்டாவதில்லை. உறைபனியின் மீது படுத்துறங்க விரும்புபவர்களோடு மானுட வர்க்கத்தை ஒப்பிடலாம். பனிக்கட்டியின்மீது ஒரு சாரார் படுத்துறங் கப்போகின்றனர். அப்படிச் செய்யவேண்டாம் என்று அவர் கள் கையைப்பிடித்து இழுத்தால் அவர்கள் இணங்கி வர மாட்டார்கள். உறைபனியின்மீது படுத்துறங்குவது இன்பம்

நிறைந்தது என்று அவர்கள் அதையே நாடிச் செல்கின்ற னர்; இன்புற்றுப் படுத்துத் தூங்குகின்றனர். பின்பு விழிப்பு அறியாத பெருந்தூக்கத்தில் மூழ்கி விடுகின்றனர்; மரணத்தில் ஒடுங்கிவிடுகின்றனர். மண்ணுலகிலுள்ள மாந் தர்களின் பாங்கு அத்தகையது. ஏதேனும் ஒரு பழக்க வழக்கத்தில் அவர்கள் பற்று வைக்கின்றனர். பின்பு அதை விட்டொழித்துவிட்டுப் புதிய வாழ்க்கை முறைக்குப்போக அவர்களுக்கு இயல்வதில்லை. பிரியமாகப் பனிக்கட்டியின் மீது படுத்து மாண்டுபோனவர் போன்று பிரியமாகப் பழக்க வழக்கத்தில் அகப்பட்டுக்கொண்டு, புதிய வாழ்க்கை முறைக்குப் போகமுடியாது மாண்டவர் போன்று ஆய்விடு கின்றனர். மானுட இயல்பு அத்தகையதாயிருக்கிறது. அடி யிலிருந்து முடிவரையில் சீதம் ஏறிக்கொண்டிருக்கிறது. பனிக்கட்டியின்மீது படுத்துக் கிடப்பவன் போன்று கண் வளரவேண்டும் என்பது அவர்களது விருப்பம். அத்தகைய புல்லிய வாழ்வைப் புறக்கணித்துவிட்டு மேலாம் நிலைக்குப் போக முயலவேண்டும். மனிதனை மேலாம் நிலைக்கு எடுத் துச் செல்லுதற்குப் பதிலாகக் கீழான இந்திரிய விஷய வாழ்க்கையில் இருக்கிறபடி ஆத்ம ஞானத்தைப்பெறலாம் என்று எவரேனும் புகட்டவந்தால் அம்மனிதனது போத னைக்குச் செவி சாய்க்கலாகாது. பொறி புலன்களில் கட் டுண்டு கிடக்கிறபடியே ஆத்ம ஞானத்தையும் பெறலாம் என்பது சாத்தியப்படாதது. புகட்டுபவர் யாராயிருந்தாலும் புகட்டப்படுகிற பொருள் உன்னதமான ஆத்ம ஞான விஷய மாயிருந்தால் அதை ஏற்றுக் கொள்ளலாம். இந்திரியார்த் தப் பகட்டுகளுக்கு வசப்பட்டு, இந்திரியார்த்தப் புல்லிய சுக ஜீவனத்துக்கு அடிமைப்பட்டுக் கிடக்கும் மாந்தர் அதைக்குறித்து ஏதேனும் சாக்குப் போக்குச் சொல்வார்

களானால் அம்மனிதர்களைப்பற்றி மிக எச்சரிக்கையாயிருக்க வேண்டும். இந்திரிய வசப்பட்டு மண்ணுக்கு இரையாகும் உடல் வாழ்க்கையில் தளைக்கப்பட்டுக்கிடக்கும் நாம் மேலும் பொறிவழியிலே போனால் சிறிதும் முன்னேற்றமடையமாட்டோம். கோடையிலே புடைத்துவரும் காளான் போன்று போலிச் சமயங்கள் பல நம் நாட்டில் அடிக்கடி தோன்றுவதுண்டு. அவைகளுக்கிடையில் நிலைபெறும் சமயங்கள் எவை, அழிந்து பட்டுப்போம் சமயங்கள் எவை என்பதை நாம் நிர்ணயித்துவிடலாம். போகம் வேறு, யோகம் வேறு என்று எடுத்துக்காட்டி எந்த இயக்கம் யோகத்தைக் கடைப்பிடிக்கிறதோ அதுவே முன்னேற்றமடையவல்லதாகிறது. புனிதம் வாய்ந்த தெய்விக வாழ்க்கையைப் புன்மை வாய்ந்த மானுட வாழ்க்கையின் நிலைக்கு இழுக்க எந்த இயக்கம் முயலுகிறதோ ஆங்கு க்ஷீணதசை யுண்டாகிறது. மனிதனை மண்ணுலக வாழ்வில் அடிமைப்படுத்தலாகாது, தெய்விகப் பெருநிலைக்கு உயர்த்தவேண்டும்.

வாழ்க்கையில் முன்னேற்றம் அடைதலை யொட்டிய கேள்வியில் இனி இன்னொரு பகுதி யிருக்கிறது. மற்றவர்களை அலட்சிய பாவனையுடன் நாம் நோக்கலாகாது. ஒரே குறிக்கோளை நோக்கி நாம் அனைவரும் போய்க்கொண்டிருக்கிறோம். பலமின்மை என்பதற்கும் பலமுடைமை என்பதற்கும் வித்தியாசம் வெறும் பரிமாணத்தில்தான் உளது. அதாவது பலம் சற்றுக் குறைந்துவிட்டால் அது பல வீனம் எனப்படுகிறது. சற்று ஏறிவிட்டால் பலமுடைமை எனப்படுகிறது. இருள் என்பதற்கும் வெளிச்சம் என்பதற்கும் இடையில் உள்ள வேற்றுமை வெறும் பரிமாணத்திலேயாம். ஏனென்றால் குறைந்த வெளிச்சத்தைத்தான் இருள் என்கிறோம். புண்ணியம் பாபம் ஆகிய இவ்விரண்டுக்கு

மிடையில் உள்ள வேற்றுமை பரிமாணத்திலேதான். வினையும் நன்மையினுடைய ஏற்றத்தாழ்வை முன்னிட்டு ஒரு செயலைப் புண்ணியம் என்றோ பாபம் என்றோ பகர்கிறோம். சுவர்க்கம் நரகம் என்பனவற்றுள் உள்ள வித்தியாசம் பரிமாணத்திலேயே எனலாம். இன்பத்தையோ துன்பத்தையோ உணரும் உணர்ச்சியின் வேகத்தை முன்னிட்டு ஒரு கதிக்கு சுவர்க்கம் அல்லது நரகம் என்னும் பெயர் கொடுக்கப்படுகிறது. ஒருவனுக்கு சுவர்க்கமாகத் தென்படும் குளிர்ப் பிரதேசம் இன்னொருவனுக்கு நரகமாகத் தென்படலாம். ஜீவிதம் மரணம் இவைகளுக்கிடையில் உள்ள பேதம் பரிமாணத்தளவிலே என்பது வெளிப்படை. வீரன் ஒருவன் மகிழ்வுடன் மரணத்தை ஏற்றுக்கொள்வான். ஆனால் புல்லிய அடிமை வாழ்க்கை அவனுக்கு மரணத்திலும் கொடியது. லௌகிக வாழ்வை மாந்தர் விரும்புகின்றனர். பக்தனோ கடவுளை மறந்தால் மாய்ந்தொழிவேன் என்கிறான். இங்ஙனம் உலகில் நாம் காணும் வேற்றுமை யனைத்தும் பரிமாணம் அல்லது அளவையின் தாரதம்மியத்தில் இருக்கிறதேயொழிய பிரகாரம் அல்லது தன்மையில் இல்லை. பிரபஞ்சத்தின்கண் அகண்டமாய் இருப்பது ஒரு வஸ்து; பரிமாண பேதத்தால் பல வஸ்துப்போன்று அது தென்படுகிறது. ஜடப்பொருளாக, சிந்தனைமயமாக, உயிர்மயமாக, ஆத்ம சொரூபமாக இருப்பதெல்லாம் ஒரு பொருளே. பரிமாணத்தின் தாரதம்மியத்தால் பலவாக அது காட்சி கொடுக்கிறது. ஆகவே நாம் முன்னேற்றம் அடைந்திருக்குமளவு இன்னும் முன்னேற்றமடையாதிருக்கும் மற்றவர்களை அலட்சியப்படுத்துவது முறையன்று. யாரையும் அவதூறு கூறாதே. கைகொடுத்து உதவிபுரிய முடிந்தால் அங்ஙனம் செய். அது உனக்கு இயலாவிட்டால் கைகூப்பி அயலாரை வணங்கித்

தமக்கேற்ற வழியிலே அவர்களைச் செல்ல விட்டுவிடு. கீழ்மைப்படுத்துவதும் அவதூறு கூறுவதும் அறத்தாறு ஆகா. நல்வினையாற்றுபவனுக்கு அப்பான்மை ஒவ்வாது. அங்ஙனம் நலம் எதையும் சாதிக்கமுடியாது. பிறரைக் குறைகூறுவதில் நமது ஆற்றலை வீண் செலவு செய்கிறோம். தாழவுரைப்பதும் திட்டுவதும் நம் சக்தியை வீண் விரயம் செய்வதாய் முடியும். ஏனென்றால் எல்லாரும் ஒரே நோக்குடையவர்களா யிருக்கிறார்கள் என்பதும், சற்று ஏறத்தாழ எல்லாரும் ஒரே லட்சியத்தைத்தான் நாடுகிறார்கள் என்பதும் நாளடைவில் நமக்கு நன்கு புலப்படும். எல்லார்க்கும் குறிக்கோள் ஒன்று எனினும் அதற்கு விளக்கம்தரும் விதத்திலேயே வேற்றுமையுளது என்பதும் நமக்கு அப்பொழுது விளங்கும்.

பாபம் என்பதைப்பற்றிய கருத்தை அதற்குச் சான்றாக எடுத்துக்கொள்வோம். வேதாந்த சாஸ்திரம் பாபத்தை எங்ஙனம் பொருள்படுத்துகிறது என்பது இப்பொழுது எடுத்தோதப்பட்டது. மனிதன் பாபி என்பது வேதாந்த சாஸ்திரத்துக்கு அன்னியமான கொள்கையாகும். ஆயினும் இரண்டு கொள்கைகளும் கிட்டத்தட்ட ஒன்றேயாம். ஒன்று 'ஆம்' என்று உடன்பாட்டில் சொல்லுகிறது, மற்றது 'இல்லை' யென்று எதிர்மறையில் சொல்லுகிறது. ஒன்று மனிதனுக்கு அவனுடைய வல்லமையை எடுத்துக்காட்டி அவன் அதில் நிலைபேறு அடையலாம் என்கிறது. மற்றது மனிதனுக்கு உற்ற தளர்வை எடுத்துக் காட்டுவதோடு நின்றுவிடுகிறது. தாற்காலிகமாகத் தளர்வு உண்டாயிருக்கலாம்; ஆயினும் அதைப் பொருள்படுத்தாதே; நாம் வலிவு பெற்று வளரவேண்டும் என்கிறது வேதாந்தம். மனிதன் பிறப்பெடுத்த சிறிது காலத்துக்குள் பிணி இருப்

பதை அவன் கண்டுகொண்டான். தன்னைப் பிடித்துள்ள பிணி யாதென்பதை ஒவ்வொருவனும் அறிகிறான். நமக்கு உற்ற நோய்கள் எவை என்பதை எடுத்துக்காட்ட வேறு யாரும் தேவையில்லை. ஆனால் நோய்வாய்ப்பட்டிருக்கிறோம் என்று காலமெல்லாம் நினைத்துக்கொண்டிருப்பதால் நாம் நோயைக் களைய முடியாது. அதற்கு ஏற்ற ஔஷதத்தை ஏலவேண்டும். நம்மைப் பிடித்துள்ள நோய் இன்னதென்று மற்றவர் யாருக்கும் சொல்லாது மறைத்துவைக்க நமக்கு இயலும். நம்மிடத்துக் கேடு ஒன்றுமில்லையென்று புறவுலகுக்கு நாம் பாசாங்கு பண்ணிக் காட்டவும் முடியும். ஆனால் நெஞ்சையொளித்து ஒரு வஞ்சகமில்லை. நம்மிடத்துள்ள குறைபாடுகளை நாம் நன்கு அறிகிறோம். நம்மிடமுள்ள குற்றம் இன்னதென்று முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு அக்குற்றத்தைப்பற்றியே ஓயாது நினைத்துக்கொண்டிருக்கலாகாது. குறைபாடுகளையே கவனத்தில் வைத்துக் கொண்டிருப்பதில் பயனொன்றுமில்லை என்கிறது வேதாந்தம். ரோகத்தைப்பற்றி ஓயாது நினைப்பதால் ஆரோக்கியம் வருகிறதில்லை. பலஹீனத்தைப்பற்றி ஓயாது நினைப்பதால் பலம் வருகிறதில்லை. மனத்தகத்து மனிதன் உறுதிபெற வேண்டும். பலம் உண்டு பண்ணுகிற எண்ணங்களையே உள்ளத்தில் ஊட்டவேண்டும். மனிதனை விட்டு அகலாது மனத்தகத்து மறைந்திருக்கும் ஆத்ம சக்தியைப்பற்றியே யாண்டும் அவனுக்கு ஞாபகமூட்டவேண்டும். பாபி என்று மனிதனுக்கு மொழிதற்குப் பதிலாக அதற்கு நேர்மாறான உபாயத்தை வேதாந்தம் புகட்டுகிறது. "மானுடா, நீ தூய்மையே வடிவெடுத்தவன். பரிபூரணத் தன்மை உன்னிடத்திலிருக்கிறது. பாபம் என்பது ஒருநாளும் உனக்குச் சொந்தமல்ல." இங்ஙனம் நமது நிஜசொருபத்தை வேதாந்தம்

நமக்கு ஞாபகப்படுத்துகிறது. பாபம் எனப்படுபவைகள் ஆத்ம பிரகாசத்தை மிகக்கீழான நிலையில் வைப்பன வாகின்றன. ஆத்ம பிரகாசத்தை மேலும் மேலும் ஓங்கச் செய்வது உன் கடமை. யாண்டும் நாம் ஞாபகத்தில் வைக்கவேண்டிய விஷயம் ஒன்று உண்டு. அப்படி ஞாப கத்தில் வைக்கவும் நமக்கு இயலும். "இல்லை" என்றோ "என்னால் இயலாது" என்றோ எதிர்மறையில் ஒருநாளும் பகராதே. ஏனென்றால் அனந்த சக்தி உன்னிடத்துண்டு. உனது பேரியல்போடு சீர்தூக்கிப் பார்க்குமிடத்து கால தேசம் என்பன பொருளற்றவைகளாய்ப் போய்விடுகின்றன. எண்ணியதை எண்ணியாங்கு நீ செய்துமுடிக்க வல்லவன்; ஏனென்றால் நீ சர்வ சக்திமான்.

இதுவரையில் நாம் பகர்ந்தது நல்வாழ்வுக்குரிய அடிப் படைக் கோட்பாடுகளாகும். நமக்குச் சாதாரணமாயமைந் துள்ள தினசரி வாழ்க்கையின் ஒவ்வொரு படித்தரத்திலும் இக்கோட்பாடுகளை நாம் எப்படிப் பழக்கத்துக்குக்கொண்டு வர முடியும் என்று இனி ஆராய்வோம். நகரத்துக்குரிய வாழ்வு, நாட்டுப்புறத்துக்குரிய வாழ்வு, சமுதாயத்துக் குரிய வாழ்வு, குடும்பத்துக்குரிய வாழ்வு ஆகிய இத்தனை வித வாழ்வும் ஒவ்வொரு தேசத்தவர்க்கும் உண்டு. ஏனென் றால் மனிதன் எத்துறையிலே எத்தகைய வாழ்க்கை வாழ்ந்து வந்தாலும் அந்நிலையிலே அவனுக்கு சமய அனுஷ்டானம் உதவிபுரியக்கூடியதாயிருக்குமானால் அதில் பயனுண்டு. அப் படியல்லாவிட்டால் யாரோ சிலருக்கு வெறும் வாக்கு வாதத் துக்கு உரியதாக அது போய்விடும். ஏட்டுச்சுரைக்காய் கறிக்கு உதவாத கோட்பாட்டில் அது வந்து நின்றுவிடும். எத்தகைய நிலையில் மனிதன் இருந்தாலும் அவனுக்குக் கை கொடுத்து உதவும் பாங்கு வேதாந்தத்துக்கு இருக்க

வேண்டும். அடிமைப்பட்டுக் கிடப்பவனுக்கும், சுதந்தரத்தில் இருப்பவனுக்கும், அடியோடு கெட்டுப்போய்க் கீழோனய்க் கிடப்பவனுக்கும், தூய்மையே வடிவெடுத்திருப்பவனுக்கும் அது பயன்படவல்லது. யாண்டும் யாவர்க்கும் அது ஒப்பப் பயன்படக் கூடியது. வேதாந்த தத்துவங்கள் என்று அதைப் பகரலாம், சமயங்களின் குறிக்கோள் எனலாம், இன்னும் என்னென்னவோ பெயர்களை அதற்குவழங்கலாம். மக்களுக்குப் பயன்படுமளவு அது மேன்மையுறும்.

நம்மில் ஒவ்வொருவரும் தன்னம்பிக்கையை லட்சிய மாகக் கொண்டிருப்போமாளுல் அத்தகைய நம்பிக்கையி னின்று நமக்குப் பேருதவி கிடைக்கும். உலகில் தீங்கும் துக்கமும் ஏராளமாயிருப்பது வெளிப்படை. இக்கேடு களில் பெரும் பகுதியை அகற்றுதற்கு உற்ற உறுதியான உபாயம் ஒன்று உண்டு. ஆத்ம விசுவாசம் அல்லது தன் னம்பிக்கையை இன்னும் ஏராளமாக ஓர்ந்து அனுஷ்டானத் தில் கொண்டுவந்திருந்தால் நம்மைப் பிடித்துள்ள கேடுகளில் பல தாமே அழிந்துபட்டுப் போயிருந்திருக்கும். மானுட வர்க்கத்தின் வரலாற்றைத் துருவி ஆராய்ந்து பார்த்தால் பேருண்மை யொன்று புலப்படும். அதாவது அரும்பெரும் காரியங்களைச் செய்து சாதித்த ஆடவர் மகளிர்களுக்குத் தன்னம்பிக்கை ஒன்றே பேராற்றலைப் பெருமிதமாகஅளித்து வந்திருக்கிறது. தன்னம்பிக்கையினின்று அவர்கள் பெற்ற ஊக்கத்தையும் உறுதியையும் வேறு எதனிடத்திருந்தும் பெறவில்லை. மேலோர் ஆகப்போகிறேம் என்ற திட நம் பிக்கையுடன்கூடி அவர்கள் பிறப்பெடுத்தார்கள். ஆகவே அவர்கள் மேலோர் ஆயினர். படிப்படியாகக் கீழ்மையடை யும் மனிதன் உலகில் உண்டு. தன் போக்கில் அவன் கீழ்மை யடைந்துகொண்டே வரட்டும். அப்படிக் கீழ்மையடைதற்கும்

ஓர் எல்லையுண்டு. இவ்வளவு தூரம் நான் கீழ்மை யடைந்தது போதும், என்று பிறகு கீழ்மையிலேயே ஒரு வித வெறுப்புத்தட்டிவிடுகிறது. உடனே அவன் மேல் நோக்கிப் போக ஆரம்பிக்கிறான். எப்பொழுது முன்னேற்ற மடைய ஆரம்பித்துவிட்டானோ அப்பொழுதே அவனுக்குத் தன்னம்பிக்கையும் தோன்ற ஆரம்பித்து விட்டது. இப்படிச் சிறுமைப் பட்டபின் தன்னம்பிக்கையைப் பெறுவதைவிடத் துவக்கத்திலேயே அதைப் பெற்றுவிடுவது நலம். ஆத்ம விசுவாசம் அல்லது தன்னம்பிக்கைதானே நமக்குத் தேவை? பின்பு அதன் பொருட்டு இத்தகைய கயப்பு நிறைந்த அனு பவங்கள் எதற்காக? மக்களுக்கிடையில் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை ஏராளமாக உண்டு. இந்த வேற்றுமையை உண்டுபண்ணுவது எது என்னும் கேள்வி பிறக்கிறது. தன்னம்பிக்கை யுடையவன் உயர்ந்தவன் ஆகிறான். தன்னம் பிக்கை யில்லாதவன் தாழ்ந்தவன் ஆகிறான். தன்னம்பிக்கை யினின்று நமக்கு எல்லாம் கைகூடும். நமது சொந்த வாழ்க் கையிலேயே இவ்வனுபவத்தை நாம் காணலாம். ஒரு சிறி தளவாவது அனுபவம் நமக்கு வந்துவிட்டால் பிறகு தன்னம் பிக்கையானது இன்னும் பன்மடங்கு ஆழ்ந்து நம்மிடத்துத் தலையெடுக்கும். தன்னம்பிக்கை யில்லாதவனே நாஸ்திகன். ஈசுவர நம்பிக்கையில்லாதவன் நாஸ்திகன் என்ற கோட்பாடு வழக்கத்தில் வந்துள்ளது. அதே கோட்பாட்டை புதிய பாங்கில் பகருவோமானால் தன்னம்பிக்கை யில்லாதவன் நாஸ்திகன் ஆகிறான். தன்னம்பிக்கை என்பதன் தத்து வத்தை நாம் உள்ளபடி அறிந்துகொள்ளுதல் வேண்டும். சுயநலத்துக்கோ, ஆணவத்துக்கோ, அஹங்காரத்துக்கோ இங்கு இடமில்லை. ஏனென்றால் உள்ளது ஒரு பொருளே என்னும் அகண்டாகார விருத்தியில் 'நான் எனது'

என்னும் வேற்றுமைகளெல்லாம் ஒடுங்கிவிடுகின்றன. நான் நீ என்ற வேற்றுமை வேதாந்திக்கு இல்லை. தான் ஆக வடிவெடுத்திருப்பதும், மற்ற உயிர்களாக வடிவெடுத்திருப்பதும், ஒரே பரம்பொருள். தன்மீது வைத்துள்ள அதே திட நம்பிக்கை மற்ற எல்லா உயிர்களிடத்தும் இருக்கிறது. தன்மீது ஒருவன் கொண்டுள்ள அன்பு அனைத்திடத்தும் அன்பாக விரிவடைந்துவிடுகிறது. பறவை, விலங்கு, மற்ற சிற்றுயிர்கள் ஆகிய சகல வஸ்துக்களிடத்தும் ஒரே அன்பு. தனது எதார்த்த சொரூபமே இத்தனைப் பொருள்களாகப் பரிணமித்திருப்பதே அதற்குக் காரணமாகும். இத்தகைய மேலான நம்பிக்கை உலகத்தை நல்லுலகமாக மாற்றியமைக்கும். இது முற்றிலும் உண்மை. "எனது எதார்த்த சொரூபத்தை நான் சம்பூரணமாக அறிந்துகொண்டேன்," என்று உண்மையை உணர்ந்து ஓதுபவனே மாந்தருள் மிக மேலோன் ஆகிறான். உன்னுடைய மானுட உடலத்தின் கண் எவ்வளவு சக்தி, எத்தனைவித ஆற்றல்கள், என்னென்ன திறமைகள் இன்னும் பதுங்கிக் கிடக்கின்றனவென்று உனக்குத் தெரியுமா? இயற்கையில் என்னென்ன சிறப்புகளும் மருமங்களும் இருக்கின்றனவென்று பௌதிக விக்ஞானிகள் கண்டறிந்திருக்கிறார்களோ அவையாவும் மனிதனிடத்திருக்கின்றன. லட்சக் கணக்கான வருஷங்களுக்கு முன்பு மனிதன் மண்ணுலகில் வந்துள்ளான்; ஆயினும் அவனுடைய அளவையில் அடங்காத சக்தியில் அணுப் போன்ற ஒரு சிறு பகுதியே வெளித் தோற்றத்துக்கு வந்திருக்கிறது. ஆகவே உன்னை நீ பலவீனன் என்று பகரலாகாது. வெளிப்பார்வைக்கு எல்லாம் க்ஷீணதசை யடைந்தவன்போன்று நீ தென்படலாம். அடிப்படையில் உன்னிடத்து அடங்கியிருக்கும் பேராற்றல்கள் எத்தகையவை என்பதை

நீ அறிகிறாயா? உன்னிடத்துள்ள மகிமைகளுள் நீ அறிந்து கொண்டது மிகச்சிறியது. கரைகாணாத கடல்போன்ற ஆற்றலும் அருளும் உனக்கு ஆதாரமாக அமைந்துள்ளன.

आत्मा वा अरे श्रोतव्य — இந்த ஆத்மா சிரவணத்துக்குரியது. நீ ஆத்மா என்னும் விஷயத்தை அல்லும் பகலும் கேள். நீ கேட்டறிந்த இவ்விஷயத்தை அல்லும் பகலும் மனனம் செய். உன்னுடைய நாடி நரம்புகளிலே இவ்வெண்ணம் பிரவேசிக்கட்டும். ஒவ்வொரு ரத்தத்துளியிலும் இவ்வெண்ணம் ஊறியிருக்கட்டும். உன்னுடைய தசையிலே, எலும்பிலே, மஜ்ஜையிலே நீ ஆத்மா என்னும் எண்ணம் பதிந்து கிடக்கட்டும். உயர்ந்த அந்த ஒரு லட்சியமே உடலெங்கும் வியாபித்திருக்கட்டும். பிறவாத, இறவாத ஆத்மா நான். நான் ஆனந்த சொரூபி. நான் சர்வக்ஞன். நான் சர்வ சக்திமான். நித்திய ஜோதிர்மயமான ஆத்மா நான். பகலிலும் ராத்திரியிலும் இக்கருத்தைச் சிந்தையில் வை. உனது ஜீவிதமே அந்த ஆத்ம சொரூபமாக வடிவெடுக்கும் வரையில் நீ அதை எண்ணிய வண்ணமாயிரு. ஆத்ம சொரூபத்தைப்பற்றியே தியானம் பண்ணு. வினையாற்றும் வல்லமை உனக்கு அதினின்று உதிப்பதாகும். நிறைமனதினின்று நிறைமொழி தோன்றுவதாகும். நிறைமனதினின்று நல்வினையாற்றும் வல்லமையும் வருகிறது. மனத்தின் நிறைவினின்று சீரிய செயல் தோன்றுவதாகிறது. இந்த லட்சியம் மட்டும் உன் மனதை அறவே கவர்ந்து கொள்ளட்டும். நீ எக்கர்மத்தைச் செய்தாலும் அதைப்பற்றி ஆழ்ந்து எண்ணு. எண்ணத்தின் வலிவால் உனது செயல்களெல்லாம் தெய்விகம் நிறைந்த அரும்பெரும் செயல்கள் ஆகும். ஜடப்பொருளிடத்து சக்தியிருக்கிறதென்றால் சிந்தை அல்லது எண்ணத்துக்கு மகோன்னத சக்தியிருக்கிறது. எண்

ணத்தின் வலிவை உன்னுடைய ஜீவிதத்தில் நிரூபித்துக் காட்டு. நீ சர்வ சக்திமான், மாட்சிமை தங்கியவன், தெய் விகம் நிறைந்தவன் என்னும் எண்ணம் நிறைந்தவன் ஆவா யாக. ஈசுவர கிருபையால் குருட்டு நம்பிக்கைகள் உன் அறிவினுள் புகுத்தப்படாதிருக்கட்டும். மனிதன் ஒன்றுக் கும் உதவாத பலவீனன் என்றும், நீசன் என்றும் பிறப் பெடுத்ததுமுதல் புகட்டப்படுகிறுன். அதனுல் அவன் மேலும் மேலும் தளர்வடைந்து விடுகிறுன். அத்தகைய புல் லிய குருட்டு நம்பிக்கைகளினின்று இறைவன் அருளால் நாம் காப்பாற்றப்படுவோமாக. வாழ்க்கையைப்பற்றிய மேலாம் பேருண்மைகளை மானுடவர்க்கம் எளிதில் பெற்று இனிது கையாளுதல் வேண்டும். இறைவன் அருளால் அத்தகைய நல்வழி நிலவுலகில் நிலைபெறுக. இதுகாறும் வந்துள்ள மாந்தர் இத்தனைக் கசடுகளைக் கடக்க வேண்டியிருந்தது. ஆனுல் இனிவரும் மாந்தர்க்குப் பாதை இவ்வளவு கடின மானதாயிருக்கவேண்டிய அவசியமில்லை. குருட்டு நம்பிக் கைக்கும், இருளில் அலைமோதி இடர்ப்படுதற்கும் இடங் கொடாது உண்மையை அவர்களுக்கு உள்ளபடி விளக்கி விடவேண்டும்.

பயங்கரமான கொள்கைகள் பல இந்நிலவுலகிலே இது காறும் புகட்டப்பட்டு வந்துள்ளன. அத்தகைய போதனை களைக் கேட்டு மக்கள் மருண்டு போயிருந்தனர். அத்தகைய குருட்டு நம்பிக்கைகளுக்கு இனி இடமில்லை. மற்று, வேதாந்தத்தை அனுஷ்டானத்தில் கொண்டுவர விரும்பு பவர் கற்கவேண்டிய முதல்பாடம் ஒன்று உண்டு. தன் னையோ அல்லது பிறரையோ வலிவற்ற கயவர் என்று யாரும் எண்ணலாகாது. கூடுமானுல் உலகுக்கு நன்மை செய்; ஆனுல் ஒருபொழுதும் கேடு விளைவித்துவிடாதே.

உன்னிடத்துள்ள சில குறுகிய எண்ணங்களும், உன்னை நீ பணிவுடையவனாகச் சிறுமைப்படுத்திக் கொள்ளுதலும், கற்பனை தேவதைகளை நோக்கி நீ விண்ணப்பிப்பதும், அழுவதும் ஆகிய இவை யாவும் குருட்டு நம்பிக்கையென்பதை நீ மனமார அறிவாய். இத்தகைய பிரார்த்தனைகளுக்கு ஏதேனும் ஒருதடவையாவது புறத்திருந்து விடை வந்ததா, என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். கோரிக்கை செய்து கொண்டவர்க்கெல்லாம் வந்த விடைகளெல்லாம் சித்தமிசை குடிகொண்டிருக்கும் அந்தராத்மாவிடத்திருந்தேயாம். பேய் என்னும் சொல்லுக்கு இலக்காக ஒன்றுமில்லை யென்பது பலருக்குத் தெரியும். ஆயினும் அவர்கள் இருளினுள் போகும்போது ஒருவிதமான நடுக்கம் கொள்கின்றனர். நமது சின்னஞ்சிறு வயதிலே இத்தகைய பயங்கரமான எண்ணங்கள் நமக்குப் புகட்டப்பட்டதே இதற்கெல்லாம் காரணமாகும். பின்பு நாம் இவைகளையெடுத்து மற்ற ஜனங்களுக்குப் புகட்டலாகாது. அப்படி நாம் புகட்டாவிட்டால் சமுதாயம் நம்மைப்பற்றி என்ன நினைக்கும் என்ற அச்சம் நமக்கிருக்கலாகாது. நமது நண்பர்கள் நம்மைப் பகைப்பார்களே என்று அஞ்சியும் இப்புல்லிய கருத்துக்களை நாம் யாருக்கும் புகட்டலாகாது. நெடுநாளாகப் பாராட்டி வந்துள்ள மூடநம்பிக்கைகளை இனி விட்டுவிடுவது முறையா, என்ற ஐயம் நமக்கு உண்டாகலாம். ஆம் இவைகளை இனி நாம் விட்டே ஆகவேண்டும். இக்கொள்கைகளை இனி நாம் பரப்பலாகாது. இத்தகைய புல்லிய எண்ணங்களுக்கு நாம் அடிமைகளாய் விடலாகாது. அவைகளை அகற்றவல்ல மேதாவிகளாகவேண்டும். பிரம்மாண்டத்திலுள்ள அனைத்தும் ஒரு பொருளின் பல்வேறு தோற்றங்கள் என்று புகட்டுதற்கு நிகரானது சமயக்கோட்பாட்டில்

வேறு என்ன இருக்கிறது? ஆத்மவிசுவாசம் வைக்கின்றவனே முன்னேற்றமடைகின்றான் என்பதற்கு நிகரானது சமயக்கோட்பாட்டில் வேறு என்ன இருக்கிறது?

இந்த ஒரு லட்சியத்துக்காகக் கடந்த பல்லாயிரம் ஆண்டுகளாக மானுட வர்க்கம் முயன்று வந்துள்ளது. இப்பொழுதும் அதே லட்சியத்துக்காக மானுடஜாதி முயன்று வருகிறது. தலைமுறை தலைமுறையாக வரும் மானுடர்க்கிடையில் நமது காலமும் முறையும் இப்பொழுது வந்துள்ளன. பிரபஞ்சத்தைப் பற்றிய முடிவான உண்மையை நாம் அறிந்திருக்கிறோம். ஏனென்றால் இவ்வுண்மையானது பல்வேறு பாங்குகளிலே நமக்குப் புகட்டப்பட்டுள்ளது. வேதாந்த தர்சனம் இக்கோட்பாட்டைப் புகட்டுகிறது. மனோதத்துவ சாஸ்திரம் இதே கருத்தைப் புகட்டுகிறது. ஜடப்பொருளைப் பற்றிய விக்ஞான சாஸ்திரமும் இதே உண்மையைப் புகட்டிவருகிறது. பிரபஞ்சம் முழுதும் ஒரு பொருளின் அமைப்பு என்னும் உண்மையை ஏற்க அஞ்சும் விக்ஞானி இன்று யாரேனும் உண்டா? உலகங்கள் பல பொருள்களைக்கொண்டு அமைந்தவைகள் என்று சொல்லத் துணிபவன் உண்டா? அப்படி எண்ணுவதெல்லாம் மூட நம்பிக்கையாகும். இருப்பது ஒரே உயிர், ஒரே அண்டம். இந்த ஓர் உயிர், ஓர் அண்டம் நமக்குப் பற்பலவாகக் காட்சி கொடுக்கிறது. கனவு போன்று இது பற்பலவாகத் தென்படுகிறது. நீ சொப்பனம் காணும்பொழுது ஒரு சொப்பனம் போய்விடுகிறது, மற்றொன்று வருகிறது. நீ காணும் கனவு நிலைபேறு உடையது அன்று. சொப்பனம் கண்டுகொண்டு இருக்கும்போதே அது உண்மையானதன்று. ஒன்றன்பின் ஒன்றாக உனக்குச் சொப்பனங்கள் வந்துகொண்டே யிருக்கின்றன. உனது முன்னிலையில் காட்சிக்குப் பிறகு காட்சி

மாறிக்கொண்டேயிருக்கிறது. பெரும்பகுதி துன்பம் சிறு பகுதி இன்பம் உடைத்திருக்கும் இவ்வுலகம் இத்தகையது. உன்னை நீ ஒழுங்குப் படுத்திக்கொண்டால் பிறகு பெரும் பகுதி இன்பமும் சிறுபகுதி துன்பமும் இவ்வுலகில் தென்படும் காலமொன்று வரும். அப்பொழுது இது சுவர்க்கம் என்று சொல்லப்படும். அதற்கப்பால் இப்பிரபஞ்சமே காட்சியினின்று மறைந்து போகிற காலமொன்று ஆத்ம பரிபாகமடைந்த ஞானிக்கு வருகிறது. பிரபஞ்சத்துக்குப் பதிலாக இது பிரம்ம சொரூபமாகக் காட்சி கொடுக்கிறது. தானும் தனக்கு இது பரியந்தம் தென்பட்டுவந்துள்ள ஜகத்தும் எல்லாம் பிரம்ம சொரூபம். ஆகவே பாதாளம் முதல் சுவர்க்கம்வரையில் பல லோகங்கள் இருக்கின்றனவென்பது நிரந்தரமான உண்மையன்று. எண்ணரிய ஜீவன்கள் இருக்கின்றன என்பதும் உண்மையன்று. ஒன்றோடொன்று வேறுபடுகிற இத்தனைவிதமான தோற்றங்களெல்லாம் அந்த ஒருபொருளின் விகசிப்பேயாம். பல பொருள்களாக, ஜடப்பொருள்களாக, சேதனப்பொருள்களாக, மனதாக, எண்ணமாக, அனைத்துமாகத் தோன்றிக்கொண்டிருப்பது அப்பரம்பொருள் ஒன்றேயாம். உள்ளது ஒன்று. அது பலவாக மிளிர்ந்து கொண்டிருக்கிறது. ஆகவே நமது முதல் சாதனம் இவ்வுண்மையை நமக்கும் மற்றவர்களுக்கும் புகட்டுதலேயாம்.

இந்த உயர்ந்ததொரு கோட்பாடு உலகெங்கும் எதிரொலித்துக் கொண்டிருக்கட்டும்; ஏனைய மூடநம்பிக்கைகளெல்லாம் மறைந்தொழிக. பலவீனராயிருப்பவர்களுக்கு இப் பேருண்மையை எடுத்தோது; திரும்பத் திரும்ப அதைச் சொல்லிக்கொண்டே இரு. நீ சுத்தசொரூபி; விழித்திரு, எழுந்திரு, பேராற்றல் படைத்தவனே, இவ்வுறக்கம் உனக்கு

ஒவ்வாதது. விழித்துக்கொள், எழுந்திரு, படுத்துக்கிடப்பது உனக்குப் பொருந்தாது. உன்னை வலிவற்றவன் என்றோ, துக்கியென்றோ எண்ணாதே. எல்லாம் வல்லவனே, விழித்தெழுந்திரு, உனது நிஜசொருபத்தை நிலைநாட்டு. உன்னைப் பாபியென்று நீ நினைத்துக்கொள்வது பொருந்தாது. உன்னைப் பாபியென்று பிறர் புகட்டினால் அக்கூற்றுக்கு நீ செவிசாய்க்காதே. வலிவற்றவன் என்று உன்னை நீ கீழ்மைப்படுத்திக்கொள்வது முறையன்று. உலகத்தவர்களுக்கு அவர்களின் உயர்நிலையை எடுத்து ஓது. அவ்வுயர்நிலையை உனக்கே நீ ஓதிக்கொள். அதினின்று விளையும் நன்மையை நீயே கண்டுகொள்வாய். மின்னல் ஒளிபோன்று எல்லாம் பிரகாசம் பெற்றுவிளங்கும். தெய்வ சம்பத்துடையவைகளாக எல்லாம் மாறிவிடும். மானுடவர்க்கத்துக்கு இவ்வுண்மையை எடுத்து இயம்பு. அவர்கள்பால் புதைந்துகிடக்கும் சக்தியை அவர்களுக்கு விளக்கிக்காட்டு. பிறகு நம்முடைய நித்தியவாழ்க்கையில் இதை அனுஷ்டானத்தில் கொண்டுவர நாம் கற்றுக்கொள்வோம்.

நம்முடைய அன்றாட வாழ்க்கையில் ஒவ்வொரு கணப்பொழுதிலும் நாம் விவேகத்தைக் கையாளத் தெரிந்துகொள்ளவேண்டும். நாம் செய்கின்ற செயல்களிலே சரியானவைகள் எவை, தப்பானவைகள் எவை என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். உண்மை எது, பொய் எது என்பதை அறிதலும் அவசியம். உண்மையின் பாங்கு யாது என்று சோதித்து அறிந்துகொள்ளுதலும் அவசியமாகிறது. உண்மையின்கண் புனிதமும் ஒற்றுமையும் பொலிவது வெளிப்படையாம். ஒற்றுமைப்படுத்துவது எதுவோ அது உண்மை. அன்பு உண்மையின் வடிவம்; வெறுப்பு பொய்யின் வடிவம். ஏனென்றால் வெறுப்பு வேற்றுமையை வளர்க்கிறது. மனி

தனை மனிதனிடமிருந்து பிரித்துவைப்பது வெறுப்பு; ஆகவே அது தவறுதலானது, பொய்யானது. வெறுப்பை விநாச சக்தி எனலாம். அழித்து ஒழித்துவிடும் இயல்பு அதனிடத் துளது. பிரித்துவைக்கவும் நாசப்படுத்தவும் வல்லது அது.

அன்பு இணைத்துவைக்கிறது. அன்பு ஏகத்துவத்தை உண்டுபண்ணுகிறது. தாயைக் குழந்தையுடன் ஒன்றுபடுத் துவது அன்பு. குடும்பத்தை ஊருடன் ஒன்றுபடுத்தி வைப் பது அன்பு. உலக மக்களை விலங்குகளோடு ஒன்றுபடுத்தி வைப்பதும் அன்பு. அன்பின் வழியது உயிர்நிலை. அதா வது உயிர் வாழ்தலுக்கு அடிப்படையாயிருப்பது அன்பு. அன்பே தெய்வம். சற்று ஏற அல்லது தாழ அன்பே அகி லாண்ட மெங்கும் தன்னை விளக்கிக்கொண்டிருக்கிறது. அன்பின் மாத்திரையில் சற்றுத் தாரதம்மியமிருக்கலாம்; ஆயினும் அன்பின் தோற்றமே எங்கும் வியாபகமாயுள்ளது. ஆகவே நாம் எச்செயலைச் செய்தாலும் அது வேற்றுமையை வளர்க்கிறதா, ஒற்றுமையை உண்டுபண்ணுகிறதா என்று பார்க்கவேண்டும். வேற்றுமையை வளர்க்கும் செயலை நாம் விட்டுவிடவேண்டும். மற்று, ஒற்றுமையை உண்டு பண் ணும் செயலே நலம் நிறைந்ததாகிறது. செயல் எத்தகை யதோ, சிந்தை அல்லது எண்ணமும் அத்தகையதாம். வாழ்வு பிளவுபட்டுப் பலவாகச் சிதறடைந்து போவதற்கு நாம் ஏது வாயிருக்கிறோமா, அல்லது ஒற்றுமையை உண்டு பண்ணு தற்கு இருக்கிறோமா என்று விசாரித்துப் பார்ப்பது முறை. உயிர்களை உயிர்களோடு இணைத்து ஒரே ஆதிக்கம் நிலவச் செய்வது ஒற்றுமை. இங்ஙனம் ஒற்றுமையை உண்டு பண் ணும் எண்ணங்களை ஏற்போம்; மற்றவைகளைத் தீயவை யென விலக்குவோம்.

வேதாந்தம் புகட்டுகிற நன்னெறியின் சாரம் இதுவே யாம். உன் அறிவுக்கு எட்டாத எப்பொருளையும் நீ சார்ந் திருக்கவேண்டாம். அறிவுக்கு எட்டாத எதையும் அது புகட்டுவதும் கிடையாது. "நமது அறிவுக்கு எட்டாத தெய்வமென்று எதை நாம் வணங்குகிறோமோ அதே தெய் வத்தைத்தான் நான் உனக்கெடுத்து உபதேசிக்கிறேன்" என்று உபநிஷதம் கூறுகிறது. ஆத்மாவின் மூலமாகவே உன்னால் எப்பொருளும் அறியப்படுகிறது. நீ அந்த நாற் காலியைப் பார்க்கிறாய். நாற்காலியைக் காண்கிற நீ காண் போனாகிய உன்னை முதலில் கண்டுகொள்கிறாய். காண் போன் இருப்பதை உறுதிப்படுத்திக்கொண்டே காணப்படு பொருள் இருப்பதை உறுதிப்படுத்துகிறாய். காண்பவனா கிய ஆத்மாவின் மூலம் காணப்படு பொருளாகிய நாற்காலி புலனாகிறது. ஆத்மாவின் மூலம் மனிதன் ஒருவனை ஒருவன் அறிகிறான், உலகையும் அறிகிறான். அப்படியிருக்க ஆத்மா வானது அறியப்படாத பொருள் என்பது வெறும் பிதற்று தலாம். காண்போனாகிய ஆத்மாவை அகற்றிவிட்டால் பிர பஞ்சம் முழுதும் மறைந்து போய்விடுகிறது. ஆத்மாவின்கண் ஆத்மாவின் மூலம் ஞானம் அனைத்தும் வருகிறது. ஆகவே, அறியப்படுபொருள் அனைத்திலும் நன்கு அறியப்படுபொருள் ஆத்மாவாம். நான் என்னும் சொல்லுக்கு இலக்காயிருப்பது ஆத்மா.

இங்கு வியப்பு ஒன்று உண்டாக இடமுண்டு. நான் என்பதற்கு இலக்காக ஒரு மனிதனிடத்துள்ள ஆத்மாவே இன்னொரு மனிதனுடைய ஆத்மா ஆவது எங்ஙனம்! வரம் புக்கு உட்பட்ட நான் என்னும் ஆத்மாவானது வரம்பு கடந்த அகண்டாகார ஆத்மா ஆவது எங்ஙனம்! உண்மையில் அது வரம்பு கடந்த அகண்டாகார ஆத்மாவேயாம். அது

வரம்புக்கு உட்பட்டிருக்கிறது என்பது வெறும் கற்பனை. அந்த அகண்ட அனந்த வஸ்துவின்மீது சிறிது ஆவரணம் (மறைக்கும்தன்மை) படிந்திருப்பதுபோன்று தென்படுகிறது. ஆகவே அப்பெரிய பொருள் ஒரு, சிறிய கிரணம் போன்ற நான் ஆகப்பிரகாசிக்கிறது. வரம்பு கடந்த பொருளுக்கு ஒரு நாளும் வரம்பு போடமுடியாது. அகண்டவஸ்து சிறியதாகத் துண்டிக்கப்படுவதில்லை. அது வரம்பில் அடங்கியது என்பது வெறும் கற்பனையாம். ஆகவே ஆத்மாவானது எல்லாராலும் அறியப்படுபொருளாம். ஆண், பெண், விருத்தர், பாலர், விலங்குகள், புள்ளினம் உட்பட அனைவரும் ஆத்மாவை அறிந்துகொண்டே யிருக்கின்றனர். ஆத்மபோதமின்றி நாம் உயிர்வாழவோ நடமாடவோ முடியாது. ஆத்மபோதத்துக்கு அன்னியமான சுயபோதம் நமக்குக் கிடையாது. சர்வேசுவரனாகிய அப்பிரபுவைச் சார்ந்திராவிடில் நாம் சுவாசிக்கவும் முடியாது, கணப்பொழுது உயிர் வாழவும் முடியாது. நமக்குக் குறியாக, நெறியாக, சக்தியாக, சிந்தனையாக, ஜீவிதமாக, அனைத்துமாக இருப்பது அப்பொருள் ஒன்றே. வேதாந்தம் புகட்டும் தெய்வமே அனைவராலும் நன்கு அறியப்படு தெய்வமாகிறது, முற்றும் உணரப்படு பொருளாகிறது, பேருணர்வு ஆகிறது. அது ஒருபொழுதும் கற்பனையின் விளைவு அன்று.

நம் மனத்தகத்து இருக்கிற பேரறிவு என்னும் தெய்வம் பிரத்யக்ஷ தெய்வமல்லாவிட்டால் வேறு எது பிரத்யக்ஷ தெய்வமாகும்? நமது பொறி புலன்களையெல்லாம்விட அதிகமான நிலைபேறு உடைய தெய்வம் அது; உயிர்கள் அனைத்திடத்தும் வீற்றிருக்கும் தெய்வம் அது; நீக்கமற எங்கும் நிறைதெய்வம் அது; பார்க்குமிடமெங்கும் நமக்குப் புலனாகும் தெய்வமது; இதைவிடப் பிரத்யக்ஷமான தெய்வம்

வேறு யாது உளது? எங்கும் வியாபகமானதும், சர்வ சக்திமான் ஆனதும், அனைத்துக்கும் அந்தராத்மாவாயிருப் பதும் அதே தெய்வம். மானுடா, அந்தத் தெய்வத்தின் சொரூபம்தான் நீ. அந்த தெய்வத்தின் சொரூபம் நீ அல்லை என்று நான் இயம்புவேனாகில், நான் பொய் சொல்லுபவன் ஆகிறேன். சர்வகாலமும் மனிதன் இதனை தன் சுவானுப வத்தில் கொண்டிருக்க இயலாவிடினும், இதுதான் உண்மை என்பதை அவன் அறிந்திருத்தல் வேண்டும். ஏகமாய், அகண்ட வஸ்துவாய், உயிர் அனைத்துக்கும் உயிராய், நித்தியமாய் இருப்பது அப் பரதெய்வம்.

வேதாந்தம் புகட்டுகிற நீதி தத்துவங்களைக் கொஞ் சம் விஸ்தாரமாக ஆராயவேண்டும். அதற்கும் பொறுமை தேவையாயிருக்கிறது. இதை சவிஸ்தாரமாக ஆழ்ந்து ஆராயுங்கால் ஒரு கோட்பாட்டினின்று மற்றொரு கோட்பாடு உதயமாகி, அது உன்னத நிலைக்குப்போவது நமக்கு விளங்கும். பல பொருள்களை உடைத்திருக்கும் பிரபஞ்ச மாய்த் தென்படுவது வாஸ்தவத்தில் ஒரு பொருளே என் னும் உண்மை வெளியாகும். அனைத்திடத்தும் அன்பு பாராட்டவேண்டிய அவசியமும் அப்பொழுது உறுதியாகும். இதையெல்லாம் முறையாக ஆராய்வதால் நாம் நன்னெறியி னின்று வழுவி துன்மார்க்கத்தில் போய்விடமாட்டோம். நீதி தத்துவ அனுஷ்டானத்தை மிகக்கீழான படியிலிருந்து சிறிது சிறிதாக மேலான படிக்குப் பழக்கத்தில் கொண்டு வருவதற்கு உலக மக்களுக்கு அவகாசமில்லை. இந்தச் சாதனங்களை அனுஷ்டிக்கிற நாம் உயர்ந்த படிக்கு வந்தி ருக்கிறோம். நாம் கண்டறிந்த உண்மைகளை இனி வரும் ஆத்மசாதகர்களுக்கு எடுத்து வழங்காவிட்டால் இவைக ளால் நாம் பெற்றுள்ள பயன்தான் யாது? ஆகவே ஒருசிலரா

வுது இந்த சாதனங்களின் அடிப்படைத் தத்துவங்கள் எல்லாவற்றையும் அறிந்திருப்பது அவசியமாகிறது. ஆத்ம சாதனத்தின் பல அம்சங்களில் பகுத்தறிவும் ஒன்று. பகுத்தறிவைப் பற்றிய பகுதியை முதலில் எடுத்துக்கொள்வோம். தன்னளவில் பகுத்தறிவு அவ்வளவு சிலாக்கியமானது அல்ல எனினும் சாதனத்தின் பகுத்தறிவுப் பகுதியை முட்ட முடிய ஆராய்ந்துவிடுவது நலம். பகுத்தறிவைவிட உள்ளன்பு மிக முக்கியமானது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அன்பின் வாயிலாக ஈசுவர தரிசனம் அடையப் பெறுகிறது; பகுத்தறிவைக்கொண்டு அதை அடையமுடியாது. வீதியைக் கூட்டிப்பெருக்கும் தோட்டி போன்றும், வீதியில் காவல் இருக்கும் தாணைக்காரன் (police) போன்றும் பகுத்தறிவு இருக்கிறது. சமுதாய வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் தாணைக்காரன் முற்றிலும் இன்றியமையாதவன் அல்லன். இடைஞ்சல்கள் உண்டாகாது பார்த்துக்கொள்வது போலீஸ்காரன் வேலை. அதற்குமேல் அவன் செய்யக் கிடப்பது ஒன்றுமில்லை. ஆத்ம சாதனத்துக்குப் பகுத்தறிவு செய்கிற உதவி அத்தகையது. ஆத்மசாதகன் சாஸ்திரம் பல வாசிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். சாஸ்திரம் வாசிப்பது பகுத்தறிவின் வேலை. அவைகளை முறைப்படி வாசித்து முடித்தானவுடன், "ஈசுவரகிருபையால் இத்தொல்லை யொழிந்தது" என்னும் எண்ணம் இயல்பாக வருகிறது. கண்ணில்லாக் குழவி யென்று பகுத்தறிவைப் பகரவேண்டும். தானாக இயங்கும் சக்தி அதற்கில்லை. கையும் காலும் இல்லாத முடவன் போன்றது பகுத்தறிவு. அன்பு என்னும் உணர்வே கடவுளை நோக்கிப் போகும் பயணத்துக்கு வேலை செய்யவல்லது. மின்சக்தியைவிட அல்லது வேறு எந்த சக்தியையும்விட

அதிவேகமாகப் போகவல்லது உள்ளத்தின் உணர்வு என்னும் சக்தி. நீ உணர்ச்சி நிறைந்தவனா? — என்பதுதான் கேள்வி. உணர்ச்சி உன்னிடம் ததும்பிக்கொண்டிருக்குமானல் நீ இறைவனைக் காண்பாய். உள்ளத்தில் ஊற்றெடுக்கும் உணர்ச்சியானது மேலும் மேலும் ஓங்கவேண்டும். தெய்வப்பெற்றி உடையதாக அது வடிவெடுக்கவேண்டும். உச்சநிலைக்கு அது உயர்தல் வேண்டும். உயர்ந்த உணர்வு அருள் வடிவெடுக்கிறது. உள்ளும் புறம்பும் கடவுள் சொரூபத்தைக் காணும் வல்லமை அருள் வடிவாய் மிளிரும் உணர்வுக்கு வந்துவிடுகிறது. யாவுமாய் இலங்குவது அந்த ஒரு பொருளே என்னும் முடிவுக்கு உணர்வானது உன்னைக்கொண்டு செலுத்தும் தன்மையது. அப்பெருநிலைக்கு உன்னை எடுத்துச்செல்லப் பகுத்தறிவுக்கு இயலாது. சொல் வன்மையை விதவிதமான பாங்கில் கையாளுதல், பதப் பிரயோகத்தை புத்திக்கு எட்டியவாறெல்லாம் அலங்காரமாகப் பொழிதல், சாஸ்திர வாக்கியத்துக்கு விதவிதமான வியாக்கியானங்களை வாரிக்கொட்டுதல் ஆகிய இவையாவும் பண்டிதர்களுடைய பூரிப்புக்கு உதவும்; ஆத்ம ஞானத்துக்கோ முக்திக்கோ இவை சிறிதும் உதவா.

ஆங்கிலம் கற்றவர்கள் தோமஸ் ஆகெம்பிஸ் என்ற கிறிஸ்தவப் பெரியார் இயற்றிய 'ஏசுவின் அனுசரணை' என்ற புஸ்தகத்தைப் படித்திருக்கலாம். தமிழர் திருவாசகம் அல்லது திருவாய்மொழி என்னும் நூலைப் படித்திருக்கலாம். அப்புஸ்தகங்களில் ஒவ்வொரு பக்கத்திலும் இந்த ஒரு கருத்தே வற்புறுத்தப்பட்டிருக்கிறது. உலகில் தோன்றிய எல்லாப் பெரியார்களும் இதே கருத்தை வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள். மிக முக்கியமாக வேண்டப்படுவது

உணர்ச்சி. அதற்குத் துணையாகச் சிறிது பகுத்தறிவும் வேண்டும். பகுத்தறிவு சிறிதும் இல்லாதவன் புல்லிய குற்றங்களைச் செய்துவிடுவான்; பொருந்தாத தவறுகள் பல வற்றை அவன் புரிந்துவிடுவான். இப்படிப் புன்மைகள் நேராவண்ணம் பகுத்தறிவு பாதுகாக்கிறது. அதன் பயன் அவ்வளவே. அதற்குமேல் பகுத்தறிவைக்கொண்டு எதை யும் சாதிக்க முயலவேண்டாம். அது மறைமுகமாயிருந்து ஏதோ கொஞ்சம் உதவிபுரிகிறது. உண்மையான உதவி உணர்ச்சியினின்று, அன்பினின்று வருகிறது. பிறர்க்காக நீ பரிந்து உணர்கிருயா? அப்படி உணர்வாயாகில் ஏகத் வத்தில், ஒற்றுமையில் நீ வளர்கிருய். பிறப்பெடுத்துள்ள மானுடரில் பேரறிவு படைத்தவனுக நீ இருக்கலாம். ஆனல் பிறர்க்காக உணரும் தன்மை உன்னிடத்து இல்லை யாயின் நீ ஒன்றுக்கும் உதவாதவன் ஆகிருய். உன்னிடத்து இருப்பது உலர்ந்து வறண்டுபோன அறிவு. பட்டுப்போன மரம் போன்றுதான் நீ இருப்பாய். மற்று, உனக்கு மொழி யொன்றும் தெரியாதிருக்கலாம், நூல் ஒன்றும் படிக்க உனக்கு இயலாதிருக்கலாம். எனினும் உனது உள்ளத்தில் உணர்ச்சி இருக்குமாகில், நீ நல்வழியில் ஏகுகிருய். ஈசன் உனக்கு அருள் புரிவார்.

உலக சரித்திரத்தைப் படித்துப் பார்ப்பாயாக. ஆங் காங்கு தோன்றியுள்ள மதாசாரியர்கள் சக்தி மிக வாய்க்கப் பெற்றவர்களாய் இருந்தனர். அவர்களுக்கு அப்பரமசக்தி எங்கிருந்து வந்தது? கூர்மையான புத்தி அல்லது பகுத்தறி வினின்று அவர்களுக்கு அவ்வல்லமை வந்துவிட்டதா? தத் துவ தர்சனத்தைப்பற்றி அவர்களில் யாராவது மதிநுட்பம் வாய்ந்த புஸ்தகம் ஏதாவது எழுதினர்களா? தர்க்கசாஸ் திரத்தின் நுண்பொருளைப்பற்றி அவர்களில் யாராவது நூல்

ஏதாவது இயற்றியிருக்கிருரா? அவர்களில் ஒருவராவது அப்படிச் செய்யக்கிடையாது. சில சொற்களை மாத்திரம் அவர்கள் இயம்பியுள்ளார்கள். ஏசுநாதர் போன்று உள்ளத்தில் நீ உணர்ச்சிகொள்; அப்பொழுது நீயும் ஓர் ஏசு ஆய்விடுவாய். புத்தரது உள்ளத்தில் ஊற்றெடுத்த உணர்ச்சி உனக்கும் வருக. அப்பொழுது நீயும் அவர்போன்று சர்வசக்திமான் ஆய்விடுவாய். ஆழ்வார்கள் உணர்ந்ததுபோன்று நீயும் உணர்க. அதனுல் நீயும் ஓர் ஆழ்வான் ஆய்விடுவாய். நாயன்மார்கள் போன்று உள்ளம் உருகுக. பின்பு நீயும் அக்கூட்டத்தில் ஒருவன் ஆய்விடுவாய். உள்ளத்தின் உணர்ச்சியே உயிரை ஓம்புகிறது. வலிவைப் பெருக்குகிறது, வீரியத்தை வளர்க்கிறது. உணர்ச்சியற்ற ஒருவன் நுண்ணறிவு படைத்தவனுக இருக்கலாம். அதனுல் அவன் கடவுளை அடைந்துவிட முடியாது. நடப்பதற்கு உதவாத கால்களை உடைத்திருப்பதற்கு ஒப்பானது வெறும் அறிவுத் திறமை.

கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

உணர்ச்சியானது உட்புகுந்து உந்துகிறபொழுது அவயவங்கள் தத்தம் வேலைகளைச் செய்யும். உணர்ச்சியோடு கூடிய அறிவே பிறரது உள்ளத்தைத் தொடவல்லதாகிறது. இவ்விதத்திலேதான் உலகெங்கும் காரியங்கள் நிகழ்ந்து வருகின்றன. இதைத்தான் ஒவ்வொருவரும் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். வேதாந்தம் புகட்டுகிற சன்மார்க்கத்திலே, நீதி நெறியிலே இது மிக மிக முக்கியமானது; இது முற்றிலும் அனுஷ்டானத்துக்கு உரியது. மதாசாரியர்கள் மகாபுருஷர்கள் ஆனது போன்று ஒவ்வொரு மனிதனும் மகாபுருஷன் ஆகலாம்;

ஆகியே தீர வேண்டும் என்கிறது வேதாந்தம். உன்னுடைய செயலுக்கு சாஸ்திரம் ஒருநாளும் பிரமாணமாகாது; ஆனல் சாஸ்திரம் பாராட்டத்தக்கது என்று அதற்கு மதிப்புக்கொடுப்பது உனது வாழ்வேயாம். நீ அடைந்துள்ள, அடையக்கூடிய மேன்மைகளையெல்லாம் சாஸ்திரம் எடுத்துக் காட்டுவதால் அதற்கு மதிப்பு உண்டாகிறது. ஒரு புஸ்தகத்தில் பகர்ந்திருப்பது உண்மையென்று உனக்கு எப்படித் தெரியும்? அது புகட்டுகிற உண்மையின் சொரூபம் நீ. உன் சொந்த அனுபவத்தில் நீ அதை உணர்கிருய். மகிமை வாய்ந்த உனது ஆத்ம சொரூபத்தை சாஸ்திரம் முறையாக எடுத்து இயம்புவதால் அதை நீ அங்கீகரிக்கின்ருய். இங்ஙனம் வேதாந்தம் உன் பெருமையை முரசறைகிறது. உலகத்தை உய்விக்கவந்த நிறை ஞானிகள் இங்கு இருந்திருக்கிருர்கள் என்பதற்கு அத்தாட்சி யாது உளது? ராமன், கிருஷ்ணன் போன்ற அருளாளர் இங்கு அவதரித்திருக்கிருர்கள் என்பதற்குப் பிரமாணம் எங்கே? நாம் ஒவ்வொருவரும் அவர்போன்று ஆகலாம் என்பதே அதற்கு அத்தாட்சியாகும். நாம் அவர்போன்று ஆகக்கூடுமானல், நமக்கு முன்னேராக அவர்கள் ஏன் இருந்திருக்கமுடியாது? ராமன், கிருஷ்ணன் முதலாயினேர் வெறும் கற்பனையாக உண்டு பண்ணப்பட்டவர் அல்லர், உண்மையாகவே உடல் தாங்கி வாழ்ந்திருந்தவர்கள் என்பதை நமது சொந்த மகிமையைக் கொண்டே நாம் அறிந்துகொள்ள முடியும். ஓர் ஆத்மாவிடத்துள்ள ஈசுவர சம்பத்தே மற்றோர் ஆத்மாவிடத்திருக்கிறது. இனி, நம்மிடத்துள்ள ஈசுவர சம்பத்தை நாம் உணர முடியுமாதலால் அப்பெருமக்களிடத்தும் ஈசுவர சம்பத்து இருந்தது என்று நாம் முடிவுகட்டுகிறேம். அது மட்டுமல்ல, நம்மிடமிருக்கிற தெய்வத்தன்மையே தெய்வமிருக்கிறது

என்பதற்கு அத்தாட்சியாகிறது. தெய்வ சம்பத்து உன்னிடத்து ஒன்றும் இல்லை யெனின் பிறகு தெய்வத்தைப் பற்றிய பேச்செல்லாம் பொய்யாகப் போய்விடும். நீயே தெய்வம், நீயே பிரம்மம் என்று அறிதல் வேண்டும். நீ பிரம்மம் அல்லையென்று நிரூபிக்கப்படுமானால் பின்பு பிரம்மம் எப்பொழுதும் இருந்ததில்லை, இனி இருக்கப்போவதுமில்லை என்பது நிரூபிக்கப்படும். இதுவே நாம் கடைப்பிடிக்க வேண்டிய குறிக்கோள் என்கிறது வேதாந்தம். நாம் ஒவ்வொருவரும் ஒரு பிரம்மஞானியாகவேண்டும். அறிந்திருக்கும்பொழுதும் அறியாதிருக்கும் பொழுதும் யாண்டும் நாம் பிரம்ம சொரூபம். உன் சொரூபத்தை நீ உணர்வாயாக. ஆத்மாவுக்கு ஆகாதது ஏதேனும் உண்டு என்று எண்ணாதே. அப்படி எண்ணுவது பரம நாஸ்திகமாகும். பாபம் என்று சொல்லுவது ஏதேனும் இருக்குமாகில்—உன்னை நீ பலவீனன் என்று சொல்லிக்கொள்ளுதலும், மற்றவர்களைப் பலவீனர் என்று சொல்லுதலும்—இதுவே பாபமாம்.

சாந்தோக்ய உபநிஷதத்தின்கண் புராதனமான கதையொன்று அமையப்பெற்றுள்ளது. சிறுவன் ஒருவன் எப்படி பிரம்ம ஞானம் பெறலாயினன் என்னும் வரலாறு அதில் அடங்கியிருக்கிறது. அக்கதையின் போக்கில் பண்பாடு ஒன்றுமில்லை. கொச்சையான கதை யென்றே அதைக் களைந்து விடலாம். ஆயினும் உயர்ந்ததொரு கோட்பாடு அதன்கண் அடங்கியிருக்கிறது. சிறுவன் ஒருவன் தன் தாயிடம் சென்று சொல்லுவானாயினன்: “அம்மா, நான் வேதம் கற்க விரும்புகிறேன். என் தந்தையின் பெயர் என்ன? நமது ஜாதி, குலம், கோத்திரம் ஆகியவற்றை எனக்குச் சொல்.”

அப்பாலகனைப் பெற்றெடுத்தவள் பாணிக்கிரகணம் பண்ணிக்கொண்டவள் அல்லள். ஆகவே யாரையும் மணந்து

கொள்ளாத மாதின் மகன் அவன். விலைமாது ஒருத்தியின் மகனுக்கு பாரதவர்ஷத்தின் சமுதாயத்திலே கண்ணியமான ஸ்தானம் ஒன்றும் கிடையாது. ஜாதியற்றவனாக அவன் கருதப்படுகிறான். மங்களகாரியம் எதற்கும் அவன் உரியவன் ஆகான். இனி, வேதம் கற்பது அவனுக்கு எப்படிச் சாத்தியமாகும்? இதையெல்லாம் அறிந்திருந்த அப்பாவியாகிய அன்னை இயம்புவாளாயினள்: "என் இளமையிலிருந்து பலர் வீட்டில் நான் பணிவிடை செய்து வந்துள்ளேன். அதற்கிடையில் உன்னையும் நான் ஈன்றெடுத்தேன். உன் தந்தை இன்னார் என்று நான் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. அதற்குமேல் உன்னுடைய கோத்திரம் முதலியவற்றை நான் எப்படிப் பகரமுடியும்? என் பெயர் ஜாபாலா என்பது மட்டும் எனக்குத் தெரியும்."

பிறகு பாலகன் ரிஷி ஆச்ரமத்துக்குப் புறப்பட்டுப் போனான். ஆங்கு தான் பிரம்மசாரியாக இருக்கவேண்டும் என்ற விண்ணப்பத்தை அவன் வெளியிட்டான். சிஷ்யனாக விரும்பிய அவனிடம், "உன் பிதாவின் பெயர் என்ன? உன் கோத்திரம் யாது?" என்ற கேள்விகள் கிளம்பி வந்தன. தாயிடமிருந்து மகன் எதைக் கேட்டு வந்தானோ அதை அப்படியே எடுத்து உரைத்தான். அத்தகையவனை சிஷ்யனாக ஏற்றுக்கொள்வது பொருந்தாது என்று ஆச்ரம வாசிகளில் பலர் ஆக்ஷேபித்தனர். ஆயினும் ஆச்ரமத் தலைவரான ரிஷிபுங்கவர் கருத்து வேறு விதமாயிருந்தது. "உன்னுடைய சொந்த மானம் அழிந்து, மரியாதையும் போய்விடுதற்கு ஏதுவான மெய்ம்மையை நீ மொழிகின்றாய். அவமானத்துக்கு அஞ்சாது அறநெறியில் செல்லும் அந்தணன் நீ. உன் போன்ற சத்தியவாதி ஒருவனே பிராம்மணன் ஆவான். உன்னை ஒரு பிராம்மணனாக நான்

அங்கீகரிக்கிறேன்; உன்னை சிஷ்யனாகவும் ஏற்றுக்கொள்கிறேன்"— இங்ஙனம் அவர் வேசி மகனது வாய்மைக்கு வெகுமதி கொடுத்தார். அவனைத் தம் அருகில் வைத்துக் கொண்டு அவனுக்குக் கல்வியும் புகட்டினார். சத்தியகாமன் என்பது அச்சிறுவன் பெயர்.

பண்டைக்காலத்து இந்தியாவில் கையாளப் பெற்ற கல்வியின் தனிச் சிறப்புக்கள் சில இச்சிறுவனது பயிற்சியினின்று நமக்குப் புலப்படுகின்றன. மெலிந்து வலிவற்றுப் போன நானூறு பசுக்களைப் பிடித்து குருவானவர் சத்தியகாமனிடத்தில் பராமரிப்புக்காகக் கொடுத்து அவனை வனத்துக்கு அனுப்பினார். அவர் ஆணையின்படி அவன் ஆங்குச்சென்று கொஞ்ச காலம் வசித்திருந்தான். பசுக்கள் எண்ணிக்கையில் ஓர் ஆயிரமாகப் பெருகியபின் திரும்பி வரவேண்டும் என்ற உத்தரவும் அவனுக்குப் பிறந்திருந்தது. ஆண்டுகள் சில அங்ஙனம் கழிந்தன. மாட்டு மந்தையிலே கொழுத்த காளையொன்று சத்தியகாமனிடம் செப்பிய செய்தியொன்றை அவன் செவியுற்றான். "எண்ணிக்கையிலே ஓராயிரம் ஆய்விட்டோம். எங்களை உன் குருவினிடம் திருப்பி யோட்டிச் செல்வாயாக. பிரம்மத்தைப்பற்றிச் சிறிது நான் உனக்குப் புகட்டுகிறேன்," என்றது அவ் எருது. "பிரபுவே புகட்டும்," என்றான் சத்தியகாமன். மேலும் எருது இயம்பிற்று: "கிழக்குத்திக்கு ஆகிறது பிரம்மத்தின் ஓர் அம்சம்; மேற்குத்திக்கு பிரம்மத்தின் ஓர் அம்சம்; வடக்குத்திக்கு பிரம்மத்தின் ஓர் அம்சம்; தக்ஷிண திக்கு பிரம்மத்தின் ஓர் அம்சம். நான்கு திக்குகளும் பிரம்மத்தின் நான்கு அம்சங்கள் ஆகின்றன. பிரம்மத்தைப்பற்றி இனி அக்னியானது உனக்குக் கொஞ்சம் எடுத்து ஓதும்." அக்னி அக்காலத்தில் பிரம்மத்தின் பெரியதொரு சின்னமா

யிருந்து வந்தது. ஒவ்வொரு பிரம்மச்சாரியும் அக்னியை மூட்டி அதன்கண் ஆகுதியைப் படைத்து வந்தான். காலையின் சொற்படி சத்தியகாமன் அடுத்த நாள் குரு கிரகத்தை நோக்கிப் பசுமந்தையை ஓட்டிக்கொண்டு புறப்பட்டான். அன்று மாலையில் அக்னியில் ஹோமம் செய்து அதனெதிரில் அவன் நிஷ்டை புரிபவனாய் அமர்ந்திருந்தான். அப்பொழுது வேள்வித் தீயினின்று, "சத்தியகாமா" என்ற அழைப்பு வருவதை அவன் கேட்டான். "பிரபுவே பகர்ந்தருளும்" என்று சத்தியகாமனும் வேண்டிக் கொண்டான். இது போன்று இயற்கையினின்று அசரீரியாக வாக்குகள் பல தோன்றுவதைப் பலர் கேட்டிருக்கின்றனர். "சத்தியகாமா, பிரம்மத்தைப் பற்றி உனக்குச் சிறிது புகட்ட இங்கு நான் வந்துள்ளேன். இந்த மண்ணுலகம் பிரம்மத்தின் ஓர் அம்சம். அந்தரிக்ஷம் அல்லது இடைவெளியானது பிரம்மத்தின் ஓர் அம்சம்; சுவர்க்கம் பிரம்மத்தின் ஓர் அம்சம். சமுத்திரம் பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. பிரம்மத்தைப்பற்றி மேலும் ஹம்ஸப்பறவை யொன்று உனக்குச் சிறிது புகட்டும்"— இப்படி நெருப்பு நவின்றது. சத்தியகாமன் தொடர்ந்து பயணம் போய்க்கொண்டிருந்தான். அடுத்த நாள் மாலையில் அவனுடைய அக்னிஹோத்ரம் முடிந்ததும், ஹம்ஸம் அல்லது அன்னப்பறவை அவனிடம் வந்தது. "பிரம்மத்தைப்பற்றி நான் உனக்குச் சிறிது புகட்டுகிறேன். ஹே சத்தியகாமா, நீ உபாசிக்கின்ற இந்த அக்னியானது பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. சூரியன் பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. சந்திரன் பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. வித்யுதம் அல்லது மின்னல் பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. மத்கு என்னும் பறவை பிரம்மத்தைப்பற்றி உனக்கு மேலும் கொஞ்சம் புகட்டும்"—இப்படி அன்னப்பறவை உபதேசித்துவிட்டுப்

போய்விட்டது. அடுத்த நாள் மாலையில் மத்கு பக்ஷி வந்தது. அது உபதேசிப்பதை சத்தியகாமன் கேட்டான். "பிரம்மத்தைப்பற்றி நான் சிறிது உனக்குச் சொல்லுகிறேன். பிராணன் பிரம்மத்தின் ஓர் அம்சம்; சக்ஷுஃ அல்லது கண் பார்வை பிரம்மத்தின் ஓர் அம்சம்; சிரவணம் அல்லது கேட்டல் என்பது பிரம்மத்தின் ஓர் அம்சம்; மனம் என்பது பிரம்மத்தின் ஓர் அம்சம்," இதையெல்லாம் கேட்டுவிட்டு இளைஞன் குருவின் முன்னிலைக்கு வந்து பணிவுடன் வணங்கி நின்றான். அவன் குருவின் கண்ணெதிரில் தென்பட்டதும், "சத்தியகாமா பிரம்ம ஞானியின் முகம்போன்று உன்முகம் ஜொலிக்கிறது. மகனே உனக்கு ஞானம் புகட்டியது யார்?" என்று ரிஷி வினவினார். "மானுடர் அல்லாதார் மொழியக் கேட்டேன் ஐயா," என்றான் சத்தியகாமன். மேலும் அவன் சொன்னதாவது: "தேவரீரே திருவுள்ளங்கொண்டு எனக்கு மேலும் உபதேசித்தருள வேண்டும். ஏனென்றால் குருவிடமிருந்து பெறும் ஞானமே மெய்ஞானம் என்று தம்போன்ற பெரியார் பகரக்கேட்டுள்ளேன்." பல தேவதைகளிடமிருந்து சத்தியகாமன் கற்றிருந்த அதே பிரம்ம ஞானத்தை குரு ஊர்ச்சிதப்படுத்தினார். மேலும் கற்கவேண்டியது ஒன்றுமில்லை. கற்க வேண்டியது கற்றாய்விட்டது.

சத்தியகாமனுக்குக் காளைமாடு புகட்டியதும், நெருப்பு உபதேசித்ததும், பறவைகள் பகர்ந்ததும் ரூபகமாக அமைந்தவைகளாம். அவைகளை உருவகம் என்று ஒதுக்கிவைத்துவிட்டு, அவைகளினுள் அடங்கியுள்ள புராதனமான உட்கருத்தை ஓர்ந்து பார்க்க வேண்டும். மேலான ஒரு கோட்பாடு இவ்வரலாற்றிலே விதைபோன்ற ஒரு நுண்ணிய வடிவத்தில் இருக்கிறது. வெளியுலகிலிருந்து வெவ்வேறு வடிவங்கள் வந்து புகட்டிய போதனைகளெல்லாம் உண்மையில் மனத்

துக்குள்ளே மறைந்திருந்தவைகளாம். இத் தத்துவத்தை நாம் நன்ருக ஆராய்ச்சி செய்திருக்கிறேம். ஆகையால் அசரீரியாக வெளியில் கேட்கிற பேச்சுக்களெல்லாம் உண்மையில் நம் உள்ளத்தினின்று கிளம்புபவைகளாம். பிரம்மத்தைப் பற்றிய உண்மைகளைத் தான் கேட்டுவந்ததாக சத்தியகாமன் நம்பினன். அவன் கேட்டது உண்மை. ஆனல் மாடும் பறவையும் தீயும் பகர்ந்தனவென்று அவன் விளக்கியது சரியல்ல. தான் கேட்ட பேச்சுக்களெல்லாம் வெளியுலகினின்று வந்தவைகளாக அவன் வியாக்யானம் பண்ணினன். உண்மையில் அவை யாவும் அவனுடைய உள்ளத்தினின்று வந்தவைகளாம். மற்ருெரு தத்துவம் இதிலிருந்து நமக்குக் கிடைக்கிறது. ஞான சாதனங்களை அனுஷ்டித்து பிரம்ம சாக்ஷாத்காரம் பண்ணுதல் நமக்கு சாத்தியம் என்பதாம். அது, சமயக்கோட்பாடுகளை என்னென்ன பாங்கில் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரலாம் என்று உலகத்தவர் துருவி ஆராய்ந்து பார்க்கின்றனர். அதற்கு இணங்க நமது தினசரி வாழ்க்கையில் இக்கோட்பாடுகளை மேலும் மேலும் அனுஷ்டானத்துக்குக் கொண்டுவரலாம் என்பதை இது போன்ற கதைகளில் காண்கிறேம். எந்தெந்தப் பொருள்களை மாணக்கர் நன்கு அறிந்திருந்தனரோ, அவைகள் வாயிலாகவே பிரம்மஞானம் அவர்களுக்குப் புகட்டப்பட்டது. எந்த வேள்வித்தீயை அவர்கள் வளர்த்து வந்தார்களோ அது பிரம்ம சொருபம். எந்த மண்ணுலகில் அவர்கள் வசித்து வந்தார்களோ அது பிரம்மத்தின் ஓர் அம்சமாகிறது. இப்படியெல்லாம் அவர்களுக்குப் படிப்படியாக ஞானம் புகட்டப்பட்டது.

பிரம்ம ஞானத்துக்கேற்ற மற்றுமொரு கதை வருகிறது. அது உபகோசல கமலாயணன் என்பவனைப் பற்றியது.

அவன் இந்த சத்தியகாமனுடைய சிஷ்யன். சத்தியகாம னிடம் அவன் ஞானம் கற்கச்சென்று சிறிது காலம் ஆங்கு குருகுலவாசம் செய்து வந்தான். அப்படியிருக்கையில் ஒரு யாத்திரையில் ஈடுபட்டு சத்தியகாமன் வெளியே போய்விட் டார். சில நாளைக்குப்பிறகு சிஷ்யன் மனமுடைந்தவனாய்ப் பெருந்துயரத்தில் மூழ்கிக்கிடந்தான். உணவு உண்பதை யும் அவன் நிறுத்திவிட்டான். அவன் அன்னபானம் இல் லாது இருப்பதற்குக் காரணம் யாது என்று குருபத்தினி அவனிடம் வந்து கேட்டாள். "நான் படும் மனத்துயரத்தால் எனக்கு உணவில் நாட்டம் வரவில்லை," என்றான் சிஷ்யன். எந்த அக்னியில் அவன் ஹோமம் செய்துவந்தானோ அந்த அக்னியிலிருந்து ஒலியொன்று கிளம்புவதாயிற்று. "பிரா ணன் அல்லது உயிர் பிரம்மம், ஆகாசம் பிரம்மம்; சுகம் அல்லது இன்பம் பிரம்மம். பிரம்மத்தை நீ அறிவாயாக." தான் கேட்ட உபதேசத்துக்கு மாணாக்கன் விடை கொடுத் தான்: "பிராணன் பிரம்மம் என்பதை ஐயா, நான் அறி கிறேன். ஆனால் அந்த பிரம்மம்தான் ஆகாசமாகிறது என் பதையும், அந்த பிரம்மம்தான் சுகமாக வடிவெடுத்திருக் கிறது என்பதையும் நான் அறியேன்." அப்பொழுது அவ னுடைய சந்தேகத்துக்கு அக்னி விளக்கம் கொடுத்தது. அதாவது ஆகாசம் என்னும் சொல்லும் சுகம் என்ற சொல் லும் உண்மையில் ஒரு பொருளையே குறிப்பிடுகின்றன. மனத் தகத்து சித் ஆகாசம் என்பது இருக்கிறது. அது உணர்ச் சியே வடிவெடுத்தது. ஆதலால் சுகத்தைப்பற்றிய உணர்ச்சி மனதில் உண்டாகிறது. ஆக, சிதாகாசத்துக்கு இருப்பிடம் நமது உள்ளம் என்னும் பெருங்கோயிலாம். இங்ஙனம் பிராணனாக வடிவெடுத்திருப்பது பிரம்மன். நெஞ்சத்தில் (ஹிருதயத்தில்) சித் ஆகாசமாக வடிவெடுத்திருப்பதும்

பிரம்மன் என்ற கோட்பாடு அக்னியினல் அவனுக்கு உபதேசிக்கப்பட்டது. மேலும் அக்னி அவனுக்குப் புகட்டியதாவது: "இந்த மண், அன்னம், அக்னி, நீ வணங்கும் சூரியன் ஆகிய யாவும் பிரம்மத்தின் சொரூபங்களாம். சூரிய நாராயணனுக இலங்குகிற அதே மூர்த்தி இங்கு நான் என்னும் சொல்லுக்கு இலக்காகவும் இலங்குகிருன். அங்கு, இங்கு எனுதபடி எங்கும் இலங்குவது ஒரே மூர்த்தி. இவ்வுண்மையை அறிந்து இம்மூர்த்தியை தியானிப்பவனுடைய பாபங்கள் எல்லாம் போய்விடுகின்றன. இப்படி தியானிப்பவனுக்குத் தீர்க்காயுளுண்டாகிறது. இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று சொல்ல அவனுக்கே இயலும். திக்கு, திசையெங்கும் வியாபித்திருக்கும் பிரம்மன், சந்திரனுக வடிவெடுத்திருக்கும் பிரம்மன், நக்ஷத்திரங்களாக வடிவெடுத்திருக்கும் பிரம்மன், நீர் ஆக வடிவெடுத்திருக்கும் பிரம்மன்—அதே பிரம்மன் நான். இப்பிராணனிலே, ஆகாசத்திலே, சுவர்க்கங்களிலே, மின்னலிலே வீற்றிருக்கும் அதே பிரம்மன் நான்." சமயக் கோட்பாடுகளைப் பழக்கத்துக்குக் கொண்டு வரும் பாங்கை இங்கேயும் நாம் காண்கிறோம். அக்னி, சூரியன், சந்திரன் போன்ற எத்தகைய தேவர்களை அவர்கள் வணங்கிக் கொண்டிருந்தார்களோ, எத்தகைய சொற்களைக் கேட்டுப் பழகியிருந்தார்களோ, அத்தகையவைகளையே முகாமையாக வைத்துக்கொண்டு புதிய வரலாறுகள் வடிவெடுத்து வருகின்றன. இந்த வரலாறுகள் வாயிலாகப் பிரபஞ்சப் பொருள்களுக்கு விளக்கங்கள் வந்தமைகின்றன; அவைகளின் மேலாம் சொரூபங்களும் நமக்குக் காண்பிக்கப் படுகின்றன. அனுஷ்டான பூர்வமாயிருப்பதும், உண்மையை உள்ளபடி விளக்குவதுமாகிய வேதாந்தக் கோட்பாடு இதுவேயாம். மாயப் பிரபஞ்சத்தை மித்தை யென்று அது

புறக்கணிப்பதில்லை. மற்று, அதன் எதார்த்த நிலையை அது விளக்கிக் காட்டுகிறது. ஜீவாத்மனை அது மித்தையென்று அழித்துவிடுகிறதில்லை; அவனுடைய எதார்த்த நிலையை விளக்கிக் காட்டுகிறது. மனிதனுடைய வியக்தியை அது ஒழித்துவிடுகிறதில்லை. ஆனால் அந்த வியக்தியை விளக்கி அதன் நிஜ போதத்தை நிலைநாட்டுகிறது. இப்பிரபஞ்சம் வீணானது என்றும் அது மித்தை அல்லது பொய்யானது என்றும் வேதாந்தம் புகட்டுகிறதில்லை. இப்பிரபஞ்சத்தின் உண்மை நிலையை உள்ளபடி அறிந்துகொண்டால் அது நமக்குத் தீங்கு ஒன்றும் செய்யாது. சத்தியகாமன் கேட்ட ஒலியானது எதையும் பொய் யென்று பகரவில்லை. அவன் வணங்கிய வேள்வித்தீயோ, சூரியனோ, சந்திரனோ, மின்னலோ, வேறு எப்பொருளோ தவறுதலானது என்ற பேச்சு எழவில்லை. அதற்கு மாறாக அந்த ஒலி என்ன பகர்ந்ததென்று பார்ப்போம். சூரியனிடத்திலும், சந்திரனிடத்தும், மின்னலிலும், அக்னியிலும், பூமியிலும் இருக்கும் அதே பிரம்மன் மனிதனிடத்திலும் இருக்கிறது. இதன் விளைவாக இயற்கையைப்பற்றிய காட்சியானது தெய்வீக காட்சியாக உருவெடுத்து விடுகிறது. சத்தியகாமனுக்கு நிகழ்ந்த அனுபவம் இதுவேயாம். அவனுக்கு ஞானம் வருதற்கு முன்பு அக்னியானது ஹோமத்தில் ஆஹுதிகளை ஏற்றுக்கொள்ளும் ஜட அக்னியாயிருந்தது. ஞானம் வந்த பிறகு அதே அக்னி ஈசுவர சொரூபமாக வடிவெடுத்துவிட்டது. பூமி புதிய வடிவெடுத்து விட்டது. பிராணனுடைய காட்சி மாறிவிட்டது. சந்திரன், சூரியன், நக்ஷத்திரங்கள், மின்னல் ஆகிய அனைத்தும் சொரூபத்தில் வேறுவிதமாகிவிட்டன. எல்லாம் பிரம்மமயமாகத் தென்பட்டன. அவைகளின் எதார்த்த வடிவம் அப்பொழுது விளங்கிற்று. வேதாந்தத்தின் நோக்கமே

பொருளை உள்ளபடி காணுதலாம். நமது அக்ஞான நிலையில் அது நமக்குக் கொடுக்கிற காட்சி மெய்க்காட்சியாகாது. பொருளின் மெய்யான நிலையைக் காண்பது அறிவு. எல்லாம் பிரம்ம சொரூபமாயிருப்பதுதான் பொருள்களின் மெய்யான நிலை.

உபநிஷதங்களில் மற்றொரு பாடம் புகட்டப்படுகிறது. "கண்களில் ஒளிர்விட்டுக்கொண்டு இருப்பது எதுவோ அது பிரம்மம். அது அழகே வடிவெடுத்தது, ஜோதிர்மயமானது; இவ்வுலகங்கள் அனைத்திலும் அவ் ஒண்பொருள் ஒன்றே ஒளிர்ந்துகொண்டிருக்கிறது." பாஷியக்காரர், அதாவது விரிவுரையாளர் ஒருவர் இதன் கருத்தை விவரித்து விளக்குகிறார். எந்த சான்றோன் ஒருவனுடைய வாழ்வு புனிதமே வடிவெடுத்ததாகிறதோ அவனுடைய மேனி முழுதிலும் ஒளியொன்று வீசுகிறது. கண்களில் அதன் கதிர்கள் நன்கு ஒளிர்கின்றன. சக்ஷுர் ஜோதி அல்லது கண்ணொளி என்பதன் பொருள் அதுவாம். உள்ளிருக்கும் ஆத்ம பிரகாசமே அத்தகைய ஒளியாக வெளியில் பரவுகிறது. எங்கும் வியாபகமாயிருப்பதும் அதே ஆத்ம பிரகாசமாம். வெவ்வேறு கிரஹங்களிலும், நக்ஷத்திரங்களிலும், சூரியர்களிலும் ஜொலித்துக் கொண்டிருப்பது அதே ஆத்ம பிரகாசமாம்.

பிறப்பு என்றால் என்ன, இறப்பு என்றால் என்ன, வாழ்வு என்றால் என்ன ஆகிய இவை போன்ற விஷயங்கள் மிகவும் பண்டைக் காலத்து நூல்களாகிய உபநிஷதங்களில் நன்கு விளக்கப்படுகின்றன. தத்துவ விசாரம் செய்கின்றவர்களுக்கு அந்த நூல்கள் ஊக்கம் தருவனவாகின்றன. சுவேதகேது என்னும் ரிஷி புத்திரன் பாஞ்சால நாட்டையாண்டுவந்த வேந்தனிடம் போனான். அங்ஙனம் வந்த விப்பிர வாலிபனிடம் வேந்தன் வினவினதாவது: "மண்ணுலகி

னின்று மாண்டொழிந்தார் எங்குச்செல்கின்றனர் என்பது உனக்குத் தெரியுமா? மண்ணுலகுக்கு அவர்கள் மீண்டும் எப்படி வருகின்றனர் என்பது உனக்குத் தெரியுமா? மறு வுலகம் நிறைவு எய்தாதிருப்பதற்குக் காரணம் உனக்குத் தெரியுமா?'' இவ்வினுக்களுக்கு விடை தெரியவில்லையென்று மைந்தன் மொழிந்தான். பதில் உரைக்கத் தெரியாத இளை ஞன் தன் தந்தையிடம் ஓடிப்போய் அதே கேள்விகளைக் கேட்டான். ''இதொன்றும் எனக்குத் தெரியாது'' என்று தந்தையும் ஒத்துக்கொண்டார். பிறகு இருவரும் அரசனிடம் வந்தார்கள். வெறும் வேள்வித்தீயை வளர்த்துக்கொண் டிருப்போர்க்கு இவ்விஷயம் விளங்காது. வேந்தர்களுக்கே இந்த ஞானம் விளங்குவதாயிற்று. ஆகையினுல்தான் அவர் கள் அவனியை ஆண்டுவந்தார்கள் என்று பாஞ்சால மன் னன் பகர்ந்தான். அதைக்கேட்ட பிதாவும் பிள்ளையும் பார்ஆளும் வேந்தனுக்குப் பணிவிடைசெய்து அவன் அரு கில் கொஞ்சகாலம் வசித்திருந்தனர். அவர்கள் சிரத்தை யைக்கண்டு மகிழ்வுற்ற மன்னன் அவர்களுக்கு உபதேசம் செய்ய மனம் கொண்டான். ''ஓ கௌதமரே, நீர் எந்த அக்னியை உபாஸிக்கின்றீரோ அது உண்மையில் மிகக் கீழ்த்தரமான பொருள். இந்த புவனம் அந்த அக்னி சொரூபமாயிருக்கிறது. ஸம்வத்ஸரம் அல்லது ஆண்டுகளும் அருக்கனும் அதன் விறகுக்கட்டை (சமிதை) வடிவெடுக்கின் றன. கதிர்களும் இரவும் அதன் புகை போன்றவை. பகல் அதன் சுவாலை. திக்குகள் அனைத்தும் அதன் சிகை அல்லது கொழுந்துகள் ஆகின்றன. கோண திசைகளெல்லாம் அதன் (விஸ்புலிங்கம்) தீப்பொறிகள் ஆகின்றன. நக்ஷத்திரங் களின் நிலைமையும் அத்தகையது. சந்திரனே தழல் ஆகி றது. இத்தகைய ஹோமாக்கினியில் திருப்தியடைந்துள்ள

தேவர்கள் மழையை ஆஹுதியாகப் படைக்கின்றனர். அன்னம் ஏராளமாயுண்டாவது அதன் விளைவு ஆகும்.'' ராஜா இங்ஙனம் நானுவித உபதேசங்களைச் செய்தருளினன். கோமகன் சொன்னதின் கருத்து யாதெனில்: ''ஏ கௌதமரே, கைப்பிடி விறகை வைத்துக்கொண்டு சிறிய வேள்வித் தீயில் சிறிய செயல்புரிந்து சிறுமையில் நின்று விடவேண்டாம். விசுவம் முழுதிலும் வேள்வியொன்று ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மண்ணுலகத்தவரும் அப் பெரு வேள்வியில் பங்கெடுத்துக்கொண்டிருக்கின்றனர். அண்டமெங்கும் நிகழும் அப்பேர் ஆராதனையில் நீரும் சேர்ந்துகொள்ளும். பிரிந்திருந்து நீர் பண்ணுவதெல்லாம் பயன்படாது போய்விடும்.''

செங்கோல் பிடித்தவன் மேலும் சொல்லுவானுயினன்: ''அக்னிகள் அனைத்திலும், ஹே முனிவரே, மானுட சரீரம் என்னும் அக்னியே ஸர்வ சிரேஷ்டமானது.'' வேதாந்தமானது முற்றிலும் அனுஷ்டானத்துக்குரியது என்பது இந்நிகழ்ச்சியினின்றும் வெளியாகிறது. வெறும் தத்துவ விசாரமாயிருந்தது நல்வாழ்வுக்குரிய சீரிய செயலாக வடிவெடுத்து வருகிறது. அனைத்திலும் பிரம்ம சாக்ஷாத்காரம் பண்ணுவது எப்படி என்பது காண்பிக்கப்படுகிறது. இக் கதைகள் வாயிலாக மற்றுமொரு சிறந்த கோட்பாடு நமக்குப் புகட்டப்படுகிறது. கடவுள் வழிபாட்டுக்குப் பிரதிமை அல்லது உருவம் தேவையாயிருக்கிறது. கோயிலில் இன்று நாம் வைத்து வணங்கும் உருவங்களெல்லாம் மனிதனுல் கற்பிக்கப்பட்டவைகளாம். நடராஜா, அனந்த சயனம் முதலிய பிரதிமைகள் அங்ஙனம் தத்துவத்துக்கு விளக்கமாக மனிதனுல் அமைத்துக்கொள்ளப்பட்டவைகளே யொழிய வேறு அல்ல. அத்தகைய உருவங்களின் மூலம் கடவுளை வணங்க

லாம்; பக்தியிலும் ஞானத்திலும் முன்னேற்றமும் அடைய லாம். இனி, இயற்கையாகவே அமைந்துள்ள உருவங்கள் இருக்கின்றன. அப்படி இயற்கையாக அமைந்துள்ள உருவங்கள் செயற்கை உருவங்களைவிட எப்பொழுதுமே மேலானவைகளாம். கடவுள் வழிபாட்டுக்காகக் கல்லிலோ உலோகத்திலோ உருவம் ஒன்றை நீ உண்டுபண்ணலாம், அதற்குமேல் இயற்கையாக அமைந்துள்ள உருவம் எப் பொழுதும் உன் கைவசம் இருக்கிறது என்பதை நீ மறந்து விடலாகாது. உயிர் வாழும் மனிதன் நடமாடும் தெய்வ மாகிறான். பிரம்ம சைதன்யத்தை மனிதனிடத்துக் காணாத ஒருவன் அதைக் கல் விக்கிரகத்தில் ஒருநாளும் காணமாட் டான். தெய்வ வழிபாட்டுக்காக நீ ஆலயம் ஒன்று கட்டு விக்கலாம். அங்கே தெய்வத்தை எழுந்தருளப்பண்ணி நித்திய பூஜை முதலியன நீ செய்து வரலாம். உனது முன்னேற்றத்துக்கு அத்தகைய ஆராதனை பயன்படும். ஆனால் அதைவிடச் சிறந்ததொரு ஆலயம் இயற்கையாக அமைந்திருக்கிறது. ஆலயங்கள் அனைத்திலும் அதுவே சாலச்சிறந்தது எனலாம். மானுட உள்ளம் பெருங்கோயில்; ஊன் உடம்பு ஆலயம் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

வேதத்திலே கர்மகாண்டம் என்றும் ஞானகாண்டம்என் றும் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. காலக்கிரமத்திலே கர்மகாண்டத்திலே கிரியா விசேஷங்கள் விதவிதமான வடி வெடுக்கஆரம்பித்தன. இம்மை மறுமை நலத்துக்காகவென்று எண்ணிறந்த கர்மானுஷ்டானங்கள் பெருகிக்கொண்டே போகலாயின. வழிதெரியாது ஒருவன் வனாந்தரங்களுள் அகப்பட்டுக்கொள்வது போன்று கர்ம காண்டமானது மனி தனைப் புதிய புதிய கர்மபந்தத்திலே கட்டுப்படுத்தி வந்தது.

அப்பொழுது உபநிஷதங்கள் சொரூபமாக ஞான காண்டம் உதயமாயிற்று. கர்மங்களை யெல்லாம் விட்டொழித்தா லன்றி ஒருவன் ஞானத்தைப் பெறமுடியாது என்பது விவேகிகளது ஞாபகத்துக்குக் கொண்டு வரப்பட்டது. ஞானவான்கள் கர்மத்தை அறவே நிராகரித்து விடவில்லை. அக்கர்மங்களுக்கு அவர்கள் ஞான சொரூபமான வியாக்யா னங்கள் கொடுத்தார்கள். பண்டைக்காலத்தில் விதவித மான யக்ஞங்களும் யாகங்களும் ஓயாது நிகழ்வனவாயின. பாமரர்களிடத்திருந்து அவைகளையெல்லாம் பறித்தெடுத் துக் களைந்துவிடவேண்டுமென்று தத்துவ ஞானிகள் தீர் மானம் செய்யவில்லை. மக்களிடத்தில் அனுஷ்டானத்தில் இருக்கின்ற ஒன்றை அழித்துவிட முயலுவது இக்காலத் திய சீர்திருத்தக்காரர்களது செயலாகும். அது நமது தௌர்ப்பாக்கியமாகும். அழித்துவிடுதல் என்ற நாசகாரி யத்தைச் செய்யாது, மேலானதாக மாற்றிவிடுதல் என்ற நிர்மாண காரியத்தை அக்காலத்து மேலோர் செய்து முடித் தனர். அவர்கள் கையாண்ட முறையாவது: "அக்னி யில் ஆஹுதியைச் சொரிகின்றாயா! மிக நன்று, இதோ மற்றொரு வழிபாட்டு முறையிருக்கிறது பார். இம்மண்ணுல கில் இரவும் பகலும் ஓயாது யாகச்சடங்கு நடந்துகொண்டி ருக்கிறது. அது இயற்கைத்தாயின் பெருவேள்வி. அதை உணர்ந்து நீ அச்செயலில் கலந்துகொள். அதற்கு நிகரான யாகத்தை வேறு எங்கே காணமுடியும்! தெய்வத்துக்கு இதோ நீ ஆலயம் ஒன்று கட்டிவைக்கிறாய். அதனுள் தெய்வம் எழுந்தருளியிருப்பதாகவும் உணர்கிறாய். அது மிக நன்று. மேலும் நினைத்துப்பார். தெய்வமாகிய அப்பெரிய பொருள் இச்சிறு ஆலயத்துக்குள் அடைபட்டிருப்பது போதுமா? அது பொருந்துமா? அகிலாண்டமும் இறைவனு

டைய பெருங்கோயில் ஆகிறது. பார்க்குமிடமெல்லாம் அவனுடைய ஆலயம். அகண்டமாயுள்ள ஆலயமெங்கும் அவன் நீக்கமற எழுந்தருளியிருக்கிறான். எங்கிருந்து வணங்கினாலும் அது ஆலய வழிபாடு ஆகிறது. ஆலயத்தைத் தேடிப் போவதற்குப் பதிலாக நீ இருக்குமிடமெல்லாம் அவனுடைய ஆலயம் என்று உணர்க. விதவிதமான யந்திரங்களையும் சக்கரங்களையும் மாந்தர் மண்ணிலே வரைகின்றனர், தகடுகளில் வரைகின்றனர். வேதிகை அல்லது வேதி என்ற இடம் ஒன்றை வைதிக கர்மங்களுக்காக அமைக்கின்றனர். பலிபீடம் என்ற இடம் ஒன்றை ஆகம கருமங்களுக்காக அமைக்கின்றனர். புறவுலகில் இவைகளையெல்லாம் உண்டு பண்ணி இவைகள் வாயிலாக ஈசனை உபாசித்தல் முறையேயாம். ஆத்ம சாதகனுடைய முன்னேற்றத்துக்கு இத்தகைய வழிபாடுகள் உதவிபுரிகின்றன. மற்று யந்திரம், சக்கரம், வேதி, பலிபீடம் ஆகிய சின்னங்களைவிடப் பன்மடங்கு சிறந்தது மானுட சரீரம் என்னும் சின்னம். அவை யாவும் ஜடப்பொருள். மானுட சரீரத்திலோ சேதனம் மிளிர்ந்துகொண்டிருக்கிறது. அதற்கு நிகரான யந்திரம் பிரபஞ்சத்தில் இல்லை. ஆறு ஆதாரம் அல்லது ஷட்சக்கரம் மானுட சரீரத்தில் நிலைபெற்றிருக்கின்றன. எல்லாவிதமான சத் கர்மங்களுக்குப் பிறப்பிடம் மானுடசரீரம். இந்த உயர்ந்த சின்னத்தை உயர்ந்த செயலுக்குப் பயன்படுத்துதலே ஒப்பற்ற அனுஷ்டானம் என்கிறது வேதாந்தம்."

இப்பொழுது விசேஷமான கொள்கை மற்றொன்று பகரப்படுகிறது. அது அவ்வளவு சுலபமாக விளங்குகின்ற கோட்பாடு அன்று. உபநிஷதத்தின்கண் அது இங்ஙனம் அமையப்பெற்றுள்ளது. நல்வாழ்க்கையும் தியான பலமும் உடைய மனிதன் ஒருவனுக்கு மனம் தெளிவடைகிறது. ஞானத்

துக்கு அவன் தகுந்தவன் ஆகிறான். அத்தகையவனுக்கு மரணம் வரும்பொழுது அவன் அடையும் நிலைகள் பல உண்டு. முதலில் அவன் அர்ச்சி அல்லது ஒளியைப் பெறுகிறான். ஒளியினின்று அவன் பெறுவது பகல். மேலும் அவனுக்கு வருவது சுக்லபக்ஷம் அல்லது வளர்பிறை. அதைத் தொடர்ந்து அவன் அடைவது உத்தராயணம் அல்லது சூரியன் வடதிசைக்குப் போகும் ஆறுமாதகாலம். உத்தராயணத்தினின்று அவன் அடைவது வத்சரம் அல்லது ஆண்டு. வத்சரத்தினின்று அவன் சூரியலோகத்துக்குச் செல்லுகிறான். சூரியலோகத்திலிருந்து அவன் சந்திரலோகத்துக்கு ஏகுகிறான். சந்திரலோகத்திலிருந்து அவன் வித்தியுத்து அல்லது மின்னல் உலகம் மேவுகிறான். மின்னல் உலகினின்று மானுடன் அல்லாத புருஷன் ஒருவன் அவனை பிரம்மலோகத்துக்கு அழைத்துச் செல்லுகிறான். இம் மார்க்கத்துக்கு தேவயானம் என்று பெயர். ஆத்ம சாதனம் புரியும் சான்றோர் செத்துப்போன பின்பு தேவயானம் நண்ணுகின்றனர். மண்ணுலகில் அவர்கள் மீண்டும் வந்து பிறப்பதில்லை. ஈண்டு இயம்பப்பெற்றுள்ள மாசம், வத்சரம் ஆகிய சொற்களின் உட்கருத்து யாது என்று உறுதியாகச் சொல்ல முடியாது. ஒருவேளை இது வெவ்வேறு ஞான பூமிகளைக் குறிப்பதாயிருக்கலாம். சந்திரலோகத்தில் உயிர் வாழ்பவர் உண்டு என்னும் கொள்கை நம் நாட்டில் நெடுநாளாக இருந்து வந்திருக்கிறது. சந்திரலோகத்திலிருந்து உயிர்கள் மண்ணுலகுக்கு எப்படி இறங்கி வருகின்றன என்னும் கோட்பாட்டை நாம் மேலும் ஆராய்வோம். ஞானம் அடையவில்லையெனினும் இப்பிறப்பில் புண்ணிய கர்மம் செய்தவர்கள் போக்கு பிறகு பகரப்படுகிறது. அத்தகைய நல்வினையாளர் மடிந்ததும் முதலில் தூமம் அல்லது புகையின்கண்

செல்லுகின்றனர். பிறகு இரவு, அதன் பிறகு கிருஷ்ண பக்ஷம், பின்பு தக்ஷிணாயனமாகிய ஆறுமாசம், அதற்கப்பால் பித்ருலோகத்தின்கண் அவர்கள் பிரவேசிக்கின்றனர். தென் புலத்தார் இருப்பிடம் என்பது அதுவே. அங்கிருந்து அவர் கள் ஆகாசத்தினுள் நுழைகின்றனர். ஆகாசத்தினின்று அவர்கள் சந்திரலோகத்துக்குப் போகின்றனர். ஆங்கு அன்னவர் தேவர்களுக்கு உணவு ஆகின்றனர். கடைசியாக அவர்கள் தாமே தேவஜன்மம் எடுக்கின்றனர். தங்கள் புண் ணியகர்மம் முடிவுபெறுமளவு அவர்கள் தேவர்களாய் வாழ் கின்றனர். நல்வினைப்பயன் நலிவடைந்ததும் அவர்கள் ஆங் குச் சென்ற வழியிலேயே மண்ணுலகுக்குத் திரும்பி வரு கின்றனர். அப்படி மண்ணுலகுக்கு வருபவர் முதலில் ஆகா சத்தின் வடிவெடுக்கின்றனர். பிறகு வாயு, புகை, மூடுபனி, மேகம் ஆகிய வடிவங்களாக மாறிக் கடைசியில் மண்ணுல குக்கு மழைத்துளிகளாக வருகின்றனர். அப்பால் அவ் வுயிர்கள் உணவுப் பொருள்களுள் பிரவேசிக்கின்றன. தானி யங்களாக உருவெடுத்து வந்தவைகள் உணவாக மக்களின் உடலினுள் சென்று பிறகு அவர்களுக்குப் பிள்ளைகளாகப் பிறக்கின்றன. ஸத்கர்மம் செய்துள்ள ஜீவர்கள் நல்ல வம் சத்தில் வந்து பிறக்கின்றனர். மற்றுத் தீவினையாளரோ கீழான பிறப்பெடுக்கின்றனர். அவர்கள் விலங்குகளாகப் பிறப்பதுமுண்டு. தேவயானத்திலோ பித்ருயானத்திலோ செல்லமாட்டாத ஜீவர்கள் திரும்பத் திரும்ப ஜன்மங்கள் எடுக்கின்றனர். திரும்பத் திரும்ப அவர்கள் மரணத்தையும் அடைகின்றனர். ஆகையினாலேதான் இம் மண்ணுலகம் நிறைவு பெறுவதுமில்லை, உயிர்களில்லாது காலியாய்ப் போய்விடுவதுமில்லை.

இப்போது நாம் பல கருத்துக்களைப் பெறமுடியும். மேலும் கொஞ்சம் ஆராய்ந்தான பிறகு உயிர்களின் போக்கு

வரவைப்பற்றி இன்னும் கொஞ்சம் அதிகமாகத் தெரிந்து கொள்ளவும் கூடும். இதினின்று நாம் முடிவு கட்டக்கூடியது ஒன்று உளது. சுவர்க்கம் என்பது சாசுவதமானதன்று. ஆங்குச் செல்பவர்கள் திரும்பவும் வந்தாகவேண்டும். பிரம்ம ஞானத்தைப் பெறுவது ஒன்றே முடிவான குறிக்கோள். அது நிரந்தரமானது. மற்ற சுவர்க்காதி பதவிகளெல்லாம் நிலையானவைகளன்று. இனி, மக்களுள் ஒரு சிலர் உண்டு. அவர்கள் இன்னும் பிரம்ம ஞானத்தை அடையவில்லை. ஆனால் அவர்கள் இம்மையில் புண்ணிய கர்மங்களை ஏராளமாகச் செய்திருக்கின்றனர். அந்த நல்வினைப்பயனை அனுபவிக்கவேண்டும் என்ற எண்ணமும் அவர்களுக்கு இருந்திருக்கிறது. அன்னவர் காலகதியடையும்பொழுது எங்கு எங்கேயோ சென்று கடைசியாகச் சுவர்க்கம் போய்ச் சேருகின்றனர். ஆங்கு அவர்களுக்கு என்ன நிகழ்கிறது என்றால், இங்கு நாம் மக்களுக்குப் பிள்ளைகளாகப் பிறப்பது போன்று அங்கு அவர்கள் தேவர்களுக்குப் பிள்ளைகளாகப் பிறக்கின்றனர். நல்வினைப்பயன் இடந்தருமளவு ஆங்கு அவர்கள் நெடிது வாழ்ந்திருக்கின்றனர். இதிலிருந்து வேதாந்தத்தின் அடிப்படைத்தத்துவம் ஒன்று வெளியாகிறது. அதாவது நாமரூபம் உடைத்திருப்பவைகளெல்லாம் நிலையற்றவைகளாம். இம் மண்ணுலகம் நிலையற்றது. ஏனென்றால் இதற்கு நாமரூபம் உண்டு. அவ் விண்ணுலகங்கள் நிலையற்றவை. ஏனென்றால் அவைகளுக்கும் நாமரூபம் உண்டு. சாசுவதமான சுவர்க்கம் என்பதில் முரண்பாடு உண்டு. ஏனென்றால் எதற்கெல்லாம் நாமரூபம் உண்டோ, அதற்கு உற்பத்திகாலம், ஸ்திதி காலம், விநாசகாலம் என்பன உண்டு. இது வேதாந்தத்தின் முடிவான சித்தாந்தம். சுவர்க்கங்கள் நிலைபேறு அற்ற

வைகளென்று நீக்கப்படுகின்றன. வேதத்தில் ஸம்ஹிதை என்ற பகுதியொன்று உண்டு. அதில் சுவர்க்கத்தைப்பற்றிய பேச்சு வந்திருக்கிறது. சுவர்க்கத்தை சாசுவதமான பதவியென்று அது ஆதியில் கருதியது. அதே கொள்கை கிறிஸ்துவ மதத்திலும் இஸ்லாமிய மதத்திலும் உண்டு. மறு லோகத்தை மிகமிக ஸ்தூலப்படுத்தும் பாங்கு இஸ்லாமிய மதத்தில் இருக்கிறது. ஆங்கு சிங்காரத் தோட்டங்கள் பல இருக்கின்றனவாம். நதிகளும் நீரோடைகளும் அத் தோட்டங்களில் பாய்ந்துகொண்டிருக்கின்றன. இப்படி அச்சமயம் கற்பிப்பதற்கு காரணமும் ஒன்று உளது. அராபிப் பாலைவனத்தில் நீர் கிடைப்பது மிக அரிது. ஆகவே சுவர்க்கத்தில் வேண்டியவாறு அதைப் பெறலாம் என்று மகம்மதியர் கருதுவதில் பொருள் இருக்கிறது. காலமெல்லாம் ஓயாது மழை பெய்துகொண்டிருக்கிற நாட்டில் பிறந்தவன் ஒருவன் பரலோகத்தை எங்ஙனம் கருதுவான் என்று எண்ணிப்பார்க்க வேண்டும். சுவர்க்கத்தில் சதுப்பு நிலம் கிடையாது; அது உலர்ந்த இடம் என்று அவன் நினைப்பான். அதே பாங்கில் குளிர்நாட்டில் இருப்பவன் விண்ணுலகில் குளிர் இராது என்பான். உஷ்ணப்பிரதேசத்தில் இருப்பவன் வானவர் நாட்டில் வெப்பம் கிடையாது என்று கருதுவான். ஸம்ஹிதையில் சொல்லியுள்ள சுவர்க்கங்கள் சாசுவதமானவைகளாம். ஊன் உடலை உகுத்துவிட்டு ஆங்குச் செல்பவர் அழகியமேனி பெறுகின்றனர். பிறகு முன்னோர்களுடன் அவர்கள் என்றென்றும் இன்புற்று வாழ்ந்திருக்கின்றனர். காலஞ்சென்ற சுற்றத்தாரையும் உற்றார் உறவினரையும் அவர்கள் அவ்வுலகில் சந்திக்கின்றனர். இங்கு உற்றபடி அங்கும் அவர்கள் உயிர்வாழ்கின்றனர். ஆனால் ஒரே ஒரு வித்தியாசம் உண்டு. உம்பர் நாட்டில் துன்பம் கலவாத

இன்பம் இருக்கிறது. இம்மையில் இருக்கின்ற இன்னல்களும் இடைஞ்சல்களும் ஒழிந்துபட்டுப் போய்விடுகின்றன. பாபங்கள் நீங்கிப் புண்ணியமே எஞ்சியிருக்கிறது. இடையரூத இன்பம் துய்த்தல் புண்ணியத்தின் பயனும். இத்தகைய வசதியான வாழ்வு வேண்டும் என்றே பலர் விரும்புகின்றனர். மற்று, வசதியும் உண்மையும் ஒன்ருய் விடமாட்டா. பல சந்தர்ப்பங்களில் உண்மைநிலையானது துவக்கத்தில் இன்பம் கொடுப்பதில்லை, உச்சநிலைக்குப் போன பிறகே உண்மையினின்று இன்பம் பிறக்கிறது. பழையதைக் களைந்துவிட்டுப் புதியதில் புகுதற்கு மானுட இயல்பு துணிகிறதில்லை. நெடுங்காலம் நடைமுறையில் இருந்து வந்ததிலேயே அது நின்றுவிடுகிறது. பழக்கத்தில் இருந்ததைக் கடந்து மேலே செல்லுதற்கு ஊக்கம் உண்டாவதில்லை. புதிய எண்ணம் எண்ணுதற்கும் மனிதன் முந்துவதில்லை. புதிய எண்ணம் என்பது மனதில் புதிய அலையாக வடிவெடுக்கிறது. அதனல் வாழ்க்கையே மாறியமையும்படி நேர்ந்துவிடலாம். மனதோ அத்தகைய மாறுதல் வேண்டாமென்று மறுதலிக்கிறது.

கொள்கையிலே மகத்தானமாறுதல் ஒன்று ஏற்பட்டிருப்பதை உபநிஷத்தின்கண் காண்கிரேம். முன்னேர்களுடன் கூடி சுவர்க்கத்தில் சாசுவதமாக வாழ்ந்திருப்பது முடியாத காரியம் என்று முரசறையப்படுகிறது. ஏனென்றால் நாமரூபமுடைய ஒவ்வொன்றுக்கும் முடிவு என்பதுண்டு. வடிவங்கள் படைத்துள்ள சுவர்க்கங்கள் இருக்கின்றனவென்ருல், காலக்கிரமத்தில் இவைகள் தேய்ந்து மறைந்து போயாக வேண்டும். பல ஜென்மாந்தரங்களாக அவைகள் உருப்பெற்றிருக்கலாம். எனினும் அவைகள் அழிதற்கான காலம் வந்தே தீரும் — சுவர்க்கங்கள் நிலையற்றவை என்ற

கோட்பாட்டுடன் கூடி மற்றொரு கொள்கை தோன்றுவதா யிற்று. மண்ணுலகைவிட்டு ஏகும் ஜீவாத்மாக்கள் திரும்ப வும் மண்ணுலகுக்கு வந்தாகவேண்டும். புண்ணிய கர்மத்தை அனுபவித்து முடிக்கும் வரையில் அவர்கள் விண்ணுலகில் இருக்கின்றனர். அது முற்றுப் பெற்றதும் அவர்கள் மண் ணுலகுக்குத் திரும்புகின்றனர். இக்கூற்றினின்று உண்மை யொன்று தெளிவுறுகிறது. காரணகாரியம் என்னும் கோட் பாட்டைப் பண்டைக்காலத்திலேயே மக்கள் உணர்ந்திருந் தனர் என்பதாம். யுக்தி தர்க்க ரீதியாக இக்கோட்பாடு காலக்கிரமத்தில் புகட்டப்படுவதாயிற்று. ஆனால் அது இங்கு சிறுவர்க்குற்ற மொழியிலே பகரப் பெற்றுள்ளது. இந்த அனுபவங்கள் எல்லாம் மனத்தகத்து நிகழ்பவை என்பதை உபநிஷதங்கள் தெளிவாக்குகின்றன. முதலில் இக்கோட்பாடுகள் அனுஷ்டிக்கப்பட்டன; பிறகு நியாயம் தர்க்கம் கலந்த தத்துவ தர்சனமாக இவை வடிவெடுத்தன. வேதாந்தம் அனுஷ்டானத்துக்கு உரியதா என்னும் கேள் விக்கு நமக்குக் கிடைக்கும் பண்டைக்காலத்து விடை இது வாகும். அதாவது முதலில் அது அனுஷ்டிக்கப்பட்டது. பின்பு அது சாஸ்திரமாக இயற்றப்பட்டது. சுவானுபூதி யில் உணர்ந்த உண்மைகளையே பின்பு நூலாக எழுதி வைத்தனர். முன்னைய முனிவர்களுடன் இந்த மண்ணுல கம் உரையாடிற்று; பறவைகள் பேசின; விலங்குகள் விளம் பின; சூரியனும் சந்திரனும் சம்பாஷித்தன. படிப்படியாக அம்முனிவர்கள் உண்மையை ஓர்ந்தனர். இயற்கையின் உட்பொருளையே அவர்கள் உணரலாயினர். அதற்காக அவர்கள் மனக்குழப்பத்தைக் கிளப்பவில்லை; சம்வாதங்கள் செய்யவில்லை; நவீன மக்கள் செய்வது போன்று பிறர் கருத்துக்களைத் திரட்டியெடுத்துப் புதிய புஸ்தகங்கள்

எழுதவில்லை; ஏற்கனவே இருந்த நூல்களுக்கு வியாக்கியானங்களும் அவர்கள் செய்யவில்லை. பின்பு பொறுமையுடன் ஆராய்ந்தும், விசாரித்தும், சாதனங்கள் புரிந்தும் அவர்கள் உண்மையை ஓர்ந்து உணர்ந்தனர். உண்மையை அறிதற்கு ஏற்ற சாதனங்களை அனுஷ்டிப்பதே அதற்கு அடிப்படையான நிபந்தனையாயிற்று. அன்றைக்கு இருந்ததுபோன்று இன்றைக்கும் சாதனைகள் பல பயிலுதலே தத்துவ தர்சனத்துக்கு உற்ற உபாயமாகும். அன்றாட வாழ்க்கையிலே பழக்கத்துக்குக் கொண்டுவரக்கூடிய சாஸ்திரத்தை சமயம் என்கிறோம். வெறும் வாய்ப்பேச்சோடு அல்லது விவாதத்தோடு நின்றுவிடுகிற சமயம் முன்பு இருந்ததுமில்லை; இனி இருக்கப்போவதுமில்லை. முதலில் அனுஷ்டானங்களை ஒழுங்காகச் செய்துவந்தால் பிறகு ஞானோதயம் தானே உண்டாகிறது. ஜீவாத்மாக்கள் இம் மண்ணுலகுக்குத் திரும்பி வருவனவாயின என்னும் கோட்பாடு ஏற்கனவே வந்துள்ளது. இன்பத்தை அனுபவிக்க வேண்டுமென்று நல்வினையாற்றுபவர் அவ் இன்பம் துய்க்கின்றனர். ஆனால் அப்படிப் பெறும் இன்பம் நிலைத்ததன்று. காரணத்துக்கேற்ற காரியம் என்னும் கோட்பாடு அங்கு நன்கு விளக்கப்பட்டுள்ளது. காரணத்துக்கு மிகைபட்டதாகவோ அல்லது குறைபட்டதாகவோ காரியம் ஆய்விடுவதில்லை. விதைப்புக்கு ஏற்ற விளைவு என்பது அதன் கோட்பாடு. காரணம் வரையறைக்கு உட்பட்டிருக்குமானால் காரியமும் வரையறைக்கு உட்பட்டிருந்தாகவேண்டும். காரணம் நித்தியமானதாயிருக்குமானால் காரியமும் நித்தியமானதாகும். ஆனால் லோக ஹிதத்தின் பொருட்டு ஸத்கர்மம் செய்தல் போன்ற வினைகளெல்லாம் வரையறைக்கு உட்பட்ட காரணங்களாகின்றன. அவைகளினின்று நித்தியமாயுள்ள விளைவு ஒன்றும் உண்டாகாது.

இக்கோட்பாட்டினுடைய மற்ளெரு பகுதியை நாம் இப்பொழுது ஆராய்ந்து பார்க்க வேண்டும். சாசுவதமான சுவர்க்கம் இருக்க முடியாது என்பதற்குக் காரணம் கண்டோம். அதே காரணத்தை முன்னிட்டு சாசுவதமான நரகமும் இருக்க முடியாது. பொல்லாத மனிதன் ஒருவன் இருக்கிருன் என்று வைத்துக்கொள்வோம். அவன் வாழ்நாளெல்லாம் ஓயாது கேடுகளையே செய்து வருகிருன். அந்த மனிதனுக்குச் சொந்தமாயுள்ள நித்திய வாழ்வோடு சீர் தூக்கிஞல் ஒரு பிறவிக் காலம் மிக அற்பமானதாகும். ஒரு பிறவி என்னும் குறுகிய காலத்தில் செய்த குற்றத்துக்கு நிரந்தரமான நரகதண்டனை என்று சொல்லுவது எதற்குச் சமானம்? நிலையற்ற காரணத்தினின்று நிலை பேறுடைய காரியம் உண்டாயிற்று என்பதாகும். அது பொருந்தாது. ஆயுள் காலமெல்லாம் செய்த நல்வினைப் பயனுக ஒருவனுக்கு யாண்டும் நிலைத்துள்ள சுவர்க்கப் பிராப்தி வாய்த்து விடாது. அப்படி வாய்க்கும் என்ருல் எல்லையுள்ள காரணத்துக்கு எல்லையில்லாக் காரியம் என்னும் குற்றம் அதனுல் வந்துவிடும். இனி, மற்ளெரு மார்க்கம் உண்டு. சுவர்க்கப் பிராப்தி, நரகப்பிராப்தியாக மாறி மாறி வரும் மாயப் பிரபஞ்ச வாழ்க்கையைக் கடந்துசெல்ல வழியொன்று உண்டு. மாயை என்னும் திரைக்கு அப்பால் உள்ள மெய்ப் பொருளை சுவானுபூதியில் உணர்தல் வேண்டும். மெய்ப் பொருளை சுவானுபவத்தில் கண்டறிதல் எங்ஙனம் என்பதை உபநிஷதங்கள் விளக்குகின்றன.

தென்படுபவைகளை நல்லவை யென்றும் கெட்டவை யென்றும் பொருள்படுத்தவேண்டாம். பொருள்கள் யாவும் செயல்கள் யாவும் ஆத்மாவினிடத்திருந்து வந்தவைகள் என்று உணர்க. வஸ்துக்கள் எல்லாவற்றிலும் இருப்பது

ஆத்மா. அதாவது ஜகத் என்று சொல்லப்படுவது எதுவுமில்லை. பாஹ்ய திருஷ்டிவேண்டாம். அதாவது புறஉலகைப் பொறிவாயிலில் பார்க்கும் பாங்கு வைத்துக்கொள்ளாதே. சுவர்க்கம் நரகம் ஆகிய எல்லா இடங்களிலும் ஈசனையே காண்பாயாக. பிறப்பு இறப்பு ஆகியவைகளில் பொலிவதும் அதே பரம்பொருள். உபநிஷத வாசகத்தில் வரும் கருத்து இதுவேயாம். இந்த மண்ணுலகம் ஈசனுடைய ஒரு பாதம், ஆகாசம் ஈசனுடைய ஒரு பாதம், நாம் வீற்றிருப்பதும் ஈசனிடத்தேயாம். அனைத்தும் பிரம்ம சொரூபம். இவ்வுண்மையைப்பற்றிப் பேசினால் போதாது; எண்ணினால்போதாது; இதுநமக்கு பிரத்தியக்ஷமாகவேண்டும்; சுவானுபூதியில் நாம் இதை உணரவேண்டும். அண்டங்கள் யாவும் ஈசனால் வியாபிக்கப் பெற்றவை என்றும் அவையாவும் பிரம்ம மயம் என்றும் அனுபூதியில் அறிகின்ற ஒருவன் சுவர்க்கத்துக்குப்போக ஆசை கொள்ளான், நரகத்தைக் குறித்து அஞ்சான். வேறு எங்கு செல்லுதலைப் பற்றியும் அவனுக்குக் கவலையில்லை. மண்ணுலகில் பிறப்பதும் விண்ணுலகில் பிறப்பதும் அவனுக்கு ஒன்றே. ஏனென்றால் பிரம்மத்துக்கு அன்னியமாக அவன் காணும் பொருள் ஒன்றுமில்லை. அனுபூதியடைந்தவனுக்கு அத்தகைய மனநிலை உண்டாவதுதானே யுக்திக்கும் பொருந்துகிறது. வசிப்பதற்கு ஏற்ற வெவ்வேறு உலகங்கள் என்பன ஞானிக்குப் பொருளற்றவைகளாம். ஏனென்றால் எங்கும் ஒரு பொருளையே ஞானி காண்கின்றான். நீக்கமற எங்கும் நிறைந்திருப்பது ஒரு பொருள். ஒவ்வோர் இடமும் இறைவனுடைய ஆலயமாகிறது. எதைப்பார்த்தாலும் ஞானிக்கு அது புண்ணிய க்ஷேத்திரமாகிறது. சுவர்க்கம் என்னும் இடத்திலும், நரகம் என்னும் இடத்திலும், மற்றுமுள்ள ஒவ்வொரு பகுதியிலும் பிரம்மத்தின் சான்னித்

தியமே திகழ்கிறது. நலம் என்பதும் கேடு என்பதும் பிரம்ம ஞான நிலையில் இருப்பவனுக்கு இல்லை. அங்ஙனமே ஜனன மரணம் என்பனவும் ஞானிக்கு இல்லை, அகண்ட வஸ்துவாகிய பிரம்மமே உள்ளது.

வேதாந்த சாஸ்திரப் பிரகாரம் இத்தகைய ஞானம் அடையப் பெற்றவனே ஜீவன் முக்தன் ஆகின்றான். அத்தகைய முக்த புருஷனே இந்த ஜகத்தில் வசிக்கத் தகுந்தவன் ஆகின்றான். ஏனையோர் அதற்குத் தகுதியற்றவர். இப்பிரபஞ்சத்திலே குறைபாட்டையும் அநியாயத்தையும் காண்கின்ற மனிதன் இங்கு எப்படி வசிக்க முடியும்? இவ்வுலகில் கேடு காண்போனது வாழ்வு துன்பமே வடிவெடுத்து விடுகிறது. பார்க்குமிடமெங்கும் விக்கினங்களையும், விபத்துக்களையும் காண்போனது வாழ்வு துன்பமே வடிவெடுத்து விடுகிறது. பார்க்குமிடமெங்கும் மரணத்தின் காட்சியைக் காண்பவனது வாழ்வு துன்பமே வடிவெடுத்து விடுகிறது. மெய்ப்பொருளின் காட்சி அடையப்பெற்றவனே, அம்மெய்ப்பொருளே அனைத்துமாய் மிளிர்வதைக் காண்பவனே இப்பிரபஞ்சத்தில் வாழத்தகுந்தவன். ஜகத்தில் வசித்திருப்பது என்பதன் உட்பொருள் அவனுக்கு உள்ளபடி விளங்குகிறது. ஆகவே வாழ்வு என்பதை நன்கு அனுபவிப்பவன் ஞானியே. "யான் ஏதும் பிறப்பு இறப்பு அஞ்சேன்" என்றும் "இன்பமே எந்நாளும் துன்பமில்லை" யென்றும் இயம்ப வல்லவன் ஞானி ஒருவனேயாம். நரகத்தைப் பற்றிய பேச்சு வேதத்தில் எங்கும் கிடையாது என்பதை ஈண்டு ஞாபகத்துக்குக் கொண்டுவரவேண்டும். மிகப் பிற்காலத்தில் இயற்றப்பெற்ற புராணங்களிலே நரகத்தைப் பற்றிய பேச்சுக்கள் வந்துள்ளன. நல்வாழ்வு வாழாதவனுக்குக் கொடிய தண்டனையுண்டு என்று வேதமும் சொல்கிறது.

அதாவது அவன் திரும்பவும் இவ்வுலகில் வந்து பிறந்தாக வேண்டும்; மற்றுமொரு தடவை இங்கே அவன் முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டும் என்பதே அவனுக்கு ஏற் பட்டுள்ள தண்டனையாம். நரகவேதனை, சுவர்க்கப்பிராப்தி என்னும் கோட்பாடுகளெல்லாம் வல்லான் யாரோ ஒருவனு டைய ஆணையினின்று வருவனவல்ல; ஆனல் அவரவர் வினைப்பயனல் வருபவை என்று ஆதியிலிருந்தே வேதம் தெளிவுபடுத்திவிடுகிறது. தண்டனை வெகுமதி ஆகியவை களைப்பற்றிய எண்ணங்களெல்லாம் இவ்வுலகப் பற்றுடை யவர்களுக்கே உரியனவாம். மக்களாகிய நாம் சிலரை நேசிக்கிறோம், வேறு சிலரை வெறுக்கின்றோம். நாம் செய் வது போன்று மானுட தெய்வம் ஒன்று நேசிக்கவும் வெறுக் கவும் செய்கிறது என்று பலர் நினைக்கின்றனர். விருப்பும் வெறுப்பும் வடிவெடுத்திருக்கிற தெய்வம் சிலரைத் தண்டிக் கும், வேறு சிலர்க்குச் சம்மானம் வழங்கும். வேதத்தில் ஸம்ஹிதை என்னும் பகுதியில் இத்தகைய தெய்வம் இடம் பெற்றிருந்தது. ஆகவே அத்தெய்வத்தைக் குறித்துப் பயப் படவேண்டும் என்ற கோட்பாடும் ஆங்கு உதிப்பதாயிற்று. ஆனல் உபநிஷதங்களின்கண் நாம் நுழையுங்கால் பயம் என்னும் கோட்பாடு அறவே அடிபட்டுப் போய்விடுகிறது. வினைப்பயனுக்கு ஏற்றவாறு மனிதனுக்குப் பெருமையும் சிறு மையும் வந்தமைகின்றன என்னும் பொதுவிதியைப் பற்றிய கொள்கை நிலைநாட்டப் பெறுகிறது. குணம் குறியில்லாத பரம்பொருள் ஒன்றே எங்கும் நிறைபொருள் ஆகிறது. உயிர்க்குயிராயிருப்பதும் அதுவே. அவ்வவ்வுயிரின் அடிப் படை வஸ்துவாயிருந்து அதை ஓர்மைப்படுத்தி வருவதும் அதுவே. தெய்வம் பற்றுக்கோடற்ற வஸ்து என்னும் கோட் பாடு எல்லார்க்கும் விளங்காது. ஒரு சக்ரவர்த்தி போன்று

தெய்வம் பரமபதத்தில் வீற்றிருந்துகொண்டு உயிர்கள்மீது ஆணை செலுத்துகிறார் என்றால் அக்கோட்பாட்டைத்தான் பெரும்பாலர் விரும்புகின்றனர். நுண்ணறிவாளர்க்கிடையிலேயே பலர் நிர்க்குண நிராமய தெய்வத்தைக் குறித்து மனங்கோணுகின்றனர். தங்களைப் போன்று தெய்வமும் ஒரு சுந்தர வடிவம் எடுத்திருக்க வேண்டுமென்று விரும்புகின்றனர். மற்று, மனிதனைப் போன்று தெய்வமும் அவயவங்களை உடைத்திருக்குமானால் அது பொருளற்றதாய்விடும். பரிகாசத்துக்குரிய புன்மை யென்றே அக்கோட்பாட்டைக் களையவேண்டும். எல்லார் உள்ளத்திலும் உணர்வுக்கு உணர்வாய் எழுந்தருளியிருக்கும் தெய்வம் மேலானதா, அல்லது இருக்குமிடம் தெரியாது எங்கேயோ மறைந்து கிடக்கும் தெய்வம் மேலானதா என்பதுதான் கேள்வி. எண்ணிறந்த உயிர்களாய் இலங்கும் தெய்வம் போற்றுதற்குரியதா, இருக்குமிடம் எது என்று துப்பு அறிய முடியாத தெய்வம் போற்றுதற்குரியதா என்பது கேள்வி. அதாவது எங்கேயோ பரமபதத்தில் தெய்வம் வீற்றிருக்கிறார் என்றால் அதை நிரூபிப்பது சாத்தியமன்று. உயிர்கள் அனைத்திடத்தும் வியாபித்திருக்கும் தெய்வத்தை நம்முடைய சுவானுபவத்தில் உணரலாம்.

உருவம் தாங்கியிருக்கிற ஒவ்வொரு பொருளும் அழியும் தன்மையுடையது. ஆகவே அது க்ஷரம் என்று சொல்லப்படுகிறது. நமக்கு உருவம் இருப்பதுபோன்று தெய்வத்துக்கு ஓர் உருவம் கிடையாது. எனவே அது அக்ஷரம் எனப்படுகிறது. நித்தியமாய் இருப்பது அது ஒன்றே. அது ஒரு நிராகார வஸ்து. பேரறிவும், பேராற்றலும், பெருவாழ்வும் அதன் தோற்றங்களாம். உருவம் அருவம் இந்த இரண்டுக்கும் வித்தியாசம் உண்டு. உருவம் உடைத்திருக்கும்

தெய்வம் மனிதன் போன்றது ஆய்விடுகிறது. அருவமாயிருக்கிற பொருள் தேவன் ஆகலாம், மனிதன் ஆகலாம், விலங்கு ஆகலாம், பின்பு இவையாவுக்கும் அப்பாற்பட்டதாகவும் இருக்கலாம். அப்பாற்பட்ட பொருள் நமக்குப் புலப்படாது. நிர்க்குண நிராகாரமாயிருக்கும் அக்ஷரப்பொருளில் சகுண சாகாரமாயிருக்கும் யாவும் அடங்கிவிடுகின்றன. அகிலாண்டத்திலுள்ள அத்தனையுமாகி அவைகளுக்கு அப்பாலும் அகண்ட வஸ்துவாயுள்ளது அது.

तदेतत् सत्यं यथा सुदीप्तात् पावकाद्
विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः ।
तथाक्षराद् विविधाः सोम्य भावाः
प्रजायन्ते तत्र चैवापि यन्ति ॥

கொழுந்துவிட்டு எரிகின்ற தீயினின்று அதே பாங்குடைய பல்லாயிரம் பொறிகள் கிளம்பி வருவதுபோன்று அக்ஷரப் பொருளினின்று எண்ணிறந்த சொரூபங்கள் தோற்றுவிக்கப் படுகின்றன. திரும்பவும் அக்ஷரத்தின்கண்ணே அவைகள் ஒடுங்குகின்றன. இளைஞா, இதுவே உண்மை.

யாண்டும் உயிரோடு இலங்கும் பிரத்யக்ஷ தெய்வத்தை நாம் வணங்குதல் வேண்டும். வாழ்நாளிலெல்லாம் நாம் கண்கூடாகக் கண்டுவருவது கடவுளைத் தவிர வேறு எதுவும் அல்ல. பொன்னால் செய்த மோதிரம் ஒன்று இருக்கிறது. மோதிரத்தைக் காணுங்கால் நாம் முதலில் பொன்னைக் காண்கிறோம், பிறகு மோதிரத்தைக் காண்கிறோம். நாற்காலி ஒன்றைக் காண்பதற்கு அதன் முதல் பொருளாகிய மரத்தைக் காண்கிறோம், பிறகு நாற்காலியை. மூலப் பொருளுக்கு அன்னியமாகக் காரியப் பொருளைக் காணவியலாது. உலகத்தைக் காண்பதற்கு முதலில் அதன்

மூலப்பொருளை உணர்கிறோம். மூலப்பொருளின் மயமாக அது எடுத்துள்ள வடிவத்தை உணர்கிறோம். ஜடப்பொருள் எதை ஆராய்ந்து பார்த்தாலும் ஏதேனும் ஒருபாங்கில் அது நிலைத்து இருக்கிறது என்பது விளங்கும். அறிவுப்பொருள் எதை ஆராய்ந்து பார்த்தாலும் ஏதேனும் ஒருபாங்கில் 'இருக்கிறேன்' என்பது அறிவுப்பொருளைப்பற்றிய உண்மையாகும். எங்கு எதைப்பார்த்தாலும் 'இருக்கிறேன்' என்பது பொதுவானது. 'இருக்கிறேன்' என்று உணர்பவன் ஸத் அல்லது மெய்ப்பொருளை உணர்கிறான். 'இருக்கிறேன்' என்னும் தெய்வ சான்னித்தியத்தை நமது உள்ளத்தில் நாம் உணராவிட்டால் அவ்வுணர்ச்சியைப் பெற நாம் வேறு எங்கே செல்வது? உயிர்வாழும் ஒவ்வொன்றனிடத்தும் 'இருக்கிறேன்' என்னும் உணர்ச்சியை அறியாவிட்டால் அதை அறிதற்கு நாம் வேறு எங்கே செல்லுவது?

त्वं स्त्री त्वं पुमानसि त्वं कुमार उत वा कुमारी ।
त्वं जीर्णो दण्डेन वंचसि त्वं जातो भवसि विश्वतोमुखः ॥

'பெண்ணும் நீ, ஆணும் நீ, குமாரன் நீ, குமாரியும் நீ, ஊன்றுகோலைச் சார்ந்து நிற்கும் கிழவனும் நீ, ஆற்றல் செருக்குடன் நடமாடும் இளைஞனும் நீ, எண்ணிறந்த வடிவங்களை எடுத்திருப்பவனும் நீ.' பிரபஞ்சமெங்கும் ஊடுருவி இருப்பது எதுவோ அது கடவுள். மெய்ப்பொருள் ஆவது அதுவே. மாறுபாடுகளுக்கு அடிப்படையாக அது நிலைபேறு கொண்டிருப்பது அதிசயமே. கடவுளைப்பற்றிய இக் கோட்பாடு பலருடைய கொள்கைக்கு முற்றிலும் முரண்பட்டதாகத் தென்படலாம். ஐதிகமாக அன்னவர் எண்ணி வருவது இத்தத்துவத்துடன் பொருந்தாது. நமது காட்சிக்குப் புலப்படாது கடவுள் எங்கேயோ மறைந்திருக்கிறார் என்பது அவர்களுடைய நம்பிக்கையாகும். புரோஹிதர்கள்

புகட்டும் புரளியொன்று உண்டு. அதாவது அவர்கள் சொற்படி நாம் நடக்கவேண்டுமாம். அவர்கள் விதிப்பதை யும் விலக்குவதையும் நாம் செயலுக்குக் கொண்டுவர வேண்டுமாம். அவர்களை அடிபணிந்தால் நமக்கு விமோசன முண்டு என்கின்றனர். செத்தபின் நற்கதியும் தெய்வத்தின் திருக்காட்சியும் நமக்குக் கிட்டுமென்று புரோகிதர்கள் உத் தரவாதம் கூறுகின்றனர். அவர்களின் அனுமதியின்றி தெய்வத்தினருகில் செல்ல நமக்கு இயலாது என்பது அவர் களின் போதனையாகும். சுவர்க்கப்பிராப்தி யென்று சொல் லுவதும் செத்தபின் நல்ல கதி கிடைக்குமென்று சொல்லு வதும் புரோஹிதத் தந்திரத்தின் வெவ்வேறு வடிவங்களாம். இவை யாவும் பொருளற்ற புன்மொழிகள் என்று அறிதல் வேண்டும்.

நிர்க்குண நிராகாரப் பரம்பொருள் எல்லார்க்கும் பொது வானது என்னும்கோட்பாடு பலருடைய ஜீவனோபாயத்தைக் கெடுத்துவிடும் என்பது உண்மை. புரோஹிதர்களும் தேவா லய அர்ச்சகர்களும் ஏதேதோ கொள்கைகளைப்பாமரர்களுக் குப் புகட்டி வயிறு வளர்த்து வருகின்றனர். நேரான தத் துவ ஆராய்ச்சியில் அவையாவும் அடிபட்டுப் போய்விடும். வறுமை நோயில் வருந்தும் மாகாணங்கள் பல இந்தியாவில் இருக்கின்றன. அதே மாகாணங்களில் ஆலயங்களும் பல இருக்கின்றன. ஒவ்வொரு ஆலயத்திலும் இருக்கும் ஆபர ணங்கள் ஒரு அரசனுடைய சொத்துக்குச் சமானமானவை என்று மதிப்பிடலாம். இனி, நிர்க்குண பிரம்மத்தைப் பற்றிய கோட்பாட்டைப் புரோஹிதர்கள் பாமரர்க்குப் புகட்டுவார்களானால் அவர்களின் தொழில் அழிந்துபோம். ஆயினும் புரோஹிதர்களைப் புறக்கணித்துவிட்டு சுயநலப் பற்று இன்றி, இக்கோட்பாட்டை நாம் புகட்டியே ஆக

வேண்டும். நீ தெய்வ சொரூபம், நானும் தெய்வ சொரூபம், எல்லா உயிர்களும் தெய்வ சொரூபம். அடிமைப்படுதல் அல்லது அடிமைப்படுத்துதல் எதற்காக? யாரை யார் வணங்குதல்? ஒவ்வொரு உள்ளமும் இறைவனுடைய பெருங் கோயில். மற்ற கோயில்களைவிட மானுட சரீரம் என்னும் கோயில் மேலானது. மற்ற விக்கிரகங்களைவிட மானுட சரீரம் என்னும் விக்கிரஹம் மேலானது.

> உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
> உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
> உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
> உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

மானுட ஜீவிதம் என்னும் சாஸ்திரம் மற்ற சாஸ்திரங்களை விட மேலானது. ஆதலால் நமது வாழ்க்கையில் முரண்பாடு இருக்கலாகாது. நமது கொள்கையை நமது வாழ்க்கையின் வாயிலாக விளக்கவேண்டும். ஒன்றுக்கும் உதவாத வழவழத்த பாங்கு நமது மனதில் வந்துவிடலாகாது. உறுதியான நெஞ்சத்துடன் உண்மையைக் கடைப்பிடிப்பவன் வேதாந்தியாகிறான். உண்மை யாது? தெய்வம் தானே மானுட வடிவத்தில் தோன்றிக்கொண்டிருக்கிறது. கண்கூடாகத் தென்படும் மனிதனைத் தெய்வ சொரூபமாகக் காண்பது அனுஷ்டான வேதாந்தமாகும். அல்லாவை யன்றி தெய்வமில்லை யென்கிறது இஸ்லாமிய மதம். கடவுளை யன்றி வேறு எதுவுமில்லையென்கிறது வேதாந்தம். வேதாந்தம் புகட்டுகிற இக்கோட்பாடு பலரைத் திகைக்கச் செய்து விடலாம். ஆனால் நாளடைவில் இவ்வுண்மை விளங்கும். பிரத்தியக்ஷ தெய்வம் மனிதனுடைய உள்ளத்தில் இருக்கிறது. அதை மறந்துவிட்டு மனிதன் தெய்வத்துக்கு ஆலயம் கட்டுவிக்கிறான். மேலும் பொருந்தாத பல கற்பனைகளையும்

மனிதன் தெய்வத்தின்மீது திணிக்கிறான். மானுட சரீரம் என்னும் ஆலயத்தின்கண் எழுந்தருளியிருக்கும் தெய்வம் ஒன்றே ஆராதனைக்குரியது. விலங்குகளின் சரீரங்களும் ஆலயங்களே. ஆனால் மானுட சரீரமே சிறந்த ஆலயம். பெருங்கோயில் என்று இதைப் பகரவேண்டும். மானுட சரீரத்தில் நாம் தெய்வத்தை வணங்க முடியாவிட்டால் வேறு எந்த ஆலயத்திலும் அவனை வணங்க முடியாது. மானுட சரீரம் என்னும் ஆலயத்தில் வீற்றிருக்கும் தெய் வத்தை என்று நான் சுவானுபூதியில் உணர்கிறேனோ, ஒவ் வொரு மானுடனையும் என்று நான் தெய்வ சொரூபமாகக் கண்டு வணங்குகின்றேனோ, அன்று நான் பந்தங்களினின்று விடுபட்டவன் ஆகின்றேன். என்னைக் கட்டிய தளைகள் நீங்கு கின்றன. நான் முக்தியடைகிறேன்.

ஆராதனைகளுள் நம்மைப் பண்படுத்தும் ஆராதனை இது ஒன்றே. வெறும் வாதத்துக்கும் கற்பிதத்துக்கும் இதில் இடமில்லை. அப்படியிருந்தும் இந்த வேதாந்தக் கோட்பாட்டைக் கேட்டுப் பலர் மருண்டுபோய்விடுகின்ற னர். கடவுள் எங்கும் நிறைபொருள் என்னும் கருத்து சரி யானதல்ல என்கின்றனர் அவர்கள். மிகப் பூர்வீகமான அவர்களின் முன்னோர்கள் பகர்ந்ததையே இன்றைக்கும் சரி யென நம்பி அதைப்பற்றி மதவாதங்கள் செய்கின்றனர். எங்கேயோ சுவர்க்கத்தில் இருக்கும் வியக்தியொன்று தன் னைத் தெய்வமென்று அறிமுகப்படுத்திக் கொண்டதாம். அது முதற்கொண்டு விதவிதமான மதவாதங்களே நம் காதுக்கு எட்டி வந்துள்ளன. அங்ஙனம் பேச்சளவில் இருப் பதைச் சமய அனுஷ்டானம் என்கின்றனர் அதை நம்பி வரு பவர்கள். தென்படும் ஆத்மாக்களை தெய்வ சொரூபமாக உணர்தல் வேண்டும் என்று நாம் பகர்வதைப் பழக்கத்தில்

கொண்டுவரமுடியாது என்பது அவர்களின் கொள்கை. ஒவ்வொருவனும் அவனுக்குற்ற அறநெறியைப் பின்பற்ற வேண்டும் என்கிறது வேதாந்தம். ஆனால் நெறி வேறு குறி வேறு. நெறியே குறியாய் விடாது. தொலைவிலே சுவர்க்கத்திலே இருக்கும் தெய்வத்தை வணங்குவது போன்ற ஆத்ம சாதனங்கள் கேடுடையவைகள் ஆகா. ஆனால் அவை யாவும் உண்மை என்னும் குறியை நோக்கிப்போம் படிகள் ஆகின்றன. அப்பாதைகள் தாமே உண்மையாய்விடமாட்டா. அத்தகைய சாதன வகைகளிலே ஆங்காங்கு சிறப்பையும் சௌந்தரியத்தையும் காணமுடியும். வியக்கத்தக்க கோட்பாடுகளும் சில அவைகளின்கண் தென்படுகின்றன. ஆனால் ஒவ்வொரு தருணத்திலும் வேதாந்தம் பகர்வதாவது: "எனது அன்பா, அறியவொண்ணப் பொருள் என்று யாரை நீ வணங்குகின்றாயோ அப்பொருள்தான் நீ. அது வேறு நீ வேறு அல்ல. உன் அறிவுக்கு எட்டாத பொருள் என்று யாரை நீ வழுத்துகிறாயோ, யாரைக்குறித்து நீ உலகெல்லாம் தேடியலைகின்றாயோ அப்பொருள் என்றென்றும் உன்னோடு இருந்திருக்கிறது. உன் உயிர்க்கு உயிராயிருப்பது அப்பொருள். அண்டங்கள் யாவுக்கும் அது சாசுவதமான சாக்ஷியாகும். வேதங்கள் யாவும் அந்தப் பரம்பொருளையே வணங்குகின்றன; இல்லை, அதுவும் போதாது. 'இருக்கிறேன்' என்று மனச்சாக்ஷியாக எப்பொருள் என்றென்றும் இருக்கிறதோ அப்பொருளை ஆதரவாகக்கொண்டே அகிலாண்டமும் இருந்து வருகிறது. அண்டம் முழுதுக்கும் ஒளியைத்தருவது அது. உயிரைத்தருவதும் அது. "நான்" என்னும் பொருள் உன்னிடத்து இல்லாது போய்விடுமானால் பின்பு சூரியனைக்காண ஆள் இல்லை. எல்லாம் இருள் படலம் ஆய்விடும். ஆத்மாவாகிய அப்பொருள் பிரகாசிப்பதால் நீ உலகைக் காண்கின்றாய்."

திரும்பத் திரும்ப எழும் கேள்வியொன்று உண்டு. அதாவது மனிதன் கடவுளின் அம்சம் என்னும் எண்ணத்தினின்று மிகக் கடினமான தொந்தரவு ஒன்று தோன்றி விடும். "நான் பரமாத்ம சொரூபம், ஆகவே நான் நினைப்பதும் செய்வதும் நலமுடையது. கேடு எதுவும் கடவுளிடத்திருந்து வருவதில்லை" — இவ்விதம் நாம் ஒவ்வொருவரும் நினைக்க ஆரம்பித்துவிடுவோம். இத்தகைய விபரீத வியாக்கியானம் தலையெடுக்க இடமுண்டு என்பதை ஒத்துக்கொள்கிறோம். இதற்கு மாறான மற்ற கொள்கையில் கேடு ஒன்றும் இல்லையென்று நிரூபிக்கமுடியுமா? மனிதனிடத்திருந்து வேறுபட்டு சுவர்க்கத்தில் வசிக்கும் தெய்வத்தை மாந்தர் வணங்கி வந்திருக்கின்றனர். அத்தகைய தெய்வத்தைக் குறித்து அவர்கள் மிகவும் அஞ்சுகின்றனர். பயந்து நடுங்கிக் கொண்டு அவர்கள் பிறந்து வந்துள்ளனர். ஆயுட்காலமெல்லாம் அவர்கள் அச்சத்தால் நடுங்கிக்கொண்டே இருப்பார்கள். இவ்விதம் பயத்தை வளர்ப்பதினின்று அதிகப்படியான நலத்தை உலகம் எப்பொழுதாவது பெற்றிருக்கிறதா? தெய்வம் உருவம் படைத்தது என்று உணர்ந்து உபாசித்த கூட்டம் ஒருபுறம்உண்டு. அது உருவங்களையெல்லாம் கடந்த நிர்க்குண நிராகாரப் பொருள் என்று கருதி உபாசனை செய்த கூட்டத்தார் மற்றொரு புறமுண்டு. இவ் இருதர உபாஸகர்களுள் மிகமிக மஹோன்னத நிலைக்கு வந்தவர்கள் எக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் அதிகமானவர்கள் என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். சமூக நலனுக்குத் தொண்டு ஆற்றிய பெரிய கர்ம வீரர்கள், நீதிநெறியை மக்களுக்கிடையில் திறமையுடன் வழங்கிய பெருமக்கள் நிர்க்குண பிரம்ம உபாஸகர்களுக்கிடையில்தான் அதிகம் பேர் தோன்றியிருக்கின்றனர். அச்சத்தை அடிப்படையாகக்கொண்ட நீதிநெறி

உச்ச நிலைக்கு வரவேண்டுமென்று எதிர்பார்ப்பது எங்ஙனம்? பயந்துகொண்டு நல்லொழுக்கம் பழகுதல் ஒருபொழுதும் மேலானது ஆகாது. "ஒருவன் மற்றொருவனைத் தனக்கு அன்னியமானவனைக் கருதுதல், மற்றொருவன் தனக்கு அன்னியமானவனென்று அவனைத் தாக்க நினைத்தல் ஆகிய வேற்றுமைகளெல்லாம் மாயையின்காரியங்களாகும். ஒருவன் தனக்கு வேற்றானை வேறுயாரையும் கருதாத நிலை, தனக்குப் புறம்பானவன் என்று எண்ணி யாருக்கும் தீங்கு செய்யாத நிலையானது ஆத்ம போதத்தினின்று வருகிறது. ஆத்ம போதம் அடைந்தவன் ஆத்மாவுக்கு அன்னியமாக இரண்டாவது பொருளைக் காண்பதில்லை. பிரம்ம ஞானம் வந்தான பிறகு காண்போன் யார், காணப் பெறுபவன் யார்? ஞாதா, ஞேயம் என்னும் பேதம் ஆங்கு எப்படி இருக்கமுடியும்?" அத்தகைய ஞான நிலையை அடைந்தான பிறகு எல்லாம் பிரம்மம் என்று சொல்லுவதும், எல்லாம் நான் என்று சொல்லுவதும் பொருந்தும். சொல் எதுவாயினும் அனுபூதி ஒன்றேயாம். சித்தசுத்தி அல்லது மனத் தெளிவு என்பது ஆங்குப் பூர்த்தியாய் விடுகிறது. மனம் முற்றிலும் தூய தான பின்பே அன்பு என்றால் என்ன என்பது நமக்கு உள்ளபடி விளங்குகிறது. அச்சத்தினின்று ஒரு நாளும் அன்பு சுரப்பதில்லை; வீரசுதந்திரம் ஒன்றே அன்புக்கு அடிப்படையாகிறது. உலகத்தினிடத்து நாம் தூய அன்பு காட்ட ஆரம்பிக்கும் பொழுதுதான் சகோதரத்துவம் என்பதன் பொருளும், மானுட வர்க்கத்தினிடத்து வாஞ்சை என்பதன் பொருளும் நமக்கு உள்ளபடி விளங்கும். அன்பு தூயதாவதற்கு முன்பு அதொன்றும் விளங்காது.

ஆகவே குணங்குறியற்ற பரம்பொருள் உபாஸனை உலகில் பெருங்கேட்டை உண்டு பண்ணிவிடும் என்பது

சரியல்ல. துவைத மதத்தினின்று தீமை ஒன்றும் விளைந்தது கிடையாது என்று சொல்லுதற்கும் இடமில்லை. மதத் துவேஷத்துக்கு அது வேண்டியவாறு இடம் கொடுத்திருக் கிறது. அதன் பயனாக மனிதனை மனிதன் துண்டு துண்டாக வெட்டியிருக்கிறான்; ரத்த வெள்ளமும் பெருக்கெடுத்து ஓடி யிருக்கிறது. "என் தெய்வம் எல்லாவற்றிலும் பெரிய தெய்வம், வேண்டியவாறு போர் புரிந்து அதை நிரூபித்து விடுவோம்" இத்தகைய பிரகடனம் கிளம்பிற்று. உலக மெங்கும் துவைத மதத்தினின்று வந்துள்ள விளைவு இத் தகையதாம். இத்தகைய குறுகிய நோக்கத்தை ஒழித்து விட்டுப் பட்டப்பகல் போன்று உள்ள பெருநெறியைச் சார வேண்டும். மனிதனைச் சிறுமைப் படுத்துகின்ற சிறுநெறி சாரலாகாது. ஆத்மா அகண்டாகாரமானது. சமயச் சழக்கு அதற்கு எங்ஙனம் பொருந்தும்? பிரகாசித்துக்கொண் டிருக்கும் ஞான பூமிக்குள் பிரவேசித்திடுக. அண்டமெங் கும் நிறைந்துள்ள அனைத்தும் உனக்குச் சொந்தம். உன் கரங்களை நீட்டி அன்புடன் அவையாவையும் ஏற்றுத்தழுவிக் கொள். அனைத்திடத்தும் அன்பு பாராட்டுகிற உணர்ச் சியை நீ எப்பொழுதாவது பெற்றிருப்பாயாகில், நீ கடவுள் சான்னித்தியத்தை உணர்ந்தவன் ஆகின்றாய்.

புத்தர் பெருமானுடைய ஜீவிதத்தில் ஒரு நிகழ்ச்சி யுண்டு. கிழக்கிலும், மேற்கிலும், வடக்கிலும், தெற்கிலும், மேலும், கீழும் ஆக எல்லா திக்குகளிலும் பிரேமைப் பிர வாஹத்தை, அதாவது பேரன்பு வெள்ளத்தை அவர் பரப்பி னார். அண்டமெங்கும் அவருடைய அன்பு வியாபகமாயிற்று. கரைகாணாத அவ்வன்பில் இனிமையும் மகிமையும் நிறைந் திருந்தன. அத்தகைய பேருணர்ச்சி ஒருவனிடம் உதயமாகு மானால் அவன் மஹா புருஷன் ஆகின்றான். அகிலாண்ட

நாயகனுயிருப்பவன் ஒரே புருஷன். அதை அறியுங்கால் சிறுமைகளெல்லாம் அகன்று விடுகின்றன. அகண்டாகாரப் பெரிய பொருளின் பொருட்டுச் சின்னஞ்சிறிய வியக்திகளை யெல்லாம் விட்டொழித்தல் வேண்டும். பேரின்பத்தின் பொருட்டுச் சிற்றின்பங்களைத் துறப்பது அவசியமாகிறது. அலையானது கடலில் அடங்கியிருப்பதுபோன்று ஸகுண பிரம்மம் நிர்க்குண பிரம்மத்தில் அடங்கியிருக்கிறது. இனி, நிர்க்குண பிரம்மம் மனிதனுக்குச் சொந்தம் என்றுல் ஸகுண பிரம்மமும் அதன் காரியமாகவரும் எல்லாவித இன்பங்களும் நிர்க்குண பிரம்மானந்தத்தில் அடங்கிவிடுகின்றன. ஆகவே சகுண பிரம்மமும் நிர்க்குண பிரம்மமும் உண்மையில் ஒரே பொருளாம். அனந்தஸ்வரூபியாகிய நிர்க்குண புருஷோத்தமன் வடிவுடைய புருஷனுகவும் தோன்றிக் கொண்டிருக்கிருன். அனந்த ஸ்வரூபமாக, அகண்டாகாரமாக இருக்கவேண்டிய நாம் எப்படியோ நம்மைச் சிறு மனிதர்களாக எண்ணிக்கொள்கிறேம். சிறு வியக்திகளாக நம்மை நாம் செய்துகொள்கிறேம். அகண்டாகார சொருபம் நமது எதார்த்த நிலை என்கிறது வேதாந்தம். அகண்டமாய், பரிபூரணமாய் நம்மை உணரும் நிலை ஒருபொழுதும் நம்மை விட்டுப் போய்விடாது. உள்ளத்தினுள்ளே ஏதேனும் ஒரு விதத்தில் அவ்வுணர்ச்சி நிலைத்து நின்று கொண்டிருக்கிறது. ஆனுல் கர்மத்தால் நமக்கு நாம் வரையறையை உண்டுபண்ணிக்கொண்டோம். கழுத்தைப் பிடித்துப் பிணித்துள்ள சங்கிலிபோன்று கர்மம் நம்மை பந்தத்துக்கு உள்ளாக்கியிருக்கிறது. கர்மம் என்னும் தளையை நீக்கிவிட்டு நாம் முக்தியடையவேண்டும். கர்மத்தினின்று நியமம் என்பது தோன்றிவந்துள்ளது. அந்த நியமத்தைக் காலால் உதைத்துத் தள்ளிவிடு. விதி, தைவிகம், அதிருஷ்டம் ஆகிய

வினைத்தனைகள் மனிதனது உண்மையான சொரூபத்துக்குப் பக்கத்தில் வரமாட்டா. அகண்டத்தின்கண் நியமம் என்பதற்கு இடமெங்கே? வெட்ட வெளிக்கு எப்படி வேலி கட்ட முடியாதோ அப்படி மனிதனது அகண்டாகார சொரூபத்தினிடத்தில் வினைத்தனைக்கு வேலையில்லை. சுவாதீனம் அதாவது தன்னில் தானயிருப்பது ஆத்மாவின் மூலமந்திரமாகும். சுவாதீனம் ஆத்மாவின் பேரியல்பாகும்; சுவாதீனம் அதன் பிறப்பு உரிமையாகும். முதலில் சுவாதீனம் அல்லது முக்தியைப் பெற்றுவிடு; பிறகு வேண்டியவாறு எத்தனை மூர்த்திகளை வேண்டுமானாலும் வைத்துக்கொள். ஜீவன் முக்தன் ஒருவன் இவ்வுலகில் வாழ்கிற வாழ்க்கைதான் பெருவாழ்வு ஆகிறது. நாடக மேடையின்மீது வந்து ஒருவன் யாசகனை நடிப்பதற்கு அது ஒப்பாகும். வீதிகளிலே அலைந்து திரியும் வறியர்களோடு நாடகமேடை வறியனை ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். மேடையின்மீதும் வீதிகளிலும் உள்ள காட்சிகள் ஒரே பாங்கில் இருக்கலாம். கையாளும் சொற்களும் ஒரே விதமானவைகளாயிருக்கலாம். உடல் வளைந்து, கையேந்திக் கெஞ்சிக்கேட்கும் விதத்திலும் ஒரு வித்தியாசமும் இல்லை. ஆயினும் மனப்பான்மையில் எவ்வளவு பெரிய வேற்றுமை என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும். பிக்ஷை கேட்டுப் பிழைப்பவனை நாடகத்தில் நடிப்பவனுக்குத் தான் செய்வதெல்லாம் வெறும் விளையாட்டு. தன் செயலைத் தானே ரசிக்கின்றான்; மற்றவர்களும் அதைக்கண்டு ரசிக்கும்படி செய்கிறான். ஐயம் ஏற்று உண்டு பிழைக்கும் மற்றவன் அவதிப்படுகிறான். அவன் சிறுமைக்கு ஆளாகிறான். இவ்விருவருக்கும் இடையில் உள்ள வேறுபாடு யாது? ஒரே விதமாக வினையாற்றுதல் இருவர்க்கும் பொது எனினும் நடிப்பவனுக்கு சுவாதீனம் உண்டு; வறியன் வினைத்தளையில் கட்டுண்டுகிடக்

கிறான். ஒருவன் முக்த புருஷனுக்கு ஒப்பானவன்; மற்ற வன் பத்தாத்மா. ஐயம் ஏற்று உண்டு வாழ்பவனுக மேடை யிலே நடிப்பவன் தான் உண்மையில் வறியன் அல்ல என்ப தையும், வெறும் விளையாட்டுக்காகத்தான் அச்செயலை ஏற்றுக்கொண்டிருப்பதாகவும் அறிகிறான். உண்மையான வறியன் அது தன் தலைவிதியென்றும், எப்படியாவது தன் வறுமை நோயைச் சகித்திருக்க வேண்டுமென்றும் உணர் கிறான். நியதி அல்லது விதி என்பது இதுவே. நமது எதார்த்த சொரூபத்தைப் பற்றிய ஞானம் நமக்கு இல்லா திருக்கும் வரையில் நாம் விதிக்கு உட்பட்டவர்களே. யாசகர் களாகவும் ஏழைகளாகவும் நாம் இங்குமங்கும் அலக்கழிக் கப்படுகிறோம். இயற்கையின் வெவ்வேறு ஆதிக்கம் நம்மீது செலுத்தப்படுகிறது. இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் நம்மை அடிமைப்படுத்துகிறது. இயற்கை, பிரகிருதி, பிர பஞ்சம், ஜகத், மாயை ஆகிய இவையாவும் ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்களாகும். அடிமைப்பட்டுக்கிடக்கும் நாம் உதவி வேண்டுமென்று உலகெல்லாம் அலைந்து திரிந்து ஓல மிடுகிறோம். ஆனல் நமக்கு உதவி கிடைப்பதில்லை. கற்பித தேவகணங்களிடம் கதறியழுது பிரார்த்திக்கிறோம்; அவை களிடமிருந்தும் நமக்கு உதவி வருவதில்லை. ஆயினும் உதவி வருமென்று நாம் நம்பியிருக்கிறோம். அழுதும் கதறியும், நம்பிக்கை கொண்டிருந்தும் ஓர் ஆயுட்காலம் கழிகிறது; மற்றொரு பிறவி வருகிறது. பிறப்பு இறப்பு என்னும் வியவ காரம் இங்ஙனம் நடந்துகொண்டேயிருக்கிறது.

முற்றிலும் உன்னையே சார்ந்தவனயிரு. யாரையும் சார்ந்திராதே. யாரிடத்திலிருந்தாவது உனக்கு ஏதேனும் உதவி கிடைக்கவேண்டும் என்று நம்பியிருக்க வேண்டாம். கடந்துபோன உனது ஜீவிதத்தை விமர்சனம் செய்து பார்.

மற்றவர்களிடமிருந்து நீ எதிர்பார்த்த உதவிகளெல்லாம் உனக்கு வந்து அமையவில்லை. உனது அவாவை வேறு யாரும் நிறைவேற்றவில்லை. உனது அவாவை நீயே நிறை வேற்றிக்கொண்டாய். உனக்குத் தேவையானதை நீயே தேடிக்கொண்டாய். உனக்குக் கிடைத்த உதவிகளெல்லாம் உன்னிடத்திலிருந்தே உதயமானவைகளாம். எதற்காக வென்று உன்னை நீ ஆயத்தப்படுத்தினையோ அந்த வினைப் பயன் நிறைவேறுவதாயிற்று. ஆயினும் விந்தை யென்னே! உனக்கு எங்கிருந்தோ உதவி வரப்போகிறது என்று நீ நம்பிக்கொண்டிருந்தாய்.

பணக்காரன் ஒருவனுடைய வீட்டுத் திண்ணை எப்பொழுதும் நிறைந்திருக்கும். ஜனக்கூட்டத்தை ஆங்கு ஓயாது காணலாம். ஆனால் அதே ஜனங்கள் ஆங்கு எப்பொழுதும் இருப்பதில்லை. வேறு வேறு மனிதர்கள் மாறி மாறி வந்து கொண்டிருப்பார்கள். அப்படி வந்து கொண்டிருப்பவர்கள் பணக்காரனிடமிருந்து தங்களுக்கு ஏதாவது கிடைக்கு மென்று யாண்டும் நம்பிக்கை வைத்துக் கொண்டிருக்கின்ற னர். ஆயினும் அவர்களுக்கு ஒன்றும் கிடைக்காது. அதே பாங்கில் இது கிடைக்கும், அது கிடைக்கும் என்று ஆசைப் படுதல், ஆசைப்படுதல், ஆசைப்படுதல் மயமாய் நமது ஜீவி தம் போய்க்கொண்டிருக்கிறது. ஆசைக்கு ஒரு முடிவில்லை. இந்த வேட்கையை விட்டொழி என்கிறது வேதாந்தம். நீ எதற்காக ஆசைப்படுகிறாய்? நீ விரும்புகின்ற யாவும் உன்னிடத்திருக்கின்றன. அது மட்டுமல்ல, நீ யாவுமாயிருக் கின்றாய். பின்பு எதை நீ எதிர்பார்த்திருக்கிறாய்? பார் ஆளும் வேந்தன் ஒருவனுக்குப் பைத்தியம் பிடித்துக் கொண்டது என்று வைத்துக்கொள்வோம். தன் தேசத்து மன்னனைக்காண அவன் இங்கும் அங்கும் ஓடியலைகின்றான்.

கோமானைக் கண்டுபிடிக்க அவனால் இயலாது. ஏனென்றால் அவன் தானே கோமான் ஆகிறான். தனது நாடெங்குமுள்ள சிற்றூர்களிலும் பேரூர்களிலும் அவன் நாடியலையலாம். வெதும்பி விம்மி யழுதுகொண்டு அவன் வீடு வீடாய்த் தேடித் திரியலாம். ஆயினும் அவன் அரசனைக் காணப் போவதில்லை. ஏனென்றால் அவன் தன்னையே புறவுலகில் தேடுகின்றான். தான் தேடுவது தன்னையே என்பது அவனுக்குத் தெரியவில்லை. தன்னையன்றி வேறு வேந்தன் ஆங்கில்லை. நாம் தேடுகின்ற தெய்வம் நாமே, என்பதைத் தெரிந்து கொள்ளுதல் உத்தமம். ஆகவே தெய்வத்தைக் குறித்து நாம் உலகெலாம் தேடுதல் வீணே. நாம் நாடிய நம்பி நாமே என்பதை நன்குணர்ந்து நடுவுநிலையில் இன்புற்று நின்றிடல் வேண்டும். பித்தனைப் பாருலகெலாம் தேடித் திரிவதைத் துறந்துவிடு. பிறகு மண்தலம் என்னும் நாடக மேடையிலே உன் கடமையைச் செய்தல் என்னும் கூத்து ஆட்டத்தைக் களிப்புடன் விளையாடிடு.

இந்த ஞானம் வந்தபிறகு உலகின் காட்சி நமக்கு அடியோடு மாறிவிடுகிறது. ஓயாத சிறைச்சாலை போன்று இருந்த இவ்வுலகம் விளையாட்டு மேடையாக வடிவெடுத்து விடுகிறது. போட்டியும் போராட்டமும் நிறைந்துள்ள நிலவுலகமானது பேரின்பம் நிறைந்த பெரு நிலமாக வடிவெடுத்து விடுகிறது. இனிமையும், அழகும், புதுமையும் ஈண்டு இடையறாது பொலிவனவாகின்றன. முன்பு நரகமாகத் தென்பட்ட இதே உலகம் இப்பொழுது சுவர்க்கமாகத் தென்படுகிறது. பந்த பாசத்தில் கட்டுண்டு கிடப்பவனது கண்ணுக்கு இது சித்திரவதை நிறைந்த காழ் நரகமாகத் தோன்றுகிறது. தளை நீங்கப் பெற்றவனது கண்ணுக்கோ இதன் காட்சி முற்றிலும் வேறானது. பேருயிர் ஒன்றே

அண்டமெல்லாம் நிறைந்திருக்கிறது. சுவர்க்கம் முதலிய உலகங்களெல்லாம் இந்த விசுவ ஜீவிதத்தினுள் அடங்கிக் கிடக்கின்றன. தேவர்களெல்லாம் இங்கேயே இருக்கின்றனர். அவர்கள் எல்லாரும் மானுடனைப் போன்றவர்களே யாம். தங்கள் வடிவத்தைக் கொடுத்து தேவர்கள் மனிதனைப் படைத்தார்கள் என்பது உண்மையல்ல. தன் வடிவத்தில் தேவர்களை மனிதன் கற்பித்தான் என்பது உண்மை. அண்டத்தின் நடைமுறைகளில் ஈடுபட்டுள்ள இந்திரன், வருணன் முதலிய தேவர்களெல்லாம் மனிதனுடைய வடிவத்திலே மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டவர்களாம். அசல் அல்லது மூலமூர்த்தியாயிருப்பவன் மனிதன். அவனுடைய நகல் அல்லது புறத் தோற்றங்களாக வந்தமைந்தவர்கள் இந்த தேவர்கள் யாவரும். அசலாகிய மூல மூர்த்தியே வந்தனைக்குரியவன். மூல புருஷனை வணங்கு என்கிறது வேதாந்தம். முதற்பொருளாகிய மனிதனை வணங்க ஆரம்பிக்கும்பொழுது நமக்கு வேதாந்தம் அனுஷ்டானத்துக்கு வருகிறது. முறையான அனுஷ்டானத்தில் இறங்கிய மனிதன் முக்தியடைகிறான். பிறகு அவனுக்கு மயக்கமில்லை. மானுட சமுதாயத்தைக்கண்டு அவன் மருண்டு ஓடுவதில்லை. மறைந்திருந்து மடிந்துபோக அவன் மலைக்குகைக்கோ கானகத்துக்கோ விழுந்தோடுவதில்லை. இருந்த இடத்தில் இருக்க வேண்டிய முறையில் இருக்கிறான். உண்மையை அவன் உள்ளபடி உணர்கிறான். பழைய பிரபஞ்சம் இருக்கிறது. அதன் பொருள் மட்டும் மெய்ப் பொருளாக ஞானியின் காட்சிக்கு மாறி விடுகிறது.

உலகத்தை உள்ளபடி பொருள்படுத்த நாம் இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. பந்த பாசங்களினின்று விடுதலையடையும்பொழுதே அதன் உட்பொருள் நமக்கு உள்ளபடி

விளங்குகிறது. அப்பொழுது அதன் சொரூபத்தின் மெய்க் காட்சி நமக்குக் கிடைக்கிறது. அப்பொழுது மற்றோர் உண்மை நமக்கு விளங்கும். அதாவது நியதி யென்பதும், வினைப்பயன் என்பதும், அதிருஷ்டம் என்பதும், விதியென் பதும் நமது யதார்த்த சொரூபத்தின் எல்லைப்புறத்தில் ஒட்டிக்கிடக்கின்ற ஆதரவில்லாத அற்பக் கோட்பாடுகளாம். நம்மைத் தளைத்துப் பிடித்துக் கொண்டிருந்தவை போன்று ஒருபுறம் அவைகள் தென்பட்டுக்கொண்டிருந்தன. மற்றொரு புறம் நித்தியமுக்தி என்றென்றும் நமக்குச் சொந்தமாய் இருந்து வருகிறது. இந்த உண்மை நமக்கு நெடிது விளங்கவில்லை. ஆகவே கேட்டினின்று நம்மைக் காப்பாற் றிக்கொள்ள நாம் முயன்று வந்தோம். வேட்டையாடப் பட்ட காட்டு முயல் மண்ணினுள் தன் முகத்தை மறைத்துக் கொண்டு தான் பத்திரமாக இருப்பதாக நினைத்தது. தீங்கு களினின்று நம்மை நாம் விடுவித்துக்கொள்ள நாம் செய் கின்ற எத்தனம் இது போன்றது. மயக்கத்தால் நமது யதார்த்த இயல்பை நாம் மறக்க முயன்று வந்துள்ளோம். அப்படி முயன்றும் நாம் அறவே அதை மறக்க முடியவில்லை. நமக்குச் சொந்தமாயுள்ள பேரியல்பு நம்மைக் கூவி யழைத் துக்கொண்டேயிருந்தது. அதற்குச் செவி சாய்க்கவும் நாம் ஓரளவு இசைந்தோம். தெய்வத்தையோ அல்லது தேவதை களையோ வெளியுலகில் எங்கேயோ நாம் நாடியதும், வெளி யுலகில் சுதந்திரத்தை நாம் தேடியதும் ஆகிய முயற்சிகளெல் லாம்கூடி முடிவில் ஒரு முயற்சியாய் உருவெடுத்தது. அதா வது நமது சொரூபத்தை நாம் தேடித்திரிகிறோம். நமது சொரூபத்தைக் குறித்து நமக்கு எட்டிய ஒலியை நாம் முத லில் தவறுதலாகப் பொருள்படுத்தினோம். அதாவது அந்த ஒலி அக்னியினிடத்திருந்தும், ஏதோ ஒரு தேவதையினிடத்

திருந்தும், சூரியனிடத்திருந்தும், சந்திரனிடத்திருந்தும், நக்ஷத்திரங்களிடத்திருந்தும் வந்ததாக நினைத்தோம். அது நமது உள்ளத்தினின்றே உதித்த ஒலியென்று இறுதியில் நாம் உணரலானோம். நாம் நித்திய முக்தர் என்று இந்த ஒலி ஓவாது நம் உள்ளத்தில் எழுந்துகொண்டே இருக்கிறது. அந்த ஓசையின் இசை ஒழிவின்றி உச்சரித்த வண்ணமாய் இருக்கிறது. இந்த இசைக்குப் பிறப்பிடம் மெய்ப் பொருளாகிய ஆத்மா. நாத பிரம்மம் என்று அழைக்கப் படுவது அதுவே. அப்படி வந்துகொண்டிருக்கும் இசையின் ஒரு பகுதி மண்ணுலகம் ஆயிற்று; ஒரு பகுதி நியதியாக, அதாவது இயற்கையிலுள்ள சட்டதிட்டங்களாக வடிவெடுத்தது; அண்டம் அனைத்துமானது மற்றொரு பகுதி. அந்த இசை யாண்டும் நமக்குச் சொந்தம். இக்கோட்பாட்டைத் தெளிவு படுத்துமிடத்து, மனிதனுடைய யதார்த்த சொரூபத்தை விளக்குதல் வேதாந்தத்தின் லட்சியமாகும். வேதாந்தம் நமக்கு எடுத்து ஓதும் மற்றொரு செய்தியும் உண்டு. அதாவது பிரபஞ்சமாகத் தோன்றியிருப்பது பரபிரம்மம். அத்தகைய தோற்றத்தினுள் தலைசிறந்தது மானுடத் தோற்றம். மனிதனைகத் தோன்றியுள்ள தெய்வத்தை ஆராதிக்கத் தெரிந்துகொள்ளாதவன் தோற்றத்துக்கு அப்பால் உள்ள தெய்வத்தை எப்படி ஆராதிக்க முடியும்?

கிறிஸ்துவ வேதமாகிய பைபிளில் ஒரு கோட்பாடு உண்டு. அதாவது, "உனக்குக் கண்ணெதிரே தென்படுகின்ற மானுட சகோதரனை நீ நேசிக்கத் தெரிந்துகொள்ளாவிட்டால், உன் கண்ணுக்குப் புலப்படாத ஈசுவரனை நீ எப்படி நேசிக்க முடியும்?" மனிதனுடைய முகவிலாசத்தில் ஈசனுடைய சான்னித்தியத்தைக் காணமாட்டாதவர்கள் அதை வேறு எங்குக் காணவல்லவர்கள்? மேகமண்டலத்தில்

தெய்வம் வீற்றிருக்கிறது என்பதும், ஜடப்பொருள்களாகிய கல், மண் முதலியவைகளில் உருவாக்கிய விக்கிரகங்களில் தெய்வம் வீற்றிருக்கிறது என்பதும் வீண் கற்பனைகளல் லவா? வெறும் கட்டுக்கதைகளில் நம்பிக்கைவைத்து தெய்வம் எங்கேயோ இருப்பதாக எண்ணியிருப்பாரும் உளர். அத்தகைய மனிதர்களும் தெய்வத்தைப் புறவுலகில் எங்கும் காணப்போவதில்லை. மானுடராகப் பிறந்துள்ள ஆடவர் மகளிர் இடத்தில் தெய்வ சான்னித்தியத்தைக் காண முயலும்பொழுதுதான் பாரமார்த்திக வாழ்வு சாதகன் ஒருவனுக்குத் துவங்குகிறது. ஒரு மனிதன் வலது கன்னத்தில் உன்னை அறைந்தால் இடது கன்னத்தையும் அறையுண்ணுதற்பொருட்டு அவனுக்குக் காட்டு, என்ற கோட்பாடு கிறிஸ்துவ வேதத்தில் உண்டு. மனிதர் எல்லாரும் சொரூபத்தில் ஒன்றே என்று உணர்ந்தவர்க்கே அக்கோட்பாட்டின் தாத்பரியம் விளங்கும். மனிதனை சாக்ஷாத் தெய்வமாகக் காணும் பரிபாகம் ஒரு காலத்தில் உனக்கு ஏற்படும். அப்பொழுது புலியையும் பரம புருஷனாகவே நீ பொருள் படுத்துவாய். எதெல்லாம் உனக்குப் புலப்படுகின்றதோ அதெல்லாம் பரம் பொருளின் தோற்றங்களாம். நித்தியமாய், நிர்மலமாய் உள்ள பரம வஸ்து இத்தனைவித வடிவங்களெடுத்து விளையாடுகின்றது. நமக்குத் தந்தையாய், தாயுமாய், நண்பனாய், சிசுவாய் வந்திருப்பது ஒரே பரம புருஷன். அவர்கள் அனைவரும் நாமும் சொரூபத்தில் ஒன்றே. பல வடிவங்களிலே தன்னைப் பிரித்துக்கொண்டு பிறகு ஒற்றுமையைக் காட்டி விளையாடுதற்கு ஒரு பொருள் திருவுளங்கொண்டுள்ளது. அப்படித் திருவுளம் கொண்டதன் புறத்தோற்றமே இப்பிரபஞ்சம்.

இங்ஙனம் மக்களுக்கிடையிலே உள்ள இணக்கத்தை தெய்விக இணக்கமாக உயர்த்திக்கொள்ளலாம். இனிக்

கடவுளோடு வைக்கின்ற இணக்கத்துக்கும் வேண்டுமென்கின்ற வடிவத்தைக் கொடுக்கலாம். நமது அன்புக்குரிய பிதாவாகக் கடவுளைக் கருதலாம். உள்ளன்பே உருவெடுத்த அன்னையாகவும் கடவுளை ஏற்றுக்கொள்ளலாம். தனக்கு நிகராயுள்ள தோழனாகவும் தெய்வத்தை வைத்துக்கொள்ளலாம். மேலும் நாயகன் நாயகி முறையில் அவனோடு இணக்கம் வைத்துக்கொள்ளலாம். தந்தையென்று தெய்வத்தை அழைப்பதைவிட தாய் என்று அழைப்பது மேலானது. ஏனென்றால் அச்சத்துக்கு ஆங்கு இடமில்லை. அவனைத் தோழனாகக் கருதுவது அதிலும் சிறந்தது. தோழமையில் உயர்வு தாழ்வு இன்மையே அதற்குக் காரணமாகும். தெய்வத்தைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் வைத்துக் கொள்ளுதல் இவை யாவிலும் சாலச் சிறந்தது. தலைவனுக்கும் தலைவிக்கும் இடையில் உள்ள தூய அன்பில் எந்தவிதமான வேற்றுமையும் கிடையாது. பாரசீக தேசத்துப் பழங்கதை யொன்றை ஈண்டு ஞாபகத்துக்குக் கொண்டு வருவது பொருந்தும். அக்கதையின்படி தலைவன் ஒருவன் தன் தலைவியின் வீட்டுக்கு வந்து வாயில் கதவைத் தட்டினான். "யார் அது?" என்ற வினா வீட்டினுள்ளிருந்து வந்தது. "நான்" என்று நாயகன் விடை விடுத்தான். உள்ளிருந்து மறுமொழி யொன்றும் வரவில்லை. இரண்டாந்தடவை நாயகன் வீட்டு வாயிலை வந்தடைந்தான். கதவைத்தட்டி "இதோ, நான் இங்கிருக்கிறேன்" என்றான். ஆயினும் கதவு மட்டும் திறக்கவில்லை. மூன்றாம் முறை வாயிலண்டையில் வந்து விளித்தான். "யார் அது?" என்னும் ஓசை உள்ளிருந்து ஒலித்தது. "அன்பே, நான் நீயே" என்றான் காதலன். உடனே கதவும் திறந்தது. கடவுளுக்கும் நமக்கும் உள்ள கூட்டுறவு இத்தகையதே. யாவற்றிலும் கடவுள்

இருக்கிறார் என்பது முதல் அனுபவம். அவர் யாவுமாயிருக்கிறார் என்பது அதன் பின்வரும் அனுபவம். மானுட வடிவம் தாங்கியிருக்கும் ஆண் பெண் ஒவ்வொருவரும் அந்த ஆனந்த சொரூபியாகிய ஈசுவரனது பிரத்யக்ஷ மூர்த்திகளாம். கடவுள் அறியப்படாதவர் என்று பகர்பவர் யார்? அவரை நாடியலைய வேண்டுமென்று நவிலுபவர் யார்? சர்வ காலமும் நாம் கடவுளையே கண்டுகொண்டிருக்கிறோம். என்றென்றும் நாம் அவருடைய சன்னிதியிலேயே வசித்து வருகிறோம். எங்கும் நிறை பொருளாய் இருப்பவர் அவரே. சர்வகாலமும் அறியப்படுபவர் அவரே. சர்வகாலமும் எல்லாராலும் ஆராதிக்கப்படுபவரும் அவரே.

இங்கு மற்றொரு கோட்பாடு உதயமாகிறது. உபாசனை முறைகள் எண்ணிறந்தவை இருக்கின்றன. அவைகளில் பிழையொன்றும் இல்லவே இல்லை. கருத்தில் வைக்க வேண்டிய பெரிய கோட்பாடு ஒன்று இதுவேயாம். விதவிதமான கிரியைகளைக் கையாண்டு விதவிதமான வடிவங்களிலே மாந்தர் தெய்வத்தை உபாசிக்கின்றனர். அத்தகைய உபாசனைகள் மிகவும் கீழ்த்தரமானவைகள் என்று நாம் எண்ணலாம். ஆனால் உண்மையில் அவைகளில் பிழையொன்றுமில்லை. சத்திய சன்மார்க்கத்தில் இவையாவும் படிகளாக வந்தமைகின்றன. கீழான படியைத் தாண்டி மேலான படிக்கு மாந்தர் பயணம் போய்க் கொண்டிருக்கின்றனர். கீழான உண்மையினின்று மேலான உண்மைக்குப் போகின்றனர். அது எப்படியென்று பார்ப்போம். இருள் என்பதன் பொருள் குறைந்த வெளிச்சமாம். ஆங்கு வெளிச்சமே இல்லையென்று சொல்லிவிடலாகாது. ஒருவர் கண்ணுக்குப் புலப்படாத இருளில் உள்ள பொருள் மற்றொருவருடைய கண்ணுக்குப் புலப்படுகிறது. அதே

பாங்கில் தீமை என்பது குறைந்த நன்மையாம். திருடுவது தீமை. திருடிய பொருளைக்கொண்டு உற்றாரைப் பராமரிப்பது சிறிய நன்மையாகும். குறைந்த சத்தத்தை அங்ஙனம் அசத்தம் என்கிறோம். அன்பையும் அனுதாபத்தையும் அடிப்படையாகக்கொண்டே மற்றவர்களை மதிப்பிட வேண்டும். இது ஞாபகத்தில் வைக்கவேண்டிய முக்கியமானதொரு விஷயமாகும். ஏனென்றால் நாம் ஏற்கனவே தாண்டி வந்த பாதையிலேதான் அவர்களும் வந்துகொண்டிருக்கின்றனர். இப்பொழுது ஒருவன் முக்த புருஷன் ஆய்விட்டால் நாளடைவில் மற்றவர்களும் அங்ஙனம் ஆவார்கள் என்பது கோட்பாடு. வெளிச்சத்தினுள் ஒருவன் இருளைக் காண முடியாது. அதேபாங்கில் முக்தியடைந்துள்ள ஒருவன் அநித்தியத்தை எங்கும் காணமுடியாது. தூய்மையே வடிவெடுத்துள்ள ஒருவன் அழுக்கைக் காணமுடியாது. தன்னுள்ளிருக்கும் ஒன்றைத்தான் ஒருவன் புறத்திலும் காண்கிறான். தனக்குள் அழுக்கில்லாவிட்டால் ஒருவன் அதை ஒருநாளும் வெளியுலகில் காணமுடியாது. அகத்தில் இருப்பதே புறத்தில் இருப்பதாகத் தென்படுகிறது. இது அனுஷ்டானத்துக்கு உரிய முக்கியமானதொரு விஷயம் என்று வேதாந்தம் புகட்டுகிறது. ஒவ்வொரு மனிதனும் இதைத் தனது வாழ்க்கையில் பழக்கத்துக்குக் கொண்டுவர வேண்டும். இதை அனுஷ்டானத்தில் கொண்டுவருவது தான் மானுட வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். இதினின்று நமக்குக் கிடைக்கும் ஊதியம் ஒன்று உண்டு. அதிருப்தியோடும் அசாந்தத்தோடும் பணியாற்றுதற்குப் பதிலாக திருப்தியோடும் சாந்தத்தோடும் நாம் நம் கடமையைச் செய்வோம். உள்ளத்தினுள் இருப்பதே உலகத்தினுள் இருப்பதாகத் தென்படுகிறது என்னும் உண்மை

யானது யாண்டும் நமக்குச் சொந்தம். உள்ளத்தை ஒழுங்குப்படுத்துவது நமது பிறப்புரிமையாகும். உள்ளம் ஒழுங்காய்விட்டால் உலகெலாம் ஒழுங்குடையதாகத் தென்படும். நமது ஜீவிதம் இவ்வுண்மையை விளக்கிக் காட்டுவதாகுக. இதைப் பிரத்தியக்ஷமாக்குவது நமது லட்சியம்.

சாந்தோக்ய உபநிஷதத்தின்கண் வரலாறு ஒன்று உண்டு. அதன்படி தேவரிஷியான நாரதர் ஸனத்குமாரர் என்னும் மஹரிஷியிடம் ஒரு தடவை வந்துசேர்ந்தார். அப்படி வந்தவர் பல கேள்விகளைக் கேட்டார். அவைகளுக்கெல்லாம் விடையாக ஸனத்குமாரர் பல விஷயங்களைப் பகர்ந்து கொண்டே போனார். இந்தப் பூமியைவிட உயர்ந்தது இன்னது, அதைவிட உயர்ந்தது இன்னது என்று படிப்படியாக அவரிடமிருந்து பதில் வந்து கொண்டிருந்தது. இந்த ஆராய்ச்சியானது கடைசியாக ஆகாச தத்துவத்தை எட்டியது. ஆகாசம் ஒளியைவிட உயர்ந்தது. ஏனென்றால் சூரியன், சந்திரன், மின்னல், நக்ஷத்திரங்கள் ஆகிய இவை யாவும் ஆகாசத்தில் நிலைபெற்றிருக்கின்றன. நாம் வசித்திருப்பது ஆகாசத்தில்; நாம் மாண்டு மறைந்துபட்டுப் போவது ஆகாசத்தில். பின்பு ஒரு பிரச்னை எழுந்தது. ஆகாசத்தினும் மேலானது ஏதாவது உண்டா, என்பது அக்கேள்வி. பிராணன் ஆகாசத்தினும் மேலானது என்று ஸனத்குமாரர் விடை விடுத்தார். நமது உயிர்த்தத்துவம் தான் பிராணன் என்று வேதாந்தம் போதிக்கிறது. ஆகாசம் போன்றே பிராணனும் எங்கும் வியாபித்துள்ளது. நமது சரீரத்தில் ஆனாலும் சரி, அல்லது வேறு எங்கு ஆனாலும் சரி, உண்டாகின்ற நடமாட்டங்கள் அனைத்தும் பிராணனுடைய செயல்களாம். ஆகாசத்தைவிடப் பிராணன் பெரியது. ஜீவித்திருக்கும் அனைத்தும் பிராணனிலே ஜீவித்திருக்

கின்றன. தாயாக வடிவெடுத்திருப்பதும் பிராணன். தந்தை யாக உருவெடுத்திருப்பதும் அதுவே. உடன் பிறந்தாரா யிருப்பதும் பிராணன். ஆசாரியராய் அமைந்திருப்பதுவும் அதுவே. ஞாதா அல்லது அறிபவனாய் இருப்பதும் பிராணன்.

இதே சாந்தோக்ய உபநிஷதத்தின்கண் ஆராய்ச்சிக் குரிய மற்றொரு விஷயம் இருக்கிறது. மெய்ப்பொருள் எது என்பதைப் பற்றிப் பிதாவிடம் புத்திரனாகிய சுவேதகேது வினவுகிறான். பற்பல விஷயங்களைப் பிதாவானவர் புகட்டு கிறார். பின்பு முடிவுரையாக அவர் ஒன்று பகர்கிறார்: "தென்படுகின்ற பிரபஞ்சம் முழுதுக்கும் முதற் காரணமா யிருப்பது ஒன்று. ஒரே மூலப் பொருளினின்றே இவை யாவும் தோன்றி வந்துள்ளன. யாவுமாயிருப்பது அந்த மூலப்பொருள். மெய்ப் பொருளாயிருப்பதும் அதே மூலப் பொருளே. ஓ சுவேதகேது, நீ அது என்று அறிக." பின்பு பல உதாரணங்களைத் தந்தையானவர் எடுத்து ஓதுகிறார். "ஓ சுவேதகேதுவே, தேனீயானது வெவ்வேறு புஷ்பங் களிலிருந்து தேனைச் சேகரிக்கிறது. துளி துளியாக வந்து சேரும் தேன்கள் வெவ்வேறு மரங்களினின்றும் வெவ்வேறு புஷ்பங்களினின்றும் வந்தவை என்பதைத் தாம் அறிய மாட்டா. அதேபாங்கில் பெருவாழ்வு என்னும் பெரு நிலையை நாம் அடைந்தான பிறகு நம்மிடத்து ஏதேனும் வேற்றுமை எப்பொழுதாவது இருந்ததாக நாம் உணர்வ தில்லை. இனி அனைத்துக்கும் மூலப்பொருளாயுள்ள ரஸம் எதுவோ, அந்த ரஸத்தின் கண்ணே ஒவ்வொரு பொருளும் தனது இருப்பிடத்தைப் பெற்றுள்ளது. அந்த ரஸம் தானே மெய்ப்பொருள் என்பது. ஆத்மா என்பதும் அதுவே. ஓ சுவேதகேது, நீயும் அதுவே." மேலும் ஓர் உதாரணத்தைக்

கொண்டு தந்தையானவர் மைந்தனுக்கு எடுத்து விளக்கு கிறார். கடலைக் குறித்து ஓடும் நதிகளை இனி அவர் உவமான மாக எடுத்துக் கொள்கிறார். "வெவ்வேறு இடங்களில் நதிகள் வெவ்வேறு பெயர் பெறுகின்றன. ஆனால் உண்மை யில் அவையாவும் அவைகளுக்குப் பேர் இருப்பிடமாகிய சமுத்திரத்திலிருந்து வந்தவைகள். திரும்பவும் சமுத்திரத் துக்குப் போனதும் தாங்கள் வெவ்வேறு நதிகளாக இருந் ததை அவைகள் மறந்துவிடுகின்றன. நாம் எல்லோரும் ஸத் சொரூபத்திலிருந்து வந்தவர்கள். இப்பொழுது நாம் அதை அறியாதவர்களாக இருக்கிறோம். ஓ சுவேதகேது, நீ அது." இங்ஙனம் பிதா புகட்டிக்கொண்டே போகிறார்.

ஞானத்தைப் பற்றிய இரண்டு மூல சூத்திரங்கள் அல்லது கோட்பாடுகள் இருக்கின்றன. விசேஷமாயுள்ள ஒன்றை சாதாரணமாயுள்ள ஒன்றோடு சீர்தூக்கியும், சாதா ரணமாயுள்ளதை சமஸ்தமாய் (எங்குமாய்) இருப்பதோடு சீர்தூக்கியும் அறிகிறது ஒரு கோட்பாடாகும். ஒரு மனிதன் துன்பப்படுகிறான். அது விசேஷ நிகழ்ச்சி. எல்லாரும் துன் பப்படுகின்றனர். அது சாதாரண நிகழ்ச்சி. இயற்கையில் உள்ள எல்லா உயிர்களும் துன்புறுகின்றன. அது சமஸ்தம். இவைகளுள் விசேஷத்தை சாதாரணத்தோடும், சாதா ரணத்தை சமஸ்தத்தோடும் ஒப்பிட்டு உணர்வது அறிவைப் பெறுவதற்கான ஒருவகைக் கோட்பாடு ஆகும். இனி, இரண்டாவது கோட்பாட்டின்படி ஏதாவது ஒரு பொருளை ஆராய்ச்சி செய்ய வேண்டுமானால் அப்பொருளின் சொரூபத் தைக் கொண்டே கூடுமான வரையில் அதை விளக்குதல் ஞான சாதனமாகும். இப்பொழுது நாம் எடுத்துக்கொண்ட முதல் கோட்பாட்டின்படி ஞானம் என்பது பொருள்களை வெவ்வேறு வகுப்புகளாகப் பகுத்தெடுப்பதாம். அவைகளை

வகைப்படுத்துதலில் உயர் நிலைக்குப் போகப்போக ஞானம் ஓங்குகிறது. மற்றவைகளிடத்திருந்து மாறுபட்ட, தன்னந் தனியாயுள்ள நிகழ்ச்சி ஏதாவது ஒன்று நேர்ந்தால் நாம் அதிருப்தி யடைகிறோம். அதே சம்பவம் திரும்பத் திரும்ப நிகழுமானால் அதை நியதி யென்றும் இயற்கையின் விதி அல்லது சட்டதிட்ட மென்றும் காட்டி நாம் திருப்தியடைகிறோம். மரத்தில் பழுத்துப் பிரிந்த கனிகளுள் ஒரே ஒரு கனி நிலத்தில் விழுந்தது; ஏனையவை அந்தரத்தில் மிதக்கிக் கொண்டிருந்தன வென்றால், அது ஏன் அப்படியாயிற்று என்ற கேள்வி ஆராய்ச்சிக்கு வருகிறது. ஆனால் மரத்தினின்று பிரிந்த கனிகள் எல்லாம் நிலத்தில் விழுமானால் நமக்குத் திருப்தி யுண்டாகிறது. அது இயற்கையின் நியதி யென்று நவிலுகிறோம். பொருள்களில் உள்ள ஆகர்ஷண நியமம் என்று அச்செயலை வகைப்படுத்துகிறோம். தனி நிகழ்ச்சிகளினின்று பொது நிகழ்ச்சிகளை அனுமானிக்கின்றோம். விசேஷ சம்பவத்தினின்று சாதாரண சம்பவங்களை யூகிக்கின்றோம்.

மெய்ப்பொருள் ஆராய்ச்சிக்கு இத்தகைய தத்துவ விசாரம் செய்வது முற்றிலும் அவசியமாகிறது. பௌதிக விக்ஞானிகளுடைய ஆராய்ச்சிக்கும் தத்வதரிசிகளுடைய ஆராய்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஏதேனும் ஒரு குறித்த பொருளைப்பற்றிய ஆராய்ச்சி இறுதியில் இயற்கையைப்பற்றிய பொது ஆராய்ச்சியாக நிறைவேறியிருக்கிறது. பண்டைக் காலத்தில் நிகழ்ந்ததும் இதுவே; இக்காலத்தில் நிகழ்வதும் இதுவே. பழைய நூல்களாகிய உபநிஷதங்களை ஆராய்ந்தால் இந்த உண்மை புலப்படும். அதாவது ஞானத்தை நாடிய சான்றோர் குறிப்பாக ஏதேனும் ஒரு பொருளைப்பற்றிய ஆராய்ச்சியாகத் துவக்கினர். பின்பு

16949



எல்லாப் பொருளுக்கும் பொதுவாயுள்ள கோட்பாட்டை யுணர்தல் என்பதில் அவர்களுடைய ஆராய்ச்சி முற்றுப் பெற்றது. தேவர்கள் என்பார் இறுதியில் ஒரு தத்துவத்தில் ஒடுங்கிவிடுகின்றனர். இனி ஜகத்தின் அமைப்பைப் பற்றிய கொள்கையில் பண்டைக்காலத்து முனிவர்கள் மேலும் மேலும் ஆழ்ந்துபோயுள்ளார்கள். சூக்ஷ்ம பூதங்களினின்று இன்னும் அதிசூக்ஷ்ம பூதங்களை அவர்கள் ஊடுருவி ஆராய்ந்தனர். ஒரு பொருள் எவ்வளவுக் கெவ்வளவு சூக்ஷ்மமானது ஆகின்றதோ அவ்வளவுக் கவ்வளவு அது எங்கும் நிறை பொருள்—சர்வ வியாபகத்துவமுடையது ஆகின்றது. ஆகாசம் என்னும் சூக்ஷ்ம பூதம் எங்கும் வியாபித்து உள்ளது என்னும் முடிவுக்கு அவர்கள் வந்தார்கள். ஆகாசத்தைவிட சூக்ஷ்மமானது பிராணன். அதன் வியாபகம் ஆகாசத்திலும் மிக்கது என்னும் கோட்பாட்டுக்கு அம்முனிவர்கள் வந்தார்கள். இந்த ஆராய்ச்சிகள் அனைத்துக்கும் அடிப்படையாக இன்னொரு கோட்பாடு உறுதி பெற்று வருவதாயிற்று. அதாவது ஒன்றுக்கொன்று மாறுபட்ட பல பொருள்கள் இல்லை. ஆகாசம் என்னும் பூதமே இன்னும் உயர்ந்த நிலையில் பிராணன் என்னும் வடிவம் எடுத்துள்ளது. வேறு ஒரு பாங்கில் பகருமிடத்து உயர்ந்த நிலையில் உள்ள பிராணன் சிறிது ஸ்தூல நிலைக்கு வந்து ஆகாசம் என்னும் பெயர் பெறுகிறது. அந்த ஆகாசம் இன்னும் ஸ்தூலமுடையதாகி வெவ்வேறு பூதங்களும், பூதப் பொருள்களும் ஆயின.

சகுண பிரம்மம் அல்லது ஈசுவர சொருபத்தை எல்லா மதங்களுக்கும் பொதுவான பொருளாகத் தொகுத்தறிவது மற்றொரு மூலசூத்திரமாகிறது. பிரக்ஞானகனத்தின் தொகை அல்லது சமஷ்டி ஈசுவரன் என்னும் பெயர் பெறுகிறது.

இந்த விளக்கத்தில் ஒரு குறைபாடு இருக்கிறது. ஏனென்றால் இத்தகைய விளக்கத்தில் சகுண பிரம்மம் முழுதையும் அடக்கி விட்டோம் என்று பொருள்படுத்த முடியாது. ஒவ்வொரு மதமும் தெய்வத்துக்கு விளக்கம் கொடுக்கிறது. அத்தகைய விளக்கம் சகுண பிரம்மத்தின் ஏதேனும் ஓர் அம்சத்தை மட்டும் வர்ணிக்கிறது. அதனுடைய முழு வர்ணனை ஒரு நாளும் மொழியில் அடங்காது. வஸ்து ஆராய்ச்சியை இரண்டாம் சூத்திரமாக எடுத்துக்கொண்டோம். அதிலும் ஒரு குறைபாடு உளது. ஒவ்வொரு பொருளுக்கும் விளக்கம் தரும்பொழுது அப்பொருளின் சொரூபமும் இயல்புமே அவ்விளக்கத்துக்கு ஏதுவாக வேண்டும். அதற்கு உதாரணம் ஒன்று எடுத்துக்கொள்வோம். மரத்தினின்று பழுத்த பழம் கீழே விழுகிறது. ஏதோ ஒரு பிசாசு அதைப் பூமியின்கண் கொண்டு வந்து சேர்க்கிறது என்று நம்புகிற கூட்டத்தார் இருக்கலாம். ஆனால் பொருள்களிடத்து இருக்கிற ஆகர்ஷண சக்தியே அது கீழே விழுவதற்குக் காரணமாகிறது. ஆகர்ஷண சக்தி என்று இயம்புவது பெரிதும் யுக்திக்கு ஒத்திருக்கிறது. ஏனென்றால் அது பூமி போன்ற பொருளுக்குச் சொந்தமாயுள்ள இயல்பு. அப்படியல்லாது அது பிசாசின் தொழில் என்று எண்ணும் போது அப் பொருளுக்கு அன்னியமான மற்றொரு கர்த்தாவை அதனுள் கொண்டுவந்து கலப்பதாகிறது. ஏதேனும் ஒருநாள் பிசாசு அந்த வேலையைச் செய்யாவிட்டால் அப்பொருள் எப்படி இயங்கும் என்ற கேள்வி வரும். இயற்கையினுடைய நடைமுறையில் வேறு யாரோ தலையிடுகிறார்கள் என்ற நம்பிக்கை யுக்திக்கு ஒவ்வாது. தத்துவ விசாரணைக்கு நாம் எடுத்துக் கொள்ளும் பொருள் பிரபஞ்சமாக இருக்கலாம் அல்லது அதற்கு அப்பாற்பட்டதாயிருக்கலாம். எப்பொருளை நாம்

ஆராய்ந்து பார்த்தாலும், அப்பொருளின் சொரூபமே, அப் பொருளின் ஸ்வபாவமே அதற்குத் தக்க விளக்கம் கொடுக்க வேண்டும். ஒரு பொருளிடத்திருந்தே அதற்கு வேண்டிய விளக்கத்தைப் பெறுவது சாஸ்திர கோட்பாடு ஆகும். அப் பொருளுக்குப் புறம்பாயுள்ள கர்த்தாக்களிடமிருந்து அதன் இயல்புக்கு விளக்கம் பெறுவது சாஸ்திரத்துக்கு முரண் பட்டதாகும்.

ஜகத்தின் சிருஷ்டி கர்த்தாவாயிருக்கிற சகுண ஈசுவர ளைப் பற்றிய சூத்திரம் ஒன்று உண்டு. அந்த சூத்திரம் அல்லது கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டுதான் அந்தச் சிருஷ்டி கர்த்தாவையும் நாம் விசாரித்து அறிய வேண்டும். சில மதங்கள் கர்த்தனைப்பற்றிக் கூறும் கருத் துக்கள் சில உண்டு. சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்துக்கு முற்றி லும் புறம்பானவர் சிருஷ்டி கர்த்தா. அவர் ஆணையின்படி வெறும் சூனியத்திலிருந்து இந்த ஜகத்தானது தோன்றி வந்துள்ளது. இந்த ஜகத்துக்கு அன்னியமானவராக அவர் இருந்துகொண்டு இதை ஆட்டி வைக்கிறார். இத்தகைய கொள்கை சாஸ்திரத்துக்குச் சிறிதும் ஒவ்வாது. இதைப் புகட்டுகிற மதமே வலிவற்றது ஆய்விடுகிறது. பண்டைக் காலத்தில் ஆனாலும் சரி, இக்காலத்தில் ஆனாலும் சரி, இத்த கைய மதபோதனை விவேகிகளுக்கு ஏற்புடையது ஆகாது. மனிதனிடத்து இருக்கிற சக்தியைப் பன்மடங்கு அதிகப் படுத்தி அது தங்கள் தெய்வத்திடத்து இருப்பதாக அச்சம யங்கள் புகட்டுகின்றன. அத்தகைய தெய்வத்துக்கு ஒரு சமயம் திடீரென்று மனதில் தோன்றியது; உலகம் உண்டா கட்டும் என்றார். சூனியத்திலிருந்து அது உடனே வந்து விட்டது. இந்த உலகில் தெய்வம் அந்தர்யாமியல்ல. இதற்கு அன்னியமாய் அவர் இருக்கிறார். இத்தகைய

போதனைகளை யெல்லாம் தத்துவஞானி ஒருவனால் ஏற்றுக் கொள்ள இயலாது. இரண்டு விதமான குறைகளினூடு இக்கொள்கையானது மனிதனைக் கொண்டு சேர்க்கிறது.

ஈசுவரனுக்குக் கொடுக்கிற வர்ணனை அல்லது லக்ஷணம் பொருத்தமற்றதாகிறது. இதுவே முதல் குறைபாடு. இரண்டாவதாக இயற்கைக்கு இது தகுந்த விளக்கமாகாது. இத்தகைய மதபோதனையானது காரணத்துக்கும் காரியத்துக்கும் எந்த விதமான தொடர்வும் காட்டுகிறதில்லை. சிருஷ்டிக்குக் காரண பூதமாயிருக்கிற தெய்வம் எங்கேயோ வசித்திருக்கிறது. அவரால் காரியப்படுத்தப்பட்ட இயற்கை நமக்குக் கண்கூடாகத் தென்படுகிறது. காரண காரியமாக வரும் இயற்கையை மனிதன் நெடுங்காலம் ஆராய்ந்திருக்கிறான். அதில் அவனுக்கு ஓர் உண்மையும் பிடிபட்டிருக்கிறது. காரணத்துக்கு அன்னியமாகக் காரியம் இல்லை. காரணமே புதியதொரு வடிவெடுத்துக் காரியம் என்னும் பெயர் பெறுகிறது. நவீன பௌதிக விக்ஞானம் நாளுக்கு நாள் இவ்வுண்மையை நன்கு நிலைநாட்டி வருகிறது. சிற்றுயிரானது படிப்படியாகப் பேருயிராக விரிவடைவது பரிணாமவாதம். இந்தப் பரிணாமவாதத்தை உண்மையென்று எல்லாரும் ஏற்றுக்கொள்கின்றனர். காரணமே புதியதொரு வடிவெடுத்திருப்பது காரியம் — இது பரிணாமவாதத்தின் சூத்திரமாகும். காரணமாயிருப்பது தன்னைச் சிறிது மாற்றியமைக்கிறது; அது காரியமாகப் பரிணமித்துவிடுகிறது. சூன்யத்திலிருந்து ஜகத் சிருஷ்டிக்கப்பட்டது என்னும் போதனை விக்ஞானியர் உலகில் நகைப்புக்குரியதாகும்.

வேதாந்த தர்சனமானது இத்தகைய பரிசீலனைகளைச் சமாளிக்க வல்லதா? ஈசுவரனுக்குக் கொடுக்கிற லக்ஷணம் பொருத்தமானதாயிருக்கவேண்டும். அத்தகைய ஈசுவரனுக்

கும் இயற்கைக்கும் உள்ள தொடர்வு காரண காரிய தத்துவத்துக்கு ஒத்ததாயிருக்கவேண்டும். இந்த இரண்டு பரீக்ஷைகளை வேதாந்த தர்சனம் மீளுமானல் பிறகு பகுத்தறிவாளர்க்கு அது ஏற்புடைய மதமாகும். யுக்திக்கும் அனுபவத்துக்கும் ஒத்தவைகளையே விவேகிகள் வேண்டுகின்றனர். புரோஹிதர்களுடைய போதனைகளென்றும், ஆலய அர்ச்சகர்களுடைய ஐதிகங்களென்றும், சாஸ்திரங்களின் சாசனங்களென்றும் ஏதேனும் கொள்கைகளை நவீன மனிதனுக்கு நாம் எடுத்து வழங்கினல் அவன் அவைகளை ஏற்றுக் கொள்ள ஆயத்தமாயில்லை. பயங்கரமாகப் பருத்துக்கிடக்கும் அவநம்பிக்கையே அதன் விளைவு ஆகும். இன்னும் ஒரு கூட்டத்தார் தெய்வ நம்பிக்கையுடையவர் போன்று வெளி வேஷம் போடுகின்றனர். உள்ளூற அவர்களின் உள்ளத்திலே நாஸ்திகம் ஒன்றே பெருமிதமாகக் குடிகொண்டிருக்கிறது. மூன்றும் கூட்டத்தார் ஒரு சாரார் உண்டு. மதம் என்றல் அருவருப்புடன் அவர்கள் அதைவிட்டுப் பின் வாங்குகின்றனர். புரோஹிதத் தந்திரத்தைத் தவிர அதில் வேறு என்ன பொருள் உளது என்று அவர்கள் அதை அறவே நிராகரிக்கின்றனர்.

சமய நெறி என்பது ஒரு விதமான தேசாசாரமாக வடிவெடுத்துவிட்டது. பண்டு ஒரு காலத்தில் நமது சமுதாயத்தில் பாரமார்த்திக மகத்துவம் ஒன்று இருந்தது. அதன் அடையாளம் ஏதோ சிறிது இன்றைக்கு எஞ்சி நிற்கிறது. சிறிதளவாவது மிஞ்சியிருக்கிற அந்த மகிமை அழிந்து பட்டுப் போகாதிருக்கட்டும். ஆனல் பண்டைக்காலத்து மனிதனுக்கும் இக்காலத்து மனிதனுக்கும் ஒரு பெரிய வேற்றுமை யுண்டு. பூர்வீக மனிதனுக்கு சமய உணர்ச்சி இயல்பாக உண்டாயிருந்தது. பசுவினிடம் கன்றுக்குட்டி இயல்

பாகப் பாய்ந்தோடுவதுபோன்று அவன் சமய நெறியைச் சார்ந்திருந்தான். இக்காலத்து மனிதன் அதை அங்ஙனம் விரும்பி நாடுகிறதில்லை. இக்காலத்து மனிதன் பகுத்தறிவைக் கையாண்டு பார்க்கிறான். மதத்துக்கு அவ்வளவு பெரிய அவசியமில்லை யென்று அவன் ஓர்கிறான். ஈசுவரன் மனிதனைக் காப்பாற்றுகிறார் என்னும் கருத்தும், அவருடைய சிருஷ்டியைப்பற்றிய கருத்தும், ஒவ்வொரு மதமும் தனக்குரிய தெய்வமே முழுமுதற்பொருள் என்னும் கருத்தும் இனிமேல் மக்களுக்கிடையில் செல்லமாட்டா. புத்த மதத்தின் பெயர் பெரிதும் நம் நாட்டை விட்டுப்போய் விட்டது. ஆனால் புத்தமதம் புனிதமான நிலையில் இருந்த போது, அது புகட்டிய உயர்ந்த கொள்கைகள் நம் நாட்டை விட்டு ஒரு நாளும் போய்விடமாட்டா. ஈண்டு நாம் இயம்பிய இந்த மூன்று நம்பிக்கைகளையும் புத்தமதம் நிராகரிக்கிறது—அதாவது கடவுள் நம்மைக் காப்பாற்றுகிறார், அவர் தமக்குத் தோன்றியபடி சிருஷ்டிக்கிறார், ஒவ்வொரு மதமும் தன் தெய்வத்தையே பெரிய பொருளாகப் பேசுகிறது ஆகிய கொள்கைகளை அது ஏற்றுக்கொள்கிறதில்லை. பண்டைக்காலத்தில் புத்தமதம் மேலோங்கிப் போனதற்குக் காரணம் இத்தகைய ஆதரவற்ற கோட்பாடுகளை எதிர்த்ததேயாம். அளவிடமுடியாத சக்தி இயற்கையின்கண் உண்டு. பிரபஞ்சத்தில் தேவையாயிருப்பவைகளையெல்லாம் இயற்கையினின்று பெறமுடியும். இயற்கைக்கு அன்னியமாக ஏதேனும் பொருள் இருக்கிறது என்று வற்புறுத்த வேண்டிய அவசியமில்லை. ஆத்மா என்னும் பொருள் இருக்கிறது என்று இயம்புவதும் வீண். இங்ஙனம் புத்தமதம் வாதித்து வந்தது.

தொன்றுதொட்டு வந்துள்ள மற்றொரு விவாதம் உண்டு. அது திரவியமும் குணமும் என்பதைப்பற்றியதாகும்.

இதைக் குறித்திருந்த பழைய குருட்டு நம்பிக்கையை இன்றைக்கும் சிற்சில இடங்களில் காணலாம். இடைக் காலத்தில் சிறப்பாக ஒரு விவாதம் நடைபெற்று வந்தது. குணங்கள் திரவியங்களைச் சார்ந்திருக்கின்றனவா என்பது ஒரு பெரிய கேள்வியாயிருந்து வந்தது. நீளம், அகலம், கனம் என்பனவாகிய குணங்கள் ஜடபதார்த்தமாகிய திரவியத்தைச் சார்ந்திருந்தனவா என்று விவாதித்தார்கள். திரவியம் இல்லாதவிடத்து குணம் இருக்கிறதா, குணம் இல்லாதவிடத்து திரவியம் இருக்கிறதா என்பது பெரிய பிரச்னையாயிற்று. இத்தகைய ஆராய்ச்சியினுள் புத்த மதம் தலையிடலாயிற்று. திரவியம் இருக்கிறது என்று வாதிப்பதற்கு இடமில்லை என்கிறது புத்தமதம். இருப்பது குணம் ஒன்றுதான். குணத்துக்கு அப்பால் தோற்றத்தில் எதுவும் இல்லை. இதற்கு அக்ஞேய வாதம் என்று பெயர். அதாவது முடிவான உண்மை எது என்பதை யாரும் அறிந் திலர். இக்காலத்திய (Agnostics) அக்ஞேயவாதிகளுடைய கொள்கையும் இதுவேயாம். முடிவான நிலை இன்னதென்று யாரும் அறியவில்லை. உத்தேசமாக அவரவர்க்குத் தோன்றி யதைப் பகர்கின்றனர் என்கிறார்கள் அக்ஞேயவாதிகள். இனி லோகாயதர்கள் (Materialists) என்பார் ஒரு கூட்டம் உண்டு. யுக்தியில் அவர்கள் இன்னும் ஆழ்ந்து செல்லு கின்றனர். நாம் பஞ்சேந்திரியங்களாலும் மனதாலும் நுகர் கிற இப்பிரபஞ்சம் ஒன்றுதான் உளது. இதற்கு அப்பால் வேறு ஒரு பொருளும் இல்லை என்பது அவர்களின் கோட் பாடு.

இனி வேதாந்த தர்சனம் பகர்வது யாது என்று பார்ப் போம். ஓயாது நிலை மாறி மாறி அமைந்துகொண்டிருக்கிற இப்பிரபஞ்சத்துக்கு நித்திய பரிணம ஜகத் என்று பெயர்.

அதை க்ஷரம் என்றும் அழைப்பதுண்டு. இதைத் தழுவியே மாறுபாடு அடையாத வேறு ஒரு பொருள் உளது. அது அக்ஷரம் எனப்படுகிறது. க்ஷரம், அக்ஷரம் ஆகிய இரண்டு மெய்ப்பொருள்கள் இருக்கின்றனவென்று ஒரு சாரார் கருதுகின்றனர். அவர்கள் கொண்டுள்ள இக்கொள்கைக்கு துவைத மதம் என்று பெயர். ஒரு பொருளே க்ஷரமாகவும் அக்ஷரமாகவும் ஏக காலத்தில் இருக்கிறது என்பது இன்னொரு கொள்கை. இக்கோட்பாடு விசிஷ்டாத்வைதம் எனப்படும். இறுதியாக வேதாந்த தர்சனத்தில் அத்வைதவாதம் என்பது ஒன்று உண்டு. இத்தனை விதமான கொள்கைகளையும் சரியாக சமரசப்படுத்துவது அத்வைத வேதாந்தம் ஒன்றே. மெய்ப்பொருளாக இருப்பது ஒன்றே. அதற்கு வியவஹாரிக ஸத் என்றும் பாரமார்த்திக ஸத் என்றும் இரண்டு நிலைகள் உண்டு. க்ஷரம், அக்ஷரம் என்னும் இரண்டு பொருள்கள் இல்லை. யாண்டும் மாறாது மெய்ப்பொருளாயிருப்பது பாரமார்த்திக ஸத் அல்லது அக்ஷரம். அதன்கண் க்ஷரம் அல்லது மாறுபாடு இருப்பது போன்று வெறுமனே தோன்றுகிறது. பரிணமம் அதனிடத்து இருப்பது போன்று அது காட்சிகொடுத்தாலும் உண்மையில் அது அபரிணம வஸ்து.

தேகம், மனம், ஆத்மா ஆகியவைகளை வெவ்வேறு வஸ்துக்களாக நாம் கருதி வருகிறோம். வாஸ்தவத்தில் உள்ளது ஒரு வஸ்துவே. அது பல வஸ்துக்களாகக் காட்சி கொடுக்கிறது. இதற்கு அத்வைத வேதாந்திகள் சர்வ சாதாரணமாகக் கொடுக்கும் உபமானம் ஒன்று உண்டு. ரஜ்ஜுவில் ஸர்ப்பம், அதாவது கயிற்றில் பாம்பின் காட்சியை சான்றாக எடுத்து ஓதுகிறார்கள். இருளை முன்னிட்டோ, அல்லது வேறு எக்காரணத்தாலோ சிலர் கயிற்றைப் பாம்பு

என்று எண்ணி மயங்கிவிடுகின்றனர். ஆனல் மனம் தெளி யுங்காலே பாம்பு என்னும் பிராந்தி போய்விடுகிறது. கயிறு என்னும் உண்மை வெளியாகிறது. இந்த உதாரணத்தி னின்று நமக்குக் கிடைக்கும் கோட்பாடு ஒன்று உளது. ஸர்ப்பம் என்ற எண்ணம் மனதில் இருக்கும்போது கயிறு என்ற எண்ணம் போய்விடுகிறது. கயிறு என்னும் ஞானம் வரும்போது ஸர்ப்பம் என்னும் பிராந்தி அல்லது மயக்கம் அகன்றுவிடுகிறது. அதே பாங்கில் எப்பொழுது வியவ ஹாரிக ஸத் ஆகிய ஜகத் நமக்குத் தோன்றுகிறதோ அப் பொழுது பாரமார்த்திக ஸத் ஆகிய பிரம்மம் நமது அனுபூதி யில் இல்லை. பாரமார்த்திக ஸத் ஆகிய அக்ஷரபிரம்மம் நமது காட்சிக்கு இலக்காகும்பொழுது வியவஹாரிகஸத்ஆகிய பிர பஞ்சம் மறைந்து போய்விடுகிறது. இப்பொழுது நமக்கு மற் ெருருவிஷயம் நன்கு புலப்படுகிறது.பிரத்யக்ஷவாதி (Realist) என்பவன் ஒருவன் இருக்கின்றுன். பரோக்ஷ ஞானத்தில் புலனுகும் இப்பிரபஞ்சமே அவனுக்குப் போதுமானது ஆகின்றது. அதற்குமேல் விக்ஞானவாதி (Idealist) என் னும் மற்றொருவன் இருக்கிறுன். அவன் அபரோக்ஷ ஞானத்தை நாடியவன். இவ் இருதரத்தாருடைய கொள் கைகளும் நமது ஆராய்ச்சிக்கு வந்துசேருகின்றன. வியவ ஹாரிக ஸத் ஆகிய பிரபஞ்சத்தை மாத்திரம் பிரத்யக்ஷவாதி பார்க்கிறுன். பாரமார்த்திக ஸத் ஆகிய பரபிரம்மத்தை மாத்திரம் விக்ஞானவாதி காண்கிறுன். உண்மையாகவே அபரோக்ஷ ஞானத்தை அவன் அடையப்பெற்றவன் ஆக வேண்டும். அத்தகையவன் பரிணமங்களையெல்லாம் கடந் தவன் ஆகின்றுன், மாயப்பிரபஞ்சம், அதாவது மாறுபாடு நிறைந்த இயற்கையானது அவனுடைய காட்சியில் இல் லாது ஒடுங்கிவிடுகிறது. ஜகத் முழுதும் மித்தை, பரிணமம்

என்று சொல்லுதற்கு ஒன்றுமில்லை—இங்ஙனம் காட்டுதற்கு அபரோக்ஷ ஞானிக்கு அதிகாரம் உண்டு. இதற்கு மாருக பிரத்யக்ஷவாதியோ பரிணமம் நிறைந்த ஜகத்தைமட்டும் காண்கிருன். அக்ஷர பிரம்மம் அவனுடைய காட்சியில் இல்லை. ஆதலால் இப்பிரபஞ்சத்தை ஸத் சொரூபம் என்று அவன் சாதிக்கிருன்.

இத்தகைய தத்துவ விசாரத்தின் விளைவு யாது? வேறு படும் சமயக்கருத்துக்களை சமரசப்படுத்துதற்கு சகுண பிரம்மம் அல்லது ஈசுவரனைப்பற்றிய கொள்கை போதாது என்பது வெளியாயிற்று. இன்னும் உயர்ந்த கோட்பாடா கிய நிர்க்குண நிராகாரத்துக்குப் போவது அவசியமாகிறது. யுக்திக்கு ஒத்ததாகிய வேறு உபாயம் எதுவும் இல்லை. அப்படி உயர்ந்த நிலைக்குப் போவதால் சகுண பிரம்மத்தைப் பற்றிய கொள்கை அடிபட்டுப்போகிறது என்பதல்ல. சகுண பிரம்மமாகிய ஈசுவரன் மெய்ப்பொருள் அல்ல என்று நாம் நிரூபிக்கப்போவதுமில்லை. பின்பு சகுண பிரம்மத்துக்கே தக்க விளக்கம் தருதற்கு நாம் நிர்க்குண பிரம்மத்தின்கண் சென்ருகவேண்டும். கிரணங்கள் சூரியனில் அடங்கியிருப் பது போன்று சகுண பிரம்மமானது நிர்க்குண பிரம்மத்தில் அடங்கியிருக்கிறது. நிர்க்குண பிரம்மத்திலே அனைத்தும் அடங்கிவிடுகின்றன. நிர்க்குண பிரம்மம் ஒன்றே அகண்ட மாய், அனந்தமாய் இருக்கக் கூடியது. சகுண சொரூபமோ வரையறைக்கு உட்பட்டது. ஆக, நிர்க்குண பிரம்மத்தின் கண் வைத்து சகுண பிரம்மம் ஆதரிக்கப்படுகிறதே யொழிய அது அழிவு அடைந்துவிடுவதில்லை. பலதடவைகளில் சந் தேகம் ஒன்று உதிப்பதுண்டு. அதாவது நிர்க்குண பிரம்ம உபாசனைக்குச் சென்ருல், சகுண ஈசுவர உபாசனை அழிந்து போம் என்பது. அகண்டாகார விருத்தியில் செல்லும்

மானுடன் ஒருவனுக்கு ஜீவ வியக்தி நசித்துப்போய்விடும், அவன் காரியத்துக்கு உதவான் என்கின்ற ஐயம் எழுவதுண்டு. ஆனால் உண்மையில் வேதாந்த தர்சனத்தின் நோக்கம் மனிதனுடைய வியக்தியைச் சூனியமாக்கிவிடுவதல்ல; அற்ப மனிதனைப் பெருமகன் ஆக்குவதே அதன் நோக்கமாகும். இக்கோட்பாட்டை விளக்குதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். அலையைக் கடலோடு இணைத்துப் பொருள்படுத்தினால்தான் அலைக்குப் பெருமையும் வலிவும் கிடைக்கும். அங்ஙனம் ஜீவ வியக்தியைப் பரம்பொருளோடு சேர்த்துப் பொருள்படுத்தினால் அதற்கு ஆதரவு உண்டு. ஒரு துளி நீர் என்பது உண்மையில் கடலின் சொரூபமே. ஜீவாத்மன் என்பது உண்மையில் பரமாத்மனே; வியஷ்டி என்பது வாஸ்தவத்தில் சமஷ்டியே. ஜீவாத்மனைப் பரமாத்மாவிடத்திருந்து பிரித்தெடுக்க முயன்றால் அது பொருளற்றதாய்விடும். அனைத்துடனும் ஒன்றுபட்டுள்ள ஆத்மா தன்னை அனைத்துக்கும் அன்னியமாக எண்ணுமாகில் அப்பொழுதே அது நிலைகுலைந்துபோய் விடும். பிரிந்திருந்தது என்பது எப்பொழுதும் கிடையாது.

ஏற்கனவே எடுத்துக்கொண்ட இரண்டாவது கேள்வியைப்பற்றி மீண்டும் கொஞ்சம் ஆராய்வோம். ஒரு பொருளுக்கு நாம் விளக்கம் தரும்பொழுது அந்த விளக்கமானது அப்பொருளின் சொரூபலக்ஷணமாக இருக்க வேண்டும். அதாவது ஒவ்வொரு வஸ்துவுக்கும் விளக்கம் காரணகாரியமாகவோ, அதன் இயல்புமயமாகவோ அதனிடத்திலேயே அடங்கியிருக்கிறது. புறத்தில் உள்ள எதும் அதற்கு விளக்கமாகாது. இக்கோட்பாடானது நமது கருத்தை இன்னும் உயர்ந்த நிலைக்கு எடுத்துச் செல்லுகிறது. அத்தகைய உயர்ந்த கருத்து நமக்கு விளங்கா

விட்டாலும் அது உண்மைக்கு ஒத்தது என்பதை மட்டும் நாம் மறந்துவிடலாகாது. அதற்குச் சான்று ஒன்று இப்பொழுது எடுத்துக்கொள்வோம். நாம் யார் என்று நம்மையே விளக்க முயலுகிறோம். நாம் உடல் அல்ல, உள்ளம் அல்ல, உணர்வு அல்ல, உயிர் அல்ல, சத்சித் ஆனந்த சொரூபம் நாம். பிரம்ம சொரூபம் நாம். இத்தகைய பெருநிலை எங்கிருந்தோ நமக்கு வரமாகக் கிடைத்தது அன்று. நமது யதார்த்த நிலையே நமக்கு உண்மையான விளக்கம் ஆயிற்று.

"ஓ ஸ்வேதகேது, தத் துவம் அஸி, என்பது வேத வாக்கு. நீயே அந்த நிர்க்குண பிரம்மம். எக்கடவுளை நாடி நீ உலகெலாம் தேடியலைந்து திரிந்தாயோ, அக்கடவுள் சொரூபமாக நீ காலமெல்லாம் இருந்திருக்கிறாய். கடவுள் சொரூபமாக நீ இருந்திருக்கிறாய் என்பதன் பொருள் உடல், உள்ளம், உயிர்மயமாகிய நீ யல்ல. இதற்கெல்லாம் மூலப்பொருளாக உன்னிடத்து இருப்பது எதுவோ அந்த நிர்க்குண பிரம்மம் நீ. உன்னுடைய நிஜ சொரூபம் சத் சித் ஆனந்தம். இப்பொழுது நமக்கு அடையாளம் தெரிகிற மனிதன், தோற்றத்தில் வந்துள்ள மனிதன் ஒரு வியக்தியாக வடிவெடுத்தவன். இந்தத் தோற்றத்துக்கு அடிப்படையாயுள்ள மெய்ப்பொருள் நிர்க்குண பிரம்மம். தங்கத்தின் மூலமாகத்தான் தங்க நகையை அறிகிறோம். சர்க்கரையின் மூலமாகத்தான் சர்க்கரைப் பண்டத்தை யறிகிறோம். அங்ஙனம் வியஷ்டியாகிய மனிதனைச் சமஷ்டியாகிய பிரம்மத்தின் மூலம் அறிகிறோம். பிரம்மத்துக்கு அன்னியமாக மனிதன் எப்பொழுதும் இல்லை. பிரம்ம சொரூபமே மனிதனுடைய யதார்த்தநிலை. அவன் பிரம்மம் என்பது தான் அவனைப்பற்றிய உண்மை."

நிர்க்குண பிரம்மத்தில்தான் சர்வமத சமரசம் காண முடியும் என்று நாம் பகர்கிறோம். இது சம்பந்தமாகப் பல கேள்விகள் எழக்கூடும். அவைகளுக்குத் தக்கவிடை காண்பது நம் கடமையாகும். கடினமான பிரச்னைகள் பல தோன்றும். அவைகளைத் தீர்ப்பதற்கு முன்பு அத்வைத வேதாந்தத்தின் கோட்பாட்டைத் தெளிவுபட நாம் தெரிந்துகொள்ள வேண்டும். உருவம் படைத்துள்ள நாம் ஒருவர்க்கொருவர் வேறுபட்டவர்களாகத் தென்படுகிறோம். ஆனால் நம் அனைவர்க்கும் யதார்த்த சொரூபம் ஒன்றே. பிரம்மத்துக்கு அன்னியமானது ஒன்றும் இல்லை. எவ்வளவுக்கெவ்வளவு நம்மை நாம் பிரம்ம சொரூபமாக எண்ணுகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நமக்கு நலமே வாய்க்கும். பூரணத்துக்கு அன்னியமாக நம்மை நாம் நினைக்குமளவு நமக்குத் துன்பமே அதிகரிக்கும். இந்த அத்வைத வஸ்துவினின்றே நாம் கடைப்பிடிக்கவேண்டிய சன்மார்க்கத்துக்கும் அடிப்படையான விளக்கம் கிடைக்கிறது. ஏன் நாம் நல்லொழுக்கத்தினின்று வழுவலாகாது என்னும் கேள்விக்கு வேறு எந்தக் கோட்பாட்டினின்றும் நமக்குத் தகுந்த விடை கிடைக்காது. ஏன் நாம் நல்லொழுக்கமுடையவர்களாக இருக்க வேண்டும் என்னும் கேள்விக்குப் பலர் கொடுக்கின்ற விடை யாது? நமக்குப் புறம்பாயுள்ள தேவதை, அல்லது தேவதைகளின் ஆணை அப்படிப் பிறந்திருக்கிறது என்று அன்னவர் இயம்புவார்கள். விவேகிகள் இத்தகைய விடையை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். ஏனென்றால் அது தத்துவத்துக்கு முற்றிலும் ஒத்ததன்று. செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டவை எவை விலக்கப்பட்டவை எவை என்று ஹிந்துக்கள் ஏராளமாக இயம்புவார்கள். அவைகளுக்கெல்லாம் பிரமாணம் யாது என்று கேட்டால் அதெல்லாம் வேதத்தின் சாசனம்

என்பார்கள் அவர்கள். பின்பு கிறிஸ்துவன் ஒருவன் வேதத்தைப் பிரமாணமாக ஏற்றுக்கொள்ள ஆயத்தமாயில்லை. அதே உற்சாகத்துடன் கிறிஸ்தவர்கள் எதைச்செய்ய வேண்டும், எதைச் செய்யலாகாது என்று எடுத்து ஓதுவார்கள். அதற்கெல்லாம் பைபிள் என்னும் தங்கள் சாஸ்திரமே பிரமாணம் என்பார்கள் அவர்கள். அந்த பைபிளைப் பிரமாணமாக ஏற்றுக்கொள்ளாதவர்களுக்கு அதில் விதித்திருக்கும் கோட்பாடுகள் சாசனம் ஆகமாட்டா. இப்படி வேறுபடும் கோட்பாடுகளை யெல்லாம் தன்னகத்து அடக்கக்கூடிய பொதுக்கொள்கை யொன்று இருக்கவேண்டும். உலகத்தைப் படைத்துக் காத்துவரும் கர்த்தாவாகிய ஒரு கடவுள் மீது நம்பிக்கைவைக்க லக்ஷக்கணக்கான மாந்தர் ஆயத்தமாயிருக்கின்றனர் என்பது உண்மை. அத்தகைய கடவுளை நம்பவோ வணங்கவோ தாங்கள் ஆயத்தமாயில்லை யென்று இயம்புகின்ற ஆயிரக்கணக்கான நுண்ணறிவாளரை உலகெங்கும் நாம் காணலாம். சிருஷ்டிக்கப்பட்ட உலகம் வேறு, சிருஷ்டித்த தெய்வம் வேறு என்னும் கோட்பாடு தங்கள் யுக்திக்கு ஒத்ததல்லவென்று அவர்கள் அதை மறுத்தனர். அதிலும் உயர்ந்த யுக்தி, இயற்கையின் நடைமுறைக்கு ஒத்த யுக்தி வேண்டுமென்று அன்னவர் விரும்பினர். உயர்ந்த தத்துவ ஆராய்ச்சியைத் தன்னகத்து அமைக்க இயலாத குறுகிய சமயக் கோட்பாடுகளிடத்து அறிவாளர் அணுகவில்லை. அதன் விளைவாக விவேகிகள் பலர் சமய சம்பிரதாயங்களில் கட்டுப்படாதவர்களாகவே இருந்துவிட்டார்கள். பகுத்தறிவு படைத்தவர் பலர் சமயத்தை விட்டு விலகியிருப்பதை ஏராளமாக இன்றைக்கு உலகெங்கும் காணலாம்.

ஆராய்ச்சி மிகுந்தவர்களைச் சமயத்தின்கண் சேர்த்து வைப்பதற்குச் சமயக்கோட்பாடுகள் பரந்து உயர்ந்தவை

களாக இருக்கவேண்டும். சமயம் எதைப் புகட்டினாலும் அது யுக்திக்கு முற்றிலும் பொருந்தியதாக இருக்கவேண்டும். யுக்தி அல்லது பகுத்தறிவு வேறு, சமயக்கோட்பாடு வேறு என்று யாராவது பகர்வாரானால் அவருடைய கொள்கை ஆதரவற்றதாகிவிடும். சமயங்கள் பல இருக்கின்றன. அவைகள் ஒன்றோடு ஒன்று மாறுபடுமானால் பின்பு யுக்தி என்னும் அளவையைக் கொண்டுதான் அவைகளை ஆராய வேண்டியதாகும். பயங்கரமான ஏதேனும் ஒரு கொள்கையை ஏதாவது ஒரு மதம் புகட்டத் துணிந்துவிடலாம். தங்கள் மதத்தைச் சேராதாரை அடியோடு கொல்லுதற்குச் சில மதங்கள் இடங்கொடுக்கின்றன. தங்கள் மதத்தைச் சேராதவர்களெல்லாம் நாஸ்திகர்கள் என்பது அவர்களின் கொள்கை. அத்தகையவர்களைத் தீயில்வாட்டவும் வாளால் வெட்டவும் வேண்டுமாம். அப்படிக் கொல்லுவது தப்பு என்று மதவெறி பிடித்த ஒருவனுக்குச் சொன்னால் அவன் அதை ஏற்றுக்கொள்ள மாட்டான். "எங்கள் சாஸ்திரம் அப்படிக் கொல்லும்படி புகட்டியிருக்கிறது. அதுதான் சரி. உங்களுக்கு ஒன்றும் தெரியாது," என்று மதவெறி பிடித்த ஒருவன் மறுமொழி கூறுவான்.

மகம்மதிய சாஸ்திரமாகிய குர்ஆனைவிடப் பழையது பைபிள் என்று கிறிஸ்துவன் ஒருவன் தனது சாஸ்திரத்தை சிலாகித்துக் கூறுவான். பைபிளைவிடப் பழையது எனது தம்மபதம் என்னும் நூல் என்று பௌத்தன் ஒருவன் பகர்வான். பிறகு ஹிந்து ஒருவன் முன்வந்து தனது வேதங்களை விடப் பழைய சாஸ்திரம் உலகில் கிடையாது என்பான். ஆகவே ஒன்றோடு ஒன்று சம்பந்தப்படாத சாஸ்திரப் பிரமாணம் கூறுதலில் பயன் இல்லை. ஒன்றுக்கொன்று விருத்தமாயிருப்பவைகளுள் எதை அளவையாக எடுத்துக்கொள்வது?

மலையின் மீதிருந்து ஏசுநாதர் புகட்டிய நல்லுபதேசங்களைக் கிறிஸ்துவன் ஒருவன் மெச்சுவான். குர் ஆன் என்னும் சாஸ்திரத்தில் உள்ள நீதிநெறிகளைப் பாருங்கள் என்று மகமதியன் ஒருவன் மொழிவான். உயர்வை நாடிப் போராடுகிற நூல்களுக்கிடையில் மத்திய நிலையில் இருக்கத் தகுந்தது எது, என்னும் கேள்வி எழுகிறது. மாறுபடும் கருத்துடைய நூல்களிலிருந்து எல்லார்க்கும் பொதுவாயுள்ள பிரமாணத்தைப் பெற இயலாது. இனி சாஸ்திரங்களைவிட உயர்ந்த பிரமாணம் ஏதாவது உண்டா என்னும் கேள்வி எழக்கூடும். யுக்தி ஒன்றுதான் எல்லார்க்கும் பொதுவான பிரமாணமாகும். பகுத்தறிவு அல்லாது வேறு என்ன எல்லார்க்கும் பொதுவாயிருக்கிறது? யுக்தி அல்லது பகுத்தறிவு அவ்வளவு வல்லமை வாய்ந்ததல்ல என்று கருதுபவர் இருக்கின்றனர். மெய்ப்பொருளை அடைவதற்கு அது எப்பொழுதுமே உபாயமாவதில்லை. பலதடவைகளில் யுக்தியும் வழிதவறிப் போய்விடுகிறது. ஆகவே ஆலயங்களுக்கு அதிபதிகளாயிருக்கும் குருமார்களை அடிபணிந்து நடக்கவேண்டுமென்று பலர் பகர்கின்றனர். குலகுருக்கள், கோயில் குருக்கள், சமய குருக்கள் ஆகியவர்களின் ஆணைகளைப் பிரமாணமாக எடுத்துக்கொள்வதுதான் முறை என்பது அவர்களின் அபிப்பிராயமாகும். இப்படி முடிவு கட்டுவதும் சரியல்ல. மெய்ப்பொருளை ஓர்தற்குப் பகுத்தறிவுக்கு வலிவில்லை யென்றால் புரோஹிதர் கூட்டத்துக்கு மட்டும் எப்படி வலிவு வந்துவிடும்? புரோஹிதர்களை நம்புவதைவிடப் பகுத்தறிவை நம்புவது மேலானது என்றே தீர்மானிக்கலாம். நடக்கக் கற்கும் குழந்தை பல தடவைகளில் கீழே விழுந்துவிடுவது போன்று யுக்தியானது வழி தவறிப்போய்விட்டாலும், கடைசியாக உண்மையின்கண் கொண்டுசேர்த்துவிடும்.

புரோஹிதர்களும் கோயில் குருக்களும் சாதகனை உண்மையினிடம் கொண்டு சேர்ப்பார்கள் என்று உறுதி கூறுதற்கு இடமில்லை.

ஆகவே யுக்தியை நாம் நன்கு கடைப்பிடிக்க வேண்டும். பகுத்தறிவைக் கையாண்டு கொண்டிருப்பதற்கிடையில் மெய்ப்பொருளைப்பற்றி இன்னும் ஒருவிதமான முடிவுக்கும் வராதிருக்கும் மக்களை ஆங்காங்குக் காணலாம். அவர்களிடத்திலும் நாம் பூரண அனுதாபம் காட்டவேண்டும். பகுத்தறிவைப் பயன்படுத்தி ஒருவன் நாஸ்திகனாய்விடுவானாகில் அதில் குற்றமில்லை. ஏனென்றால் அவன் தனது சொந்த அறிவையே சார்ந்திருக்கிறான். யாரோ சொல்லக் கேட்டு முப்பத்துமுக்கோடி தேவர்கள்மீது நம்பிக்கை வைப்பதைவிட தன் சுய அறிவைப் பின்பற்றி ஒருவன் நாஸ்திகனாய்விடுவது மேலானது. ஏனென்றால் அத்தகைய மனிதன் பெயரளவில் நாஸ்திகன் என்றாலும் அவன் தனது அறிவை நம்பியிருக்கிறான். கோடிக்கணக்கான தேவர்களை நம்புபவனோ தனது சொந்த அறிவை நம்பாது போய்விடுகிறான். அறிவு வளர்ச்சி, ஆத்ம போதம், அனுபூதி ஆகியவைகளையே நாம் வேண்டுகிறோம். வெறும் கொள்கைகளும் கோட்பாடுகளும் மனிதனை மேலோன் ஆக்கியது கிடையவே கிடையாது. நூல்களை ஏராளமாகக் கற்பதால் மனிதன் பண்பட்டுப் புனிதவான் ஆய்விடமாட்டான். ஆத்மானுபூதியிலேயே ஆற்றல்கள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. ஆத்மானுபூதி சாஸ்திரத்தில் இல்லை. மனிதனுடைய உள்ளத்தில் இருக்கிறது. சிந்தித்துப் பார்ப்பவனுக்கே சுவானுபூதி வருகிறது. சிந்தித்துப் பார்க்க மாந்தர் கற்றுக்கொள்ளட்டும். மண்ணாங்கட்டி ஒன்றுக்கு எண்ணிப்பார்க்க இயலுகிறதில்லை. பின்பு அது காலமெல்

லாம் மண்ணுங்கட்டியாகவே இருக்கிறது. சிந்தனை சக்தி படைத்திருப்பதே மனிதனுடைய தனிமஹிமையாகும். எண்ணிப் பார்ப்பது மானுடனுக்கு அமைந்துள்ள இயல்பு. சிந்தித்துப் பார்ப்பதாலேயே மனிதன் விலங்குகளினின்று வேறுபடுகிறான். முறையாகச் சிந்திப்பதற்கு யுக்தி என்று பெயர். யுக்தி ஒன்றையே மனிதன் முக்கியமாகப் பின்பற்ற வேண்டும். பிறர் சொற்கேட்டு மதநம்பிக்கை கொள்ளுதலில் கேடுகள் பல கிளம்பி வந்து விடுகின்றன. சாஸ்திரப் பிரமாணம் என்பதை நம் நாட்டில் நாம் மிகைபடக் கையாண்டு விட்டோம். அதை ஓரளவு மட்டுப்படுத்தி விட்டு, யுக்திப் பிரமாணத்தில் கருத்தைச் செலுத்தவேண்டும்.

சுருதிப் பிரமாணம் அல்லது வேதத்தை மேற்கோளாகக் கொள்ளும் பாங்கு நம் நாட்டில் எவ்வளவு தூரம் வேரூன்றிக்கிடக்கிறது என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். பிரபஞ்சம் வேதத்திலிருந்து வந்தது என்பது நம் தேசத்து மக்களின் நம்பிக்கையாகும். பசு என்னும் பிராணி உலகில் இருக்கிறது என்று உனக்கு எப்படித் தெரியும்? கோ—பசு என்னும் சொல் வேதத்தில் வந்திருப்பதால் அத்தகைய பிராணி ஒன்று இருக்கிறது என்று நம்பியாக வேண்டும். புறவுலகில் மனிதன் இருக்கிறான் என்று உனக்கு எப்படித் தெரியும்? மனுஷன் என்னும் சொல் வேதத்தில் இருப்பதால் அதை நம்புகிறோம். வேதத்தில் அதைப் பற்றிச் சொல்லாதிருந்தால் வெளியுலகில் மனிதனும் இருந்திருக்க முடியாது. வேதத்தில் விசுவாசம் வைப்பவர் கூற்று இத்தகையது. வேத வாக்குக்கு அத்தகைய அளவு கடந்த மதிப்பு! மற்ற நூல்களை மேற்போக்காகப் படிப்பது போன்று அதைப் படிப்பதில்லை. அதை முறையாக அத்யயனம் செய்தாக வேண்டும். தெள்ளியெடுத்த புத்திமான்கள்

தங்கள் ஆயுள் முழுதையும் அதற்கே ஒப்படைத்திருக்கிறார் கள். நியாய சாஸ்திரத்துக்கு ஒத்த நுண்ணிய கோட்பாடு கள் பலவற்றை அவர்கள் அதைச் சுற்றிலும் நெய்தமைத் திருக்கின்றனர். தங்கள் கொள்கைகளுக்கு ஒப்ப அவர்கள் வேண்டியவாறு வாதம் செய்திருக்கின்றனர். அவை யாவும் சாஸ்திரங்களாக அமைந்து கிடக்கின்றன. இத்தகைய தர் சனங்களை உருவாக்குதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பல்லாயிரம் பேரறிஞர் தங்கள் ஜீவிதத்தையே ஒப்படைத்து வைத்திருந்தனர். சுருதிப் பிரமாணத்துக்கு அவ்வளவு பெரிய ஆதிக்கம் வந்துள்ளது. அதினின்று கிளம்பிய ஆபத் துக்களும் பல இருக்கின்றன. சாஸ்திரப் பிரமாணத்தைச் சார்ந்திருக்குமளவு சுய அறிவு வளர்ச்சிக்குத் தடையுண்டா கிறது. அதற்கேற்றவாறு மானுட வர்க்கத்தின் வளர்ச்சியே குன்றிப்போய் விடுகிறது. ஆனால் சமுதாயத்தின் வளர்ச்சி யைத்தான் வாஸ்தவத்தில் நாம் வேண்டுகிறோம். நிலவுல கில் உள்ள நமது வாழ்வு நிலையற்றது என்பது உண்மை. அந்த நிலையற்ற வாழ்வுக்கும் பயன்படுகின்றவைகளையே நாம் நாடுதல் வேண்டும். வெறும் வாய்ப்பேச்சாக முடிந்துவிடு பவைகள் நமக்கு வேண்டாம். நானாவிதங்களில் வளர்ச்சி யடைவதே வாழ்வின் நோக்கம்.

அத்வைத வேதாந்த மதத்தின் தனிச்சிறப்பு ஒன்று உண்டு. நாம் அறிந்துள்ள சமயக் கொள்கைகள் அனைத் திலும் அது ஒன்றே யுக்திக்கு முற்றிலும் பொருத்தமான தாகும். கடவுளைப்பற்றிய மற்றகொள்கைகள் யாவும் அரை குறையானவைகள். அக்கோட்பாடுகள் பகுத்தறிவுக்கு முற் றிலும் ஒத்தவைகள் ஆகா. மற்ற மதங்கள் புகட்டுகின்ற உபாசனா மூர்த்திகள், உபாசனா முறைகள், சாதன வகைகள் ஆகிய யாவும் ஆத்ம வளர்ச்சிக்கு வேண்டப்படுகின்றன

வென்று அவை யாவையும் அத்வைத மதம் ஏற்றுக்கொள் கிறது. பிறகு அதற்கு அப்பாலும் அது ஆத்ம சாதகனை எடுத்துச்செல்ல வல்லது. தத்துவ தர்சனத்துக்கு ஒவ்வொரு கொள்கையும் எவ்வளவு தூரம் பயன்படக்கூடியது என்று வகைப்படுத்தி அவை யாவையும் சமரச நோக்கத்துடன் ஏற்றுக்கொள்வது அத்வைத வேதாந்தத்தின் மகிமையே யாம். அதிகாரி பேதத்தை முன்னிட்டு அவை யாவும் வேண்டப்படுகின்றன. ஆண்டான் அடிமை யுணர்ச்சி அத் வைத வேதாந்தத்துக்கு ஒவ்வாது என்று சிலர் ஆக்ஷேபம் செய்கின்றனர். ஆனல் அத்தகைய கொள்கையானது எத்தனை பேருக்கு ஆறுதல் அளிக்கிறது என்பதை மறந்து விடலாகாது. மனதுக்கு ஆறுதல் அளிக்கின்ற மதத்தை அவர்கள் வேண்டுகின்றனர். அவர்களுக்கு அது முற்றிலும் தேவையாயிருக்கிறது. முடிவான உண்மை என்னும் ஞான சூரியனை எல்லாரும் நேரில் பார்க்க முடியாது; பார்க்கக் கண் கூசும். பின்பு அவ்வுண்மைக்கு ஏற்ப அனுஷ்டிப்பது அதைவிடக் கடினமானது. ஆக அனுஷ்டிப்பதற்குச் சுலப மானதும் மனிதனுக்கு ஆறுதல் அளிப்பதுமாகிய மதம் சமுதாயத்தில் இருப்பது முற்றிலும் அவசியமாகிறது. பலர் முன்னேற்றமடைதற்கு அத்தகைய மதம் உதவி புரிகிறது. அறிவுத்துறையிலே கீழான நிலையிலே பலர் இருக்கின்ற னர். படிப்படியாகப் பயிற்சி கொடுத்து அவர்களை மேல் நிலைக்குக் கொண்டு வருதற்கு ஏற்ற எளிய சாதனவகை களை வழங்கவேண்டும். கடவுள் இப்பொழுது சயனித்திருக் கின்ருர், இப்பொழுது திருப்பள்ளியெழுச்சியாகிறது, இப் பொழுது நீராடுகிருர், இப்பொழுது ஆடை ஆபரணங்களை அணிந்து கொள்கிருர், இப்பொழுது உண்கிருர், இப் பொழுது நமக்குத் தரிசனம் கொடுக்கிருர் என்ற பூஜா

முறைகளெல்லாம் பலருக்குத் தேவையாயிருக்கின்றன. அவைகளையெல்லாம் முற்றிலும் கடைப்பிடித்தாகவேண்டும். உயர்ந்த வேதாந்தக் கோட்பாடுகளைக் கிரகிக்க எல்லாரும் ஆயத்தமாயில்லை. மனிதத் தன்மையோடு கூடிய தெய்வந் தான் அவர்களுக்குப் பிடிபடுகிறது. அதற்கேற்ற சின்னங் களும் வழிபாடுகளும் அவர்களுக்கு இருந்தே ஆகவேண்டும். ஆனால் தத்துவ விசாரம் செய்கின்ற விவேகிகள் நிர்க்குண பிரம்மத்தின் கோட்பாட்டை அறிந்தாக வேண்டும். நிர்க் குண பிரம்ம உபாசனையை ஆதாரமாகக் கொண்டுதான் ஏனைய எளிய உபாசனை முறைகளை யெல்லாம் நாம் சமரசப் படுத்தி அவைகளுக்கு விளக்கம் தரமுடியும். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். சகுண பிரம்ம உபாசனையின் ஆரம்பதசையில் இருப்பது காளிகாதேவியின் வழிபாடு. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் குரு ஆகிய தோதாபுரி அவர்கள் நிர்க்குண பிரம்ம உபாசனையிலேயே ஊறியிருந் தவர். மாயா சக்தியை வணங்குவது எதற்காகவென்று அவர் அதை ஏளனம் பண்ணவும் துணிந்தார். தோதாபுரி போன்ற ஞானிக்கு சகுண பிரம்ம உபாசனை தேவையில்லை. ஆனால் அது யாருக்குமே தேவையில்லையென்று முடிவுகட்டி விடலாகாது. பக்தன் ஒருவனுக்கு பராசக்தி அன்னையாக வும் ஆதரிப்பவளாகவும் துயரத்தைத் துடைத்து ஆறுதல் அளிப்பவளாகவும் இருக்கிறாள் என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது குருவுக்கே காட்டிக்கொடுத்திருக்கிறார். குரு, சிஷ்யர் ஆகிய இருவர் கோட்பாடுகளையும் பிரமாண மாக வைத்துக்கொண்டு நாம் அறிந்துகொள்ள வேண்டிய உண்மையொன்று உண்டு.மெய்ப்பொருளைப்பற்றியமுடிவான கூற்று நிர்க்குண பிரம்மம் என்பது. அது மனம் மொழிக்கு அப்பாற்பட்டது. தூய, தெளிந்த அந்தக்கரணத்தின்

வாயிலாக அது ஒளிருங்கால் அது சகுண பிரம்மம், அல்லது ஈசுவரன், அல்லது அன்னை பராசக்தி எனப் படுகிறது. நம்மைக் காத்தருளும் தெய்வமென்று அதற்கு அடைமொழிகளை வேண்டியவாறு வழங்கலாம். பின்பு இந்திரியங்களுக்கு விஷயமாகும் இப்பிரபஞ்சமும் அதே பரம்பொருள்தான். அதற்கு அன்னியமாக இது வேறு ஒன்றுமல்ல. இவ்வுண்மையை இன்னொரு பாங்கில் பகர்வோம். உள்ளது ஒன்று பஞ்சேந்திரியங்கள் வாயிலாகப் பார்க்குங்கால் அது பிரபஞ்சமாகக் காட்சி கொடுக்கிறது. தூய அந்தக்கரணங்கொண்டு காண்பவர்க்கு அது காத்தருளும் ஈசுவரன் அல்லது சகுண பிரம்மம். தூய கருவி கரணங்கள் ஒடுங்கியவிடத்து அது சுத்த சைதன்யம் அல்லது நிர்க்குண பிரம்மம். திறந்து வைத்துள்ள புஸ்தகம் போன்று அந்த ஒரு பொருள் எப்பொழுதும் இருக்கிறது. அவரவர் அடைந்துள்ள பரிபாகத்துக்கு ஏற்றவாறு நாம் பரம்பொருள் என்னும் அப்புஸ்தகத்தைப் படித்து வருகிறோம். உயிர் ஓவியமாயுள்ள அப்புஸ்தகத்தை ஒவ்வொருவனும் தனக்குத் தானே படித்தாகவேண்டும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் அறிவு ஒவ்வொரு பாங்குடையது எனினும், எல்லார் அறிவுக்கும் பொதுவான தன்மையும் ஒன்று உளது. அறிவில் பொதுவான தன்மை இருப்பதனால்தான் மானுடர் எல்லார்க்கும் சில பொருள்கள் ஒரே விதத்தில் விளங்குகின்றன. ஒரு நாற்காலியைப் பார்க்கும் இருவர்க்கு அது நாற்காலியாகவே விளங்குகிறது. ஐம்பொறிகளைக்கொண்டு உலகைப் புலப்படுத்துகின்றவர்களுக்கு வரும் அனுபவம் ஒன்றே என்பதை இது எடுத்துக்காட்டுகிறது. ஐம்பொறிகளுக்குமேல் ஆறுவது பொறியொன்று உடைய மனிதன் ஒருவன் வருகிறான் என்று

வைத்துக்கொள்வோம். அத்தகைய மனிதனுக்குப் புலனு வது நாற்காலியல்ல. அவன் காட்சியில் அது வேறு ஏதோ ஒன்ருக இருக்கும். ஒரு பொறி அல்லது ஓர் அறிவு உடை யவைகளுக்கெல்லாம் ஒரேவிதக் காட்சி; இரண்டு பொறி அல்லது ஈரறிவு உடையவைகளுக்கெல்லாம் ஒரேவிதக் காட்சி. இங்ஙனம் கருவி கரணங்களுக்கு ஏற்றவாறு காட்சியானது மாறிமாறி அமைந்துகொண்டு போகிறது. ஒரேவிதமாகக் கருவி கரணங்கள் உடைத்திருப்பவர் எல் லார்க்கும் ஒரேவிதமான காட்சி கிடைக்கும் என்பது வெளிப் படை. கருவி கரணங்களில் உண்டாகிற மாறுபாட்டுக்கு ஏற்ப அந்த ஒரே பொருள் பிரபஞ்சமாகத் தென்படுகிறது; ஆளும் ஈசுவரனுகத் தென்படுகிறது; அல்லது நிர்க்குண பிரம்மமாகத் தென்படுகிறது. யார் யார் எத்தகைய கண் கொண்டு பார்க்கின்றனரோ அதற்கேற்ற காட்சி கிட்டு கிறது. பிரபஞ்சமாகத் தென்படுபவைகள் யாவும் கருவி கரணங்களின் அளவையில் அடங்கியவைகளாம். நாம் காண்பது உணர்வது எண்ணுவது எல்லாம் நுகர்ச்சி என் னும் அளவைக்கு உட்பட்டவைகளாம். நமது அந்தக்கரணத் துக்கு விஷயமாகும் சகுண பிரம்மமும் மாயாசகிதம் அல்லது பிரபஞ்ச சொருபமானதாம். நிமித்தம் அல்லது காரண காரியம் என்னும் கோட்பாடே மாயா காரியங்களாகும். அதாவது பிரபஞ்சத்தின் செயல்களாம். இனி உலகத்துக் குக் காரணமாயுள்ள சகுண பிரம்மமும் அளவையில் அடங் கிய பொருளாகிறது. அதன் மாயா காரியங்களை ஒதுக்கி விட்டால் அது நிர்க்குண பிரம்மமே. நமது அறிவு என்னும் அந்தக்கரணத்தின் மூலம் நுகர்ந்தால் அது பிரபஞ்சம். கருவி கரணங்களை ஒதுக்கிவிட்டு அது தன்னில் தானயிருக் கும்போது அது நிர்க்குண பிரம்மம். மாயா காரியமாகத்

தென்படுகிற பிரபஞ்சத்துக்கு அதிஷ்டானமாய் இருக்கும் மூலப்பொருள் எதோ அது நித்தியமாயுள்ள நிர்க்குண பிரம் மமாம். அப்பொருளுக்கு நாம ரூபங்களை வழங்குவது நமது அந்தக்கரணத்தின் செயல்களாகும். இந்த நாற்காலிக்கு ஆதிமூலமாயுள்ள வஸ்து யாண்டும் இருந்தபடி இருக்கிறது. அதற்கு நாமத்தையும் ரூபத்தையும் கற்பிப்பது கரணங் களின் செயல் என்று அறிக.

சலனம் அல்லது அசைவு என்பதை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். ஜகத்துக்குச் சலனம் இன்றியமை யாதது என்பது வெளிப்படை. ஆனால் அகண்ட வஸ்து வினிடத்து அசைவு இருக்கிறது என்று சொல்லலாகாது. அண்டத்தின்கண் உள்ள ஒவ்வொரு சிறு துண்டும், ஒவ் வோர் அணுவும் இடையறாது அசைந்துகொண்டும், மாறி மாறி அமைந்துகொண்டும் இருக்கிறது. ஆனால் சமஷ்டியா யிருக்கும் நிறை பொருளின்கண் எவ்விதமான மாறுதலும் கிடையாது. ஏனென்றால் வியவஹாரிக நிலையில், அதாவது ஒன்றோடு ஒன்று இணக்கம் வைக்கும் பல பொருள்கள் உள்ள நிலையில் சலனத்துக்கு இடமுண்டு. மாறுபாடும் ஆங்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கும். எது இயங்குகிறதோ அது இயற்கை. இயங்குகின்ற யாவும் வியவஹாரிக ஸத் எனப்படும். அசையாத பொருள் ஒன்றோடு சீர்தூக்கியே அசையும் தன்மையுடையது என்று மற்றொரு பொருளைப் பற்றிப் பகர்கிறோம். ஆகவே அசைவை அறிந்துகொள்ள இரண்டு வஸ்துக்கள் வேண்டும். அனைத்தையும் ஒன்றாகத் திரட்டி ஒரே சமஷ்டியாய் எடுத்துக்கொள்ளுமிடத்து அசை வுக்கு இடமில்லை. அது அசைகிறது என்று எதனுடன் சீர்தூக்கி இயம்புவது? ஆக அகண்ட வஸ்துவானது நிர்விகாரமானது; எவ்விதமான மாறுபாடும் அதன்கண்

நிகழ்வதில்லை. பூரணமே அகண்ட வஸ்துவாம். கடலி னுள் அலையிருப்பது போன்று அகண்டத்தினுள் கண்டம் அல்லது வியவஹாரிக ஸத் என்பது உண்டு. அதனுள் அசைவும் இருக்கிறது. ஒவ்வோர் அணுவும் பரமாணுவும் அதனுள் ஓயாது இயங்கிக்கொண்டும் விகாரம் அடைந்து கொண்டும் இருக்கிறது. ஏககாலத்தில் அது அசலமாகவும் சலனமுடையதாகவும் இருக்கிறது; பாரமார்த்திக ஸத் தாகவும் வியவஹாரிக ஸத்தாகவும் இருக்கிறது; நிர்க்குண பிரம்மமாகவும் சகுண பிரம்மமாகவும் இருக்கிறது. ஜகத் என்றால் என்ன, அசைவு அல்லது சலனம் என்றால் என்ன, ஈசுவரன் என்றால் என்ன, ஆகிய கேள்விகளுக்கு இப் பொழுது எளிதில் விடை கொடுக்கலாம். "தத் துவம் அஸி" என்னும் மஹாவாக்கியத்துக்கும் இப்பொழுது விளக்கம் கிடைக்கிறது. இங்ஙனம் நிர்க்குண பிரம்மம் சகுண பிரம்மத்தை ஒழித்து விடுகிறதில்லை என்பது விளங் குகிறது. பாரமார்த்திக ஸத் ஆனது வியவஹாரிக ஸத் தைக் குலைத்து விடுவதில்லை. யுக்தி பூர்வமாக அது வியவ ஹாரிக ஸத்துக்குப் பூரண விளக்கமும் ஆதரவும் கொடுக் கிறது. அதனிடத்துப் பேரன்பு வைப்பதற்கும் அது பூரண அனுமதி கொடுக்கிறது. நிர்க்குண பிரம்மமே சகுண பிரம் மமாகவும் பிரபஞ்சத்திலுள்ள யாவுமாகவும் காட்சி கொடுக் கிறது. கரணங்களின் துணைகொண்டு காணுங்கால் அது சகுண பிரம்மமாகவும் பிரபஞ்சமாகவும் தோன்றுகிறது. நமது கருவி கரணங்களை ஒழித்துவிட வேண்டும். நமது ஜீவ போதம் அழிந்துபட்டுப் போகவேண்டும். அப்பொழுது நாம் அப்பெரிய பொருள் ஆய்விடுகிறோம். "தத் துவம் அஸி" என்பதன் பொருள் அதுவேயாம். நிர்குண நிராகார பிரம்மமே நமது யதார்த்த சொரூபம். அதை நாம் அறிந் திருத்தல் வேண்டும்.

சமுத்திர ஜலம் ஆவியாக வெளியில் வந்து ஒரு குறுகிய வடிவத்தைத் தனக்கு உண்டுபண்ணிக் கொள்கிறது. அதே பாங்கில் மனிதன் தனது யதார்த்த சொருபத்தை மறந்து விட்டுத் தன்னை ஒரு ஜீவ வியக்தியாக எண்ணிக்கொண் டிருக்கிறான். தன்னைச் சூழ்ந்திருக்கும் மற்றவைகளினின்று தான் வேறுபட்டவன் என்றும் தன்னைப் பிரித்து வைத்துக் கொள்கிறான். இங்ஙனம் ஜீவபோதத்தை வளர்த்துக் கொண்ட மனிதன் தனது நிஜசொருபத்தைப் புறக்கணித்து விட்டான். அத்தகைய மனிதனுக்கு அத்வைத வேதாந்த மதம் எதைப் புகட்டுகிறது என்று ஆராயவேண்டும். வேறு வேறாக உயிர்களை விளக்குகின்ற உபாதிகளை உடனே ஒழித்துவிடவேண்டும் என்று அது போதிப்பதில்லை. இத்தனை வித உபாதிகளோடு கூடியுள்ள பொருள் எது என்று அறிந்து கொள்ளுதல் ஒன்றே நமக்கு முற்றிலும் தேவையா யிருக்கிறது. அகண்டமாய் ஏகமாய் உள்ள நிர்க்குண பிரம் மம் ஒன்றுதான் யாண்டும் இருக்கிறது. எண்ணிறந்த ஜீவ கோடிகளாக வடிவெடுத்து அது தன் சொருபத்தை விளக் கிக்கொண்டிருக்கிறது. இனி இப்பிரபஞ்சத்தில் தென் படும் பெரிய பெரிய மாறுதல்கள் அல்லது விகாரங்களின் பொருள் யாது? சிறிய நிலையினின்று பெரிய நிலைக்கு மாறு யமைய யாவும் முயலுகின்றன. பரிணமம் என்பது இதுவே. தன்னிடத்துள்ள அகண்ட சக்தியை மேலும் மேலும் விளக்கு தற்குப் புதிய புதிய வடிவங்களை ஜீவன் எடுத்துக் கொண் டிருப்பதே பரிணமம் எனப்படுகிறது. ஆகவே அகண்டாகார சொருபத்தை அடைதற்கு முன்பு இடைவழியில் நின்றுவிடு வது என்பது எந்த ஜீவனுக்கும் சாத்தியமல்ல. ஜீவசொரு பம் விரிவடைவதன் வாயிலாக அதனிடத்துள்ள ஆற்றல், அருள், ஆனந்தம், அறிவு ஆகிய தெய்வசம்பத்து எல்லாம்

அகண்டாகாரத்தை எட்டியே ஆக வேண்டும். அனந்த சக்தி, அகண்ட சத் சித் ஆனந்தம் நமது நிஜசொரூபம். அதை நாம் எங்கிருந்தோ அடைவது அல்ல; நமக்குச் சொந்தமாயுள்ள அப்பேரியல்பானது இடையீடு இன்றி ஒளிர்தல் வேண்டும்.

அத்வைத வேதாந்தத்துக்கு நடுநாயகமாயுள்ள கொள்கை இதுவேயாம். அறிந்துகொள்ளுதற்கு இது மிகக் கடினமானது. மனிதன் பலவீனன் என்கிற பாடத்தையே பிள்ளைப் பருவத்திலிருந்து அவனைச் சூழ்ந்திருப்பவர்கள் அவனுக்குப் புகட்டி வருகின்றனர். தான் வலிவற்றவன் என்கிற எண்ணத்தையே பிறந்ததுமுதல் ஒருவன் பெற்று வருகிறான். வயது முதிர்ந்த பிறகு தான் சர்வ சக்திமான் என்கின்ற உணர்வைப் பெறுவது ஒருவனுக்கு எளிதன்று. ஆனால் முறையாக விசாரித்துப் பார்த்தால் ஆத்மாவானவன் பேராற்றல் படைத்தவன் என்பது புரியும்; பிறகு அவ்வெண்ணம் சுவானுபூதியாகிறது. உலகிலே மானுடன் பெற்றுள்ள ஞானமெல்லாம் அவனுக்கு எங்கிருந்து வந்தது? அது அவனுடைய உள்ளத்திலேயே மறைந்திருந்தது. புறத்தில் ஞானம் என்பது உண்டா? இல்லை. ஜட வஸ்துவின்கண் ஞானமில்லை; சேதனம் அல்லது அறிவு வடிவினன் ஆகிய மனிதனிடத்து அது யாண்டும் நிறைந்துள்ளது. ஞானம் எவராலும் சிருஷ்டிக்கப்பட்டதன்று; தன்னுள் மறைந்து கிடக்கும் ஞானத்தை மனிதன் வெளிப்படுத்துகிறான். சக்கி முக்கிக் கல்லில் தீ இருப்பது போன்று உள்ளத்தில் ஞானம் இருக்கிறது. ஆலம் வித்து ஒன்று வண்ணத்தில் கடுகில் அரைக்கால் பங்கு இருக்கும். அது மரமாக வளர்ந்து விரியும்பொழுது பல காணி நிலத்தை அது மூடிவிடும். அவ்வளவு பெரிய சக்தி அந்த நுண்ணிய விதையில் மறைந்திருக்

கிறது. மனிதனிடத்துப் பேரறிவு பொலிவது நமக்குக் கண் கூடாக விளங்குகிறது. அம்மனிதன் ஒரு பனித்துளியிலும் நுண்ணிய ஜீவ வஸ்துவாயிருந்த பொழுது அவ்வளவு பெரிய அறிவு அதனுள் புதைந்து கிடந்தது. அதற்கு மேல் அனந்த சக்தியும் ஏன் அதே ஜீவ வஸ்துவினிடத்துப் புதைந்திருக்கலாகாது? அணு மயமான உயிர்த்தத்துவத்தினிடத்து அனந்த சக்தி உறைந்திருப்பது உண்மை. அண்டத்திலுள்ள அனந்த சக்தி அணுவினிடத்திலும் இருக்கிறது. இது முரண்பாடாகத் தோன்றலாம். ஆயினும் இது தான் உண்மை. நாம் ஒவ்வொருவரும் அத்தகைய நுண்ணிய ஜீவ வஸ்துவாயிருந்து இப்பொழுது பெற்றுள்ள நிலைக்கு வந்திருக்கிறோம். இப்பொழுது நம்மிடத்தில் திகழும் ஆற்றலும் அறிவும் அந்த நுண்ணிய உயிர்ப் பொருளாயிருந்த காலத்திலும் நமக்குச் சொந்தமாயிருந்தது. ஆற்றல்கள் அனைத்தும் நமக்கு உணவிலிருந்து வந்தவைகள் என்று சொல்லுவது பொருந்தாது. மலை மலையாக உணவைக் குவித்து வைத்துவிட்டால் அதிலிருந்து நமக்குக் கிடைக்கும் சக்தி எத்தகையது? வித விதமான செடிகளுக்கு எரு பயன்படுகிற விதத்தில் உணவு நமக்குப் பயன்படுகிறது. மற்று சர்வ சக்தியும் நம்மிடத்து அவ்யக்தமாக மறைந்திருந்ததுதான் உண்மை. இதை மனிதன் அறிந்திருக்கலாம், அல்லது அறியாதிருக்கலாம். எனினும் அவனது அந்தராத்மாவின்கண் அனந்த சக்தி புதைந்துள்ளது. அச்சக்தியை அவன் உணர உணர அது வியக்தமாகிறது. தன்னிடத்துள்ள அளப்பரிய சக்தியை மனிதன் சிறிது சிறிதாக உணர்கிறான். அவ்வுணர்ச்சிக்கு ஏற்பத் திண்ணியனாக அவன் விழிப்படைகிறான். புதிய உற்சாகமும் அவனுடைய உள்ளத்தினின்று கிளம்புகிறது. ஆத்ம போதம்

உயருகின்றவளவு பந்தபாசம் மேலும் மேலும் அறுபடுகிறது; பிணித்துள்ள வினைச் சங்கிலிகளெல்லாம் உடைபடுகின்றன. ஆத்ம போதம் பரிபூரணமாகும்போது தனது அனந்த சக்தியையும் நிறை ஞானத்தையும் அவன் உணர்வான். திண்ணியனாகவும் அவன் எழுந்திருப்பான். அத்தகைய நன்னாள் ஒவ்வொருவனுக்கும் நிச்சயமாகவே வந்தமையும். அத்தகைய அருட்பெரும் பேறு விரைவில் வந்தமைதற்கு நாமனைவரும் தீவிரமாக முயலுவோமாக.

சமஷ்டி அல்லது யாவையும் தன்னகத்து அடங்கியுள்ள பரம்பொருளைப் பற்றிய ஆராய்ச்சியை நாம் இதுகாறும் செய்து வந்தோம். வியஷ்டி அல்லது ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தைப்பற்றி வேதாந்தத்தில் என்னென்ன கருத்துக்கள் அடங்கப்பெற்றிருக்கின்றன என்பதை இனி விசாரித்துப் பார்ப்போம். துவைத மதத்தைப் பற்றிய கொள்கை வேதத்தில் பண்டைக்காலத்தில் எப்படி அமைந்திருந்தது என்பதை அறியவேண்டும். ஒவ்வொரு ஜீவனுக்கும் அளவையில் அடங்கிய ஒரு தனி ஆத்மா இருந்தது என்பது தெளிவுறப் பகரப்பட்டிருக்கிறது. வியஷ்டியாகிய இந்த ஜீவாத்மாவைப்பற்றிய கொள்கைகள் பல உருவெடுத்து வந்துள்ளன. இத்தனை விதக் கொள்கைகளுள் பண்டைக்காலத்து வேதாந்திகளுடைய கொள்கையையும், பண்டைக்காலத்து பௌத்தர்களுடைய கொள்கையையும் ஒன்றோடு ஒன்று சீர்தூக்கி ஆராய்ந்தது மிக முக்கியமானது. ஜீவாத்மாவுக்குத் தன்னளவில் ஒரு தனி வியக்தியும் நிறை நிலையும் உண்டு என்று துவைதமத வேதாந்திகள் நிலை நாட்டி வந்தனர். ஜீவாத்மா என்னும் தனி வியக்தியொன்று இல்லவே இல்லையென்று பௌத்தர்கள் நிலைநாட்டி வந்தார்கள். இத்தகைய விவாதம் எது

போன்றது என்பது ஏற்கனவே ஒரு திருஷ்டாந்தத்தின் மூலம் விளக்கப்பட்டது. பொருளும் அதன் பண்பும்—வஸ்துவும் அதன் விபூதியும்—பதார்த்தமும் அதன் குணமும்—இதுதான் ஆராய்ச்சிக்குரிய விஷயமாய் இருந்துவந்தது. குணங்களுக்கு அடிப்படையாக ஒரு வஸ்து இருந்தது என்று ஒரு சாரார் விவாதித்தனர். குணங்கள் தம்மளவில் இருந்து வருகின்றன; அவைகள் எப்பொருளையும் சாரவேண்டிய அவசியம் இல்லை, குணத்துக்கு அன்னியமாக திரவியம் கிடையாது என்பது மற்றொரு சாராரது அபிப்பிராயம். ஆத்மா உண்டு என்பதற்கு மிகமிகப் பழைய கொள்கையொன்று உளது. "தான் தானயிருப்பதை" அடிப்படையாகக்கொண்டது அது. "நான்" என்பதற்கு இலக்காக நேற்று என்ன இருந்ததோ அது "நான்" ஆக இன்றைக்கும் இருக்கிறது. இன்றைக்கு "நான்" என்பதற்கு இலக்காக என்ன இருக்கிறதோ அதே பொருள் "நான்" என்பதற்கு இலக்காக நாளைக்கும் இருக்கும். சரீரத்தில் ஓயாது மாறுதல்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கின்றன. இத்தனைவித மாறுதல்களுக்கிடையில் பழைய ஆள் ஆகிய நான் இருந்துகொண்டே வருகிறேன். ஜீவாத்மாவானது எல்லையில் அடங்கியுள்ள சிறிய வஸ்து என்றாலும் அது தன்னளவில் நிறைபொருளாயிருக்கிறது என்று வாதித்து வந்தவர்களுக்கு இது ஒரு முக்கியமான கோட்பாடாயிருந்து வந்திருக்கிறது.

இதற்கு நேர்மாருக, ஜீவாத்மா என்னும் ஒன்று இருக்கிறது என்று வைத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லவே இல்லையென்று பண்டைய பௌத்தர்கள் வாதித்து வந்தார்கள். நாம் அறிபவைகள் யாவும், நம்மால் மேலும் அறியப்படுபவைகளாய் இருப்பவைகளும் எல்லாம் இப்

பிரபஞ்சத்தில் நிகழும் மாறுபாடுகளே யென்ற விவாதத்தை அவர்கள் கொண்டுவந்தனர். மாருததும் மாற்ற முடியாததுமாயிருக்கிற வஸ்து ஒன்றைக் கற்பித்து வைத்துக்கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. அப்படி இயங்காத பொருள் ஒன்று இருக்கிறது என்று வைத்துக் கொண்டாலும் அது நம்மால் அறியப்படாதது; எத்தகைய முயற்சி பண்ணிஞலும் அது நம் அறிவுக்கு எட்டாது என்பது அவர்களது துணிபு. இதே விதமான விவாதம் இன்றைக்கு ஐரோப்பாவில் நிகழ்ந்துகொண்டிருப்பதைக் காணலாம். வெவ்வேறு கொள்கைகளுடைய அறிஞர்களை ஆங்குக் காணலாம். உண்டு என்பாரும் இல்லை என்பாரும், மனோகற்பிதம் என்பாரும், ஒன்றும் தெரியாது என்பாரும் இப்படி நாஞவிதமான கொள்கைக்காரர்களை அங்குக்காணலாம். இனி அவர்களை யெல்லாம் இரண்டு கூட்டத்தாராகப் பிரித்துவிடலாம். நிர்விகாரியாக மாருத பொருள் ஒன்று உண்டு என்று நம்புவார் ஒரு தரத்தார். துருவமாயுள்ள பொருள் ஒன்றை நாம் தரிசிக்கலாம் என்பது அவர்களது கொள்கை. முன்பு இருந்த அதே பழைய பிரச்னைதான் இன்றைக்கு இக்காலத்திய தத்துவ ஆராய்ச்சியாளர்க்கிடையிலும் இருந்து வருகிறது. வெவ்வேறு வார்த்தைகளை அவர்கள் வழங்கி வருகிருர்கள்; ஆஞல் விஷயம் ஒன்றே. சலனம் அடைந்து கொண்டிருக்கும் இயற்கைக்கு அடிப்படையாக அசல வஸ்து ஒன்று உண்டு என்பது ஒரு பக்ஷம். அசல வஸ்து ஒன்றும் இல்லை, அது இருக்கவேண்டிய அவசியமும் இல்லையென்பது மற்ருெரு பக்ஷம். சலனத்துக்கு அடிப்படையாக அசல வஸ்து ஒன்று இருந்தால்தான் இந்த சலனத்தையே விளக்கமுடியும் என்பது முன்னவரது முடிவு. அசல வஸ்து என்பது அஞவசியமான கற்பிதம்;

சலனம் ஒன்றுதான் நமக்கு விளங்கக் கூடியது; சலனமற்ற ஒன்றை அறியவோ, உணரவோ, நுகரவோ முடியாது. இது பின்னவரது பேச்சு. இங்ஙனம் மேல்நாட்டு அறிஞர் வாதித்து வருகின்றனர்.

பண்டைக்காலத்தில் பரதகண்டத்தில் இந்தப் பிரச்னைக்குத் தக்க சமாதானம் கண்டுபிடிக்கப்படவில்லை. அதற்குத் தகுந்த காரணமும் ஒன்று இருந்தது. குணத்துக்கு அன்னியமாகப் பதார்த்தம் ஒன்று இருக்கிறது என்று ஒரு போதும் நிரூபிக்க முடியாது. இனி, ஆத்மாவின் சொரூபம், அதாவது தன்னில் தானாய் நான் இருக்கிறேன் என்னும் கேள்வியை எடுத்துக்கொள்வோம். நேற்று இருந்த நான் இன்றைக்கு இருக்கிறேன். அதைப் பற்றிய ஞாபகம் எனக்குத் தொடர்ந்து இருக்கிறது; ஆகவே நான் நிலைபேறுடைய ஒரு பொருள் ஆகிறேன் — இந்த யுக்தியும் பொருந்தாது. இதெல்லாம் வெறும் சொல்லில் அமைந்துள்ள புரளியைத் தவிர வேறு ஒன்றுமில்லை. அதற்குச் சான்று ஒன்று எடுத்துக் கொள்வோம். "நான் செய்கிறேன்," "நான் போகிறேன்," "நான் கனவு காண்கிறேன்," "நான் தூங்குகிறேன்," "நான் நகர்கிறேன்," என்று ஒரு மனிதன் வாக்கியத் தொடர்வுகளைப் பிரயோகிக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். ஈண்டு, செய்வது, போவது, கனவு காண்பது போன்ற வினைகளெல்லாம் மாறி மாறி அமைந்து வருகின்றன. "நான்" என்பது மட்டும் மாறாதிருந்து வந்தது. "நான்" என்னும் உணர்வு நிலைபேறு உடையது என்ற முடிவுக்கு அவர்கள் வந்துள்ளார்கள். அது ஒரு வியக்தி அல்லது ஜீவாத்மா என்பது அவர்கள் கருத்து. மாறுபாடுகளெல்லாம் சரீரத்துக்குரியன; ஆத்மாவுக்கு எந்த விதமான மாறுபாடும் இல்லை. மேற்போக்காக ஆராயுங்கால் இது

திருப்திகரமான கோட்பாடாகத் தென்படுகிறது. ஆனல் இது வாக்குச் சாதுர்யத்தை அடிப்படையாகக் கொண்டிருக் கிறது. எழுத்தளவில் "நான்" என்பது வேறு; செய்தல், போதல், கனவு காணுதல் ஆகியவை வேறு என்று காட்டி விடலாம். ஆனல் மனத்தகத்து இவ்விரண்டையும் பிரித்து வைக்கமுடியுமா என்பது கேள்வி.

உணவு உண்ணும்பொழுது என்னை நான் உண்பவனுக உணர்கிறேன். உண்பது என்னும் செயலோடு நான் சம்பந்தப்பட்டவன் ஆய்விடுகிறேன். நான் ஓடும்பொழுது நான் வேறு, ஓட்டம் வேறு அல்ல. எனவே ஆள் வேறு அவன் வினைவேறு என்னும் விவாதம் அவ்வளவு வலிவு படைத்ததாகத் தோன்றவில்லை. ஞாபகத்தை அடிப்படை யாக வைத்துள்ள விவாதமும் வலிவற்றதாம். ஒரு மனிதனுடைய தனி வியக்தி அவனுடைய ஞாபகத்தை அடிப்படையாகக் கொண்டதென்ருல், தன்னைப்பற்றிய பல வரலாறுகளை அவன் மறந்துவிடும்பொழுது அவனுடைய வியக்தி என்னகும்? மறந்து போனவைகளெல்லாம் அவன் சொரூபத்துக்கு அன்னியமானவைகளாகி விடுகின்றன. சில சந்தர்ப்பங்களில் சில மனிதர்கள் தங்கள் பழைய வரலாறு களை அடியோடு மறந்துவிடுவதுண்டு. இனிப் பைத்தியத் தில் பல பாங்குகள் உள. பித்தன் ஒருவன் தான் கண்ணடி யால் ஆக்கப்பெற்றவன் என்று நினைத்துக்கொள்வான்; மற்ளுருவன் தன்னை ஒரு மிருகம் என்று வைத்துக்கொள் வான். மனிதனுடைய இருப்பும் இயல்பும் ஞாபக சக்தியை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்ருல் தன்னைக் கண் ணடி என்று நினைத்துக்கொள்பவனைப் பற்றிய உண்மை யாது? ஞாபக சக்தியானது ஓர் உறுதியான பிரமாணம் ஆகாது என்பதுதான் காண்பிக்கப்படுகிறது. எனவே

ஜீவாத்மாவானது தன்னளவில் நிறைவுடையதென்றும் நிலைபேறுடையதென்றும் அதை குணத்துக்கு அன்னியமானதாக வைத்து நிரூபிக்க முடியாது. குறுகியதும் வரையறைகளுக்கு உட்பட்டுள்ளதுமாகிய ஸத் சொரூபம் ஒன்று குணத்திரள்களோடு கூடியுள்ளது என்று எடுத்துக்காட்ட இயலாது.

இதைவிடப் பண்டைய பௌத்தர்களுடைய கோட்பாடு அதிக வலிவுடையதாகத் தென்படுகிறது. குணங்களின் தொகுதிக்கு அப்பால் உள்ளது எதையும் நாம் அறிகிறோமில்லை, எதையும் நாம் அறிந்துகொள்ளவும் முடியாது. பௌத்தர்களுடைய கொள்கைப்பிரகாரம் ஜீவாத்மா என்பது ஒரு சுழற்காற்றுப் போன்றது. ஒன்றோடு ஒன்று மோதுகின்ற காற்றும், குப்பையும் தூசியும் சேர்ந்தது சுழற்காற்று. அங்ஙனம் இந்திரியங்களுக்கு விஷயமாகின்றவைகள், மனதில் உணரப்படுபவைகள் ஆகியவைகளின் தொகையே ஜீவாத்மா என்பதாகும். குணங்களின் கூட்டமே ஜீவாத்மா எனவும் பகர்வதுண்டு. குணத்தொகை வடிவினதாகிய ஜீவாத்மாவானது ஓயாது மாறியமைந்து கொண்டிருக்கிறது. இது பௌத்தர்களின் கொள்கையாகும்.

மேலே இயம்பிய இரண்டு கொள்கைகளையும் சமரசப் படுத்துவது அத்வைத வேதாந்தம். பதார்த்தம் வேறு, குணம் வேறு என்று அவைகளைப் பிரித்துவைக்கமுடியாது என்பது உண்மை, என்கிறான் அத்வைத வேதாந்தி. பின்பு பரிணாமம் அபரிணாமம், அதாவது மாறுபாடு மாறுபாடின்மை, ஆகிய இரண்டையும் ஒன்றுசேர்த்து எண்ண நம்மால் இயலாது. ஒன்றை எண்ணுகையில் மற்றது மறைந்துவிடுகிறது. ஆனால் பதார்த்தமே குணமாகவும் வடிவெடுத்துள்ளது.

வஸ்து என்றும் குணம் என்றும் இரண்டு இல்லை. அபரிணும வஸ்துவே பரிணுமம் பூண்டுள்ளது போன்று தோன்றிக் கொண்டிருக்கிறது. பரிணுமம் அடைந்து வருகிற ஜகத் வேறு, பரிணுமம் அடையாத பிரம்மம் வேறு எனலாகாது. பரம்பொருள் என்று சொல்லப்படும் பாரமார்த்திக ஸத் வேறு, இஹம் என்று சொல்லப்படும் வியவஹாரிக ஸத் வேறு எனலாகாது. ஏனெனில் பாரமார்த்திக ஸத் தானே வியவஹாரிக ஸத் ஆக விளங்கிக் கொண்டிருக்கிறது. உணர்ச்சிகள் என்றும், காட்சிகள் என்றும், அது மட்டுமல்ல சரீரம் என்றும் நம்மால் அழைக்கப்படுபவைகள் எல்லாம் இந்த ஆத்மாவே. காட்சி பேதத்தால் அதை உணர்ச்சித் திரள் என்றும் உடல் என்றும் உரைக்கின்றோம். நமக்குச் சரீரம் இருக்கிறது, மனது இருக்கிறது, ஆத்மா இருக்கிறது இப்படியெல்லாம் எண்ணுகிற பழக்கத்தில் நாம் ஊறி விட்டோம். ஆனல் வாஸ்தவத்தில் இருப்பது ஒன்று. ஒரே வேளையில் ஏதேனும் இரண்டைப்பற்றிய அனுபவம் இல்லை. ஒரு வேளையில் ஏதேனும் ஒன்றின் அனுபவமே உள்ளது.

என்னை நான் சரீரம் என்று நினைக்கின்ற வேளையில் நான் சரீரமே; அதற்கு அன்னியமான வேறு ஏதோ ஒரு வஸ்து என்று அப்பொழுது இயம்புவதில் பொருள் இல்லை. என்னை நான் ஆத்மா என்று உணருங்கால் உடல் மறைந்து போய்விடுகிறது; தேகத்தைப் பற்றிய உணர்வு அப்பொழுது இருப்பதில்லை. தேஹாத்மபுத்தி அல்லது உடலைப் பற்றிய உணர்வு ஒழிந்தாலன்றி ஆத்மானுபூதி வருவதில்லை. குணத்தைப்பற்றிய அனுபவம் மறைந்தாலன்றி வஸ்துவைப் பற்றிய அனுபவம் யாருக்கும் உண்டாவதில்லை.

அத்வைதவாதிகளுக்கிடையில் தொன்றுதொட்டு வழக்கத்தில் வந்துள்ள ரஜ்ஜுவில் ஸர்ப்பம் அல்லது கயிற்றில்

பாம்பு என்னும் திருஷ்டாந்தம் இக்கோட்பாட்டை இன்னும் கொஞ்சம் நன்ருகத் தெளிவுபடுத்தும். கயிறு ஒன்றை ஒரு மனிதன் பாம்பு என்று நினைத்துக்கொள்வாஞகில், அவனுடைய காட்சியில் கயிறு மறைந்துபட்டுப் போகிறது; பின்பு அதை அவன் கயிறு என்று அறிந்துகொள்ளுங்கால் பாம்பின் காட்சி அகன்றுவிடுகிறது; கயிறு ஒன்றுதான் எஞ்சி இருக்கிறது. அரைகுறையான சாதனங்களையோ கோட்பாடுகளையோ வைத்துக்கொண்டு விசாரித்துப் பார்த்தால் இரண்டுவிதமான அல்லது மூன்றுவிதமான இயல்புகள் ஒரு வஸ்துவின்கண் இருக்கின்றன என்னும் முடிவுக்கு வந்து விடுகிறேம். இத்தகைய கொள்கைகளைப்பற்றிப் புஸ்தகங்களில் படிக்கிறேம். பிறர் சொல்லவும் கேட்கிறேம். இதன்விளைவாக நமக்கு ஒரு மதி மயக்கம் ஏற்பட்டு விடுகிறது. ஆத்மா ஒன்று தேகம் ஒன்று ஆக இரண்டு பொருள்கள் நமக்குப் புலப்படுகின்றன என்ற மயக்கத்தில் நாம் மூழ்கியிருக்கிறேம். அத்தகைய காட்சி நமக்கு உண்மையில் ஒருநாளும் கிட்டுவதில்லை. எப்படி நாம் ஏககாலத்தில் கயிற்றையும் பாம்பையும் சேர்த்துப் பார்ப்பதில்லையோ அப்படி ஆத்மாவையும் தேகத்தையும் சேர்த்துப் பார்ப்பதில்லை. சரீரத்தைக்காணுங்கால் ஆத்மாவைக் காணுகிறதில்லை; ஆத்மாவைக்காணுங்கால் சரீரத்தைக் காண்கிறதில்லை. இதை நிரூபிப்பதற்கு வெறும் யுக்தி உதவாது. ஒவ்வொரு சாதகனும் தனது சொந்த அனுபவத்தைப் பரிசீலனை செய்து பார்க்கவேண்டும்.

அசரீரியாக, அதாவது சரீரத்தோடு சம்பந்தப்படாத ஆத்மாவாக ஒருவன் தன்னைப் பாவிக்க முயன்ருல் அது ஆகாத காரியம் என்பது விளங்கும். அரிதாக யாரோ சிலருக்கு அது சாத்தியமாகலாம். அப்படித் தன் ஆத்ம

சொருபத்தை ஒருவன் உணருங்கால் சரீரத்தைப் பற்றிய உணர்வு அவ்வேளையில் அவனுக்கு இருப்பதில்லை. நமக்குச் சாதாரணமாயிருக்கிற ஜாக்கிரதாவஸ்தையைக் கடந்து வேறு ஒருவித மனநிலையடைபவர்களை நாம் கண்டும் கேட்டும் இருக்கலாம். அத்தகைய நூதன மனநிலையுண்டாவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. ஆழ்ந்த தியானத்தால் அது வரக்கூடும். Hypnotism என்னும் வசீகரணத்தால் அது வரும், ஆவேசத்தாலும் வெறிநோயாலும் அது நேர்வதுண்டு. கஞ்சா, அபினிபோன்ற போதை வஸ்துக்களாலும் அத்தகைய நிலையை வருவித்துக் கொள்ளலாம். இப்படியெல்லாம் மாறுபட்ட மனநிலையில் பாஹ்ய உணர்ச்சி போய்விடுகிறது. உள்ளத்தினுள்ளே ஒருவித உணர்வு ஏற்படுகிறது. அதனால் பாஹ்ய உணர்வு போவதோடு உடலைப்பற்றிய உணர்வும் போய்விடுகிறது. உள்ளது ஒன்றுதான், பலவல்ல என்பதை இது விளக்கிக் காட்டுகிறது. அந்த ஒரு பொருள் இத்தனைவித வடிவங்களில் தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது. இப்படி அதற்குத் தோற்றங்கள் பல இருப்பதால் காரண காரியம் என்னும் நியதிக்கு அது இடங்கொடுக்கிறது. காரியகாரண சம்பந்தத்துக்கு அர்த்தம் பரிணமம் என்பதாம். ஒன்று மற்றொன்றாக மாறி அமைகிறது என்பதுதான் அதன் பொருள். சில வேளைகளில் காரணம் மறைந்துபோய், அதற்குப் பதிலாக அதனிடத்தில் காரியம் உருவெடுத்து நிற்கிறது. ஆத்மா காரணமாகிறது; சரீரம் காரியம். காரியமாகிய சரீரம் தோற்றத்தில் இருக்கும் போது அதற்குக் காரணமாகிய ஆத்மா தென்படுவதில்லை. சரீரபோதம் அகலுங்கால் ஆத்மபோதம் எஞ்சியிருக்கிறது. புத்தமதத்தைக் கண்டிப்பதற்கு இக்கோட்பாடு உதவுகிறது. சரீரம் என்றும் ஆத்மா

என்றும் இரண்டு வஸ்துக்களை எடுத்துக் கொள்ளுமிடத்து ஆத்மா தேவையில்லை என்கிறது புத்தமதம். அத்வைத வேதாந்தமோ சரீரம் என்றும் ஆத்மா என்றும் இரண்டு வஸ்துக்கள் இல்லையென்கிறது. ஒரே வஸ்துவானது குறை ஞானத்தில் சரீரமாகத் தென்படுகிறது. நிறை ஞானத்தில் அது ஆத்மனாக இலங்குகிறது. பதார்த்தமும் அதன் குணமும் என இரண்டு இல்லை. உள்ளது ஒரு வஸ்து. அதற்கு வெவ்வேறு தோற்றங்கள் உண்டு.

எது சமஷ்டியாகவும் பூரணமாகவும் அகண்டமாகவும் இருக்கிறதோ அதன்கண் பரிணமம் அல்லது மாறுபாடு என்பது நிகழ்தற்கு இடமில்லை. பின்பு எது வியஷ்டியாக இருக்கிறதோ அது மாறியமையும் பொருளாக இருந்தே ஆகவேண்டும். இயக்கம் அல்லது மாறுபாடு எப்பொருளிடத்து இருக்கிறது? எது பகுக்கப்பட்ட பொருளோ அதனிடத்தே இயக்கம் தென்படுகிறது. வரையறைக்கு உட்பட்டிருக்கிற ஒவ்வொரு பொருளும் நம்மால் அறியப்படு பொருள் ஆகிறது. அதனிடத்துப் பரிணமம் என்பது இருப்பதே அது அறியப்படுபொருள் ஆவதற்குக் காரணமாகிறது. எது பூரணப்பொருளோ அதனிடத்துப் பரிணமம் இல்லை. ஏனென்றால் சீர்தூக்கிப் பார்ப்பதற்குப் பூரணத்துக்கு அன்னியமானது ஒன்றுமில்லை. எங்கும் நிறைபொருளாயுள்ள ஒன்றன்கண் மாறுபாடு எப்படி வரமுடியும்? இயங்காத பொருளோடு ஒப்பிட்டு இயங்கு பொருள் ஒன்றை அறிகிறோம். அல்லது குறைவான இயக்கமும் விரைவான இயக்கமும் உடைய இரண்டு பொருள்களை ஒப்பிட்டு அறியலாம். நிறைபொருளோ அசைவற்றது, ஒப்பு உயர்வு அற்றது, அளப்பரியது.

ஆகவே அத்வைத வேதாந்தத்தின்படி சர்வ வியாபியாய், நிர்விகாரியாய், அக்ஷரமாய் உள்ள ஆத்மனைப்பற்றிக்

கூடியவரையில் பிரமாணங்கள் கொண்டு வரலாம். வியஷ்டி யாயுள்ள ஜீவாத்மனைப் பற்றித்தான் ஆக்ஷேபம் வருகிறது. தொன்றுதொட்டு வந்துள்ள துவைதமதக் கோட்பாடுகளை வைத்துக்கொண்டு என் செய்வது என்பது கேள்வி. நமது உள்ளத்தில் அவைகள் எப்படியோ வேர் ஊன்றிக் கிடக் கின்றன. அளவையில் அடங்கிய வியக்திகளாகிய இந்த க்ஷுத்ர ஜீவாத்மாக்களைப்பற்றிய உணர்ச்சிகளிலும் நாம் சிறிது தேங்கிக்கிடக்க வேண்டியதாகிறது.

பூரணத்திலே கலந்துவிடுங்கால் நாம் பொன்றாத பொருள் ஆய்விடுகிறோம் என்பது வெளிப்படை. ஆனால் பூரணத்தில் பொருந்தியுள்ள சிறு சிறு அம்சங்களாக இருந்துகொண்டே நாம் பொன்றாப் பொருள் ஆகவேண்டு மென்று விரும்புகிறோம். அது சாத்தியமாகாது. நாம் அகண்டாகார வஸ்து; அனந்த வியக்தியாய் இருப்பதே நமது யதார்த்த சொரூபம். ஆனால் அற்ப ஜீவ சொரூபத்தை நாம் அப்படியே பிடித்து வைத்துக்கொள்ள விரும்புகிறோம். இனி, நமது அன்றாட அனுபவம் என்னவென்று பார்க்க வேண்டும். க்ஷுத்ர ஜீவாத்மாக்களுக்கு வியக்தி யுண்டு என்பது உண்மை. அதற்குமேல் அவைகளிடத்து மற்று மொரு விசேஷமுண்டு. நாள் ஏற ஏற அவைகள் வளர்ந்து வரும் தன்மையுடையவைகள். வளர்ச்சியின் வாயிலாக அவை கள் அடையும் நிலைமை யாது? அவைகள் பழைய வடிவத்தில் இருக்கின்றனவென்றும் சொல்லலாம், இல்லை யென்றும் சொல்லலாம். நான் என்பதற்கு இலக்காக நேற்று இருந் ததே இன்றைக்கும் இருக்கிறது. ஆனால் முற்றிலும் நேற்று இருந்த பாங்கில் இன்றைக்கு இல்லை; இன்றைக்குச் சிறிது மாறுபாடு அடைந்திருக்கிறது. இனி மாறி அமைகிற வஸ்து, மாறாத வஸ்து ஆகிய இரண்டு வஸ்துக்கள் இருக்கின்றன

வென்பது துவைத மதத்தின் துணிபு. இப்போதைக்கு இதை நாம் தூர ஒதுக்கி வைத்துவிட வேண்டும். பிறகு பரிணமம் அடைதல் என்னும் கோட்பாட்டை இன்னும் பரந்த பாங்கில் பொருள்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். நான் என்பதற்கு இலக்காக யாண்டும் இருப்பது ஒரே பொருள். அது சிறிது சிறிதாக அகண்டாகாரத்தை நோக்கி விரிவடைந்து வருகிறது.

ஒரு காலத்தில் நீரில் மீனயிருந்தது படிப்படியாகப் பரிணமித்து இப்பொழுது மனிதன் ஆயிருக்கிறது என்னும் கோட்பாடு நம்புதற்குரியது என்று வைத்துக்கொள்வோம். அப்படியானல் மச்சமாயிருந்த ஜீவாத்மா இப்பொழுது மனிதன் ஆயிருக்கிறது. குறுகிய நிலையைக் கடந்து அகன்ற நிலைக்கு அது வந்துவிட்டது. அகண்டாகாரத்தை நோக்கிப் பிரயாணம் செய்யும் உயிர் ஒன்று மச்சத்தின் நிலையினின்று மானுட நிலைக்கு வந்துவிட்டது என்றால் பயணத்தில் பெரும் பகுதியை அது நிறைவேற்றி விட்டது என்பதாகிறது. வரையறையில் கட்டுண்டு கிடக்கும் ஆத்மாவை ஜீவாத்மா என்கிறோம். அகண்ட வஸ்துவாகிற பரமாத்மனைக் குறித்து அது பேருயிராய் ஓயாது பரிணமித்துக் கொண்டே போகிறது. அகண்ட வஸ்துவில் அது ஒன்றித்து விடும்பொழுது அதற்குப் பரிபூரண சொரூபமும் வந்துவிடுகிறது. அங்ஙனம் பூரணத்தை அடையும் பரியந்தம் அது ஓயாது பரிணமித்துக்கொண்டும் வளர்ந்து கொண்டும் இருக்கிற வியக்தியாம்.

அத்வைத வேதாந்தத்துக்குத் தனிச்சிறப்பு ஒன்று உண்டு. ஒவ்வொரு சமயத்தையும் அது அளந்து ஆராய்ந்து அதற்குரிய மதிப்பைக் கொடுத்து சமரசப்படுத்துகிறது. தத்துவ தர்சனத்தின் முறையான வளர்ச்சிக்கு அது துணை

புரிந்திருக்கிறது. தத்துவ தர்சனத்தின் பெயரால் தோன்றிய பொருளற்ற கோட்பாடுகளையோ அது களையெடுத்து எறிந்திருக்கிறது. பரிணமம் அல்லது சிற்றுயிர் பேருயிராக ஆவிர்பவித்தல் என்பதைப்பற்றி நமது பண்டைக்காலத்து ரிஷிகள் நன்கு அறிந்திருந்தனர். பல ஜன்மங்களில் ஜீவனானது படிப்படியாகப் பரிணமித்து மானுட நிலைக்கு வந்துள்ளது. மனிதன் பல ஜன்மங்களில் படிப்படியாக மனம் மாறுதல் அடைகிறான். ஆகவே அவனுக்குப் பல படித்தரங்களில் உள்ள கொள்கைகளும் தேவை. இக்கோட்பாட்டையறிந்துதான் அப்பெருமக்கள் விதவிதமான சமயக்கோட்பாடுகளுள் சமரசம் கண்டுள்ளனர். மற்றும் மனிதனுடைய முன்னேற்றத்துக்குத் தேவையான முதற்படிகளில் எதையும் அவர்கள் புறக்கணித்துவிடவில்லை. ஆனால் புத்தமதம் ஒரு பெரிய தவறுதல் செய்துவிட்டது. கொள்கைகளிலும் அறிவு வளர்ச்சியிலும் மனிதன் படிப்படியாக முன்னேறி வருகிறான் என்பதை புத்தமதம் கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை. மேலும் புத்தமதம் தோன்றுதற்கு முன்பு இருந்த கொள்கைகளை அது சிறிதும் அங்கீகரிக்கவில்லை. பழைய கொள்கைகளெல்லாம் தீங்குடையவைகள் என்று அம்மதத்தால் புறக்கணிக்கப்பட்டன. தலைமுறை தலைமுறையாக வருகிற மக்களுள் உடல் வாழ்க்கையில் எப்படித் தொடர்வு இருக்கிறதோ அப்படிச் சமயக்கொள்கைகளிலும் முந்தையதுக்கும் பிந்தையதுக்கும் படிப்படியாகத் தொடர்வு இருக்கிறது. இது அனுவசியம் என்று இதைச் சிறிதும் அங்கீகரியாமையே புத்தமதத்தின் குறைபாடு ஆகும்.

சமய ஒழுக்கத்தில் இத்தகைய மனப்பான்மையைப் பெற்றுவிடுவது பெருங்கேடாய் முடியும். ஏதேனும் ஒரு பெயர்வழிக்குப் புதியதும் உயர்ந்ததுமான ஒரு கொள்கை

மனதுக்கு எட்டுகிறது. பழைய கொள்கைகளை உடனே அவன் விட்டுவிடுகிருன். அதுமட்டுமல்ல, அதுவரையில் தான் அனுஷ்டித்து வந்திருந்த பழைய கொள்கையானது கேடுடையதென்றும் அனுவசியமானதென்றும் முடிவு கட்டு கிருன். இப்பொழுது தான் பெற்றுள்ள புதிய விவேகத் தைக்கொண்டு பொருள்படுத்துங்கால் பழைய கொள்கை ஒழுங்கற்றதாகத் தென்படலாம். ஆனல் முன்பு அவன் படைத்திருந்த மனநிலையில் அது பயன்பட்டது என்பதை அவன் எண்ணிப் பார்ப்பதில்லை. புதிய விவேகத்தைப் பெறுதற்கே தனது பழைய கொள்கை முகாமையாயிருந்தது என்பதை அவன் மறந்துவிடுகிருன். நாம் ஒவ்வொருவரும் அதே பாங்கில்தான் ஒரு கொள்கையினின்று இன்னொரு கொள்கைக்கு ஏதுவான அறிவு வளர்ச்சியடைந்து வரு கிறேம். உடல் வளர்ச்சியில் பாலனயிருந்து, யுவன் ஆகிப் பிறகு முதியவன் ஆவது போன்று அறிவு வளர்ச்சியிலும் பல படித்தரங்கள் உண்டு. மனபரிபாகத்துக்கு ஏற்ற கொள்கை யில் முதலில் ஊறி வளர்கிறேம். அதினின்றும் பெற வேண் டிய விவேகோதயத்தைப் பெறுகிறேம். பின்பு அதிலும் மிக்கதொரு பண்புக்குப் பாத்தியஸ்தர் ஆகிறேம். மனிதன் பெறுகிற அறிவு வளர்ச்சி இத்தகையதாகையால் அத்வைத வேதாந்தம் பூர்வபக்ஷமாயுள்ள பழைய கொள்கைகளை அறவே நிராகரிப்பதில்லை. ஆரம்ப தசையில் இருப்பவர் களுக்கும் மந்த அதிகாரிகளுக்கும் அவை யாவும் தேவை யென்று அங்கீகரித்து அவைகளோடு சமரசம் காணுதல் வேண்டும். துவைத சம்பிரதாயம் முதலியன வியவஹாரிக தசையில் வேண்டப்படுபவைகள் என்று அத்வைத வேதாந் தம் அவைகளை ஏற்றுக்கொள்கிறது. அப்படிப் பிறகொள்கை களை ஏற்பதிலும் முறையொன்று உண்டு. பிற கொள்கை

களில் பச்சாத்தாபம் காட்டி ஏதோ அவைகளும் இருந்து தொலையட்டும் என்ற இரக்கம் ஒருவிதமானது. மெய்ப் பொருளை அடைதற்கு மற்றவைகளும் உபாயந்தான் என்று அவைகளை ஆதரவுடனும் பூரண விசுவாசத்துடனும் அங்கீ கரிப்பது மற்றொரு விதமானது. இரக்கம் காட்டுகிற முறை யில் அத்வைத வேதாந்தம் போகிறதில்லை. சாதனம் செய்து வருகிற சாதகன் முன்னேற்றம் அடைதற்கு அவைகளும் உற்ற உபாயங்களே என்று அம்மார்க்கங்களைப் போற்றிப் பாராட்டும் முறையில் துவைத மதம் போன்ற மார்க்கங் களுக்கு அத்வைத வேதாந்தம் ஆதரவு அளிக்கிறது. முன் னேற்றத்துக்கு உதவாத கோட்பாடுகளை நிராகரிப்பதும் உதவுபவைகளைச் சிரத்தையுடன் ஏற்பதும் அத்வைத வேதாந்தத்தின் இயல்பு ஆகும்.

மானுடவர்க்கம் படிப்படியாக மேல்நோக்கி வருவதற் கான சாதன வகைகள் பல இருக்கின்றன. சபிக்கின்ற பாங்கிலும் தாழ்த்துகிற பாங்கிலும் ஆரம்ப தசையில் இருக் கின்ற சாதன வகைகளைக் கருதலாகாது; ஆசீர்வதித்து அவைகளைக் காப்பாற்றும் பான்மையே வேண்டப்படுகிறது. எனவே துவைத சம்பிரதாயம் புகட்டும் வெவ்வேறு சாதன வகைகளை வெறுக்கவும் விலக்கவும் நீக்கவும் வேதாந்தம் செய்யவில்லை. சகல விதமான அம்சங்களுடனும் அந்தச் சாதன வகைகள் காப்பாற்றி வைக்கப்பட்டுள்ளன. ஜீவாத் மனுக்கு நித்தியத்துவம் உண்டு, நிர்தோஷம் (மலம் நீங்கப் பெற்ற நிலை) உண்டு, தனி வியக்தி யுண்டு என்ற துவைத மதக்கோட்பாடும் வேதாந்த தர்சனத்தில் ஒரு ஸ்தானம் பெற்றுள்ளது.

மறுமை என்று சொல்லப்படும் வேறு பல உலகங்கள் இருக்கின்றன வென்றும், சரீரத்தை உகுத்த பின் மனிதன்

அத்தகைய உலகங்களுக்கு ஏகுகிறுன் என்றும் துவைத மதம் புகட்டுகிறது. இக்கொள்கைகளை யெல்லாம் வேதாந்த தர்சனம் அப்படியே அங்கீகரித்து வைத்துக் கொள்கிறது. ஏனென்றுல் மனபரிபாகம் அடைந்து வருகிற ஜீவனுக்கு ஒரு படித்தரத்தில் இக்கொள்கைகளும் உதவுகின்றன. ஜீவாத்மா அடைந்துவரும் பரிணுமத்தைப்பற்றிய ஏகதேச உண்மையை இக்கொள்கைகள் விளக்குகின்றன. எனவே அத்வைத வேதாந்தம் இவைகளை நிராகரிப்பதில்லை.

பஞ்சபூதங்களையும் அவைகளை இயக்குகின்ற சக்தியையும் கொண்டு இந்த ஜகத்தானது சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது என்பது துவைத மதக்கோட்பாடு ஆகும். இச்சா சக்தியின் விளையாட்டாக இந்தப் பிரபஞ்சம் வந்துள்ளது எனக் கருதப்படுகிறது. அத்தகைய இச்சா சக்தியோ இப்பிரபஞ்சத்துக்கு அன்னியமானது என்பது அம்மதத்தின் கொள்கை. இக்கோட்பாட்டின் பிரகாரம் மனிதனிடத்து சரீரம் என்றும் ஆத்மா என்றும் இரண்டு தத்துவங்களின் சேர்க்கை ஏற்பட்டிருக்கிறது என்பதாகிறது. இவ்வாத்மாவானது பரிச்சின்னமானது. அதாவது அளவுபட்டது எனினும் அதற்குத் தன்னளவில் பூரணத்துவம் உண்டு. ஜீவாத்மாவைப் பற்றி துவைத மதம் கொண்டுள்ள இக்கொள்கையை அனுசரித்தே அதற்கு அமரத்துவம், மறுமையில் பதவி முக்தி முதலியவைகளை அமைத்தாக வேண்டும். இத்தகைய கோட்பாடுகளும் வேதாந்த தர்சனத்தில் இவைகளுக்கேற்ற ஸ்தானத்தைப் பெற்றுள்ளன. ஆகவே துவைத மதத்துக்குரிய பொதுவான சில கோட்பாடுகளையும் நாம் அறிந்திருப்பது அவசியமாகிறது.

துவைத மதத்தின் கொள்கைப்படி நமக்கு ஸ்தூல சரீரம் ஒன்று உண்டு. இந்த ஸ்தூல சரீரத்தினுள் சூக்ஷ்ம

சரீரம் என்பது மற்றொன்று இருக்கிறது. இந்த சூக்ஷ்ம சரீரமும் பஞ்ச பூதங்களாலானது. பின்பு அப்பூதங்களும் பஞ்சீகரணமாகாது சூக்ஷ்ம நிலையிலேயே இருக்கின்றன. ஜீவாத்மாவினுடைய கர்மங்களை யெல்லாம் சம்ஸ்கார மய மாக ஏற்றுக்கொள்வது இந்த சூக்ஷ்ம சரீரமேயாம். சந்தர்ப் பம் வாய்க்கும்பொழுதெல்லாம் ஸ்தூல வடிவத்தில் பலன் தர இக் கருமங்களெல்லாம் ஆயத்தமாயிருக்கின்றன. ஜீவாத்மா எண்ணுகிற ஒவ்வொரு எண்ணமும், செய்கிற ஒவ்வொரு வினையும் கொஞ்சகாலத்துக்குப் பிறகு சூக்ஷ்ம நிலையை அடைகிறது; விதைபோன்று அது ஆய்விடுகிறது. சூக்ஷ்ம சரீரத்தில் அவ்யக்த நிலையில் அது இருக்கிறது. நாளடைவில் அது ஸ்தூல வடிவெடுத்துப் பலன் தர ஆரம் பிக்கிறது. இந்த வினைப்பயனே மானுட ஜீவிதத்துக்கு முகாமையாகிறது. ஆகவே தனது ஜீவிதத்தை மனிதன் தானே உருப்படுத்துகிறான். இங்ஙனம் மனிதன் தனக்குத் தானே உண்டுபண்ணிக்கொள்ளும் கரும நியதிகளுக்கு அன்னியமான வேறு எந்த நியதிகளிலும் கட்டுண்டவன் ஆகான். இந்த சூக்ஷ்ம சரீரத்துக்கும் அடிப்படையாகக் காரண சரீரம் என்பது ஒன்று உண்டு. அது அக்ஞானமே வடிவெடுத்தது. அக்ஞானத்தினின்று உதிக்கும் எண்ணங் களும், சொற்களும், செயல்களும் மெல்லிய நூல் கயிறு போன்றவைகள். அந்நூல் கயிற்றில் அமைத்துள்ள வலை யானது மனிதனை நலம் கேடு ஆகியவைகளில் கட்டிப் பிணித்துக்கொண்டிருக்கிறது. இத்தகைய வினையின் வேகத்தை மனிதன் கிளப்பிவிடுவானாகில் அதனால் வினை யும் பயனை அவன் அனுபவித்தே ஆகவேண்டும். விதி அல்லது கரும நியதி என்பது இதுவே. ஸ்தூல, சூக்ஷ்ம, காரண வடிவத்தில் உள்ள இந்த சரீரத்தினுள் ஜீவாத்மன்

குடியிருக்கிறான். ஜீவாத்மனுடைய வடிவத்தையும் வண்ணத்தையும் பற்றிய விதவிதமான விவாதங்கள் இருக்கின்றன. அணுப்போன்று ஜீவாத்மாவானது மிக நுண்ணியது என்பது ஒரு தரத்தார் கொள்கை. அது அவ்வளவு மிக நுண்ணியதன்று என்பது மற்றொரு தரத்தார் நம்பிக்கை. அது மிகப் பெரியது என்று வேறு ஒரு சாரார் சாதிக்கின்றனர். இந்த ஜீவாத்மாவானது பரமாத்மாவுக்குரியது. பரமாத்மனைப்போன்று ஜீவாத்மனும் நித்திய வஸ்து. இதற்கும் ஆதியும் அந்தமும் இல்லை. சர்வ காலமும் இது நிலைத்துள்ளது. பிறகு எண்ணிறந்த பிறவிகளில் விதவிதமான தேகங்களை இது எடுப்பதெல்லாம் தனது யதார்த்த இயல்பாகிய மாசற்ற நிலையிலே மிளிர்தற்பொருட்டேயாம். ஜீவாத்மாவுக்குரிய புனிதத்தின் பொலிவைத் தடைப்படுத்தும் செயல்களெல்லாம் தீவினையல்லது பாபம். தனது புனிதத்தை மாசுபடுத்தும் எண்ணமும் பாப எண்ணமாம். இனி ஜீவாத்மாவானது விகசிப்பு அடைந்து தனது யதார்த்த சொரூபத்தை ஓங்குவிப்பதற்கு உதவுகின்ற செயலும் சிந்தையும் புண்ணியம் நிறைந்தவைகளாகின்றன. மிகக் கீழ்நிலையில் இருக்கும் துவைதவாதியானாலும் சரி, மிக உயர்ந்த நிலையில் இருக்கும் அத்வைதவாதியானாலும் சரி, வைதிக சமயத்தார் எல்லார்க்கும் ஏற்புடைய கோட்பாடு ஒன்று உண்டு. அதாவது ஆற்றல்கள் அனைத்தும், சித்திகள் யாவும் ஜீவாத்மாவின்கண் இயல்பாய் அமைந்துள்ளன; அத்தகைய வல்லமைகள் புறவுலகிலிருந்து வந்தமைபவைகளல்ல. அவ்யக்தமாக சர்வ சக்தியும் ஜீவாத்மாவின்பால் உள. ஜீவிதத்தில் நிகழும் சம்பவங்களெல்லாம் அவ்யக்தமாயுள்ள சக்தியை வியக்தமாக்குதற் பொருட்டேயாம். மறைந்து கிடக்கும் ஆற்றல் மீண்டும் மிளிரவேண்டும்.

இனி புனர்ஜன்ம வாதத்தைப்பற்றிய கோட்பாடும் உளது. அது மறுபிறப்பைப்பற்றிய கொள்கையாகும். அதன்படி இத்தேகம் அழிந்துபோன பிறகு ஜீவாத்மாவானது இன்னொரு சரீரம் எடுத்துக்கொள்கிறது. அப்படி எடுத்த தேகம் தேய்ந்துபோன பிறகு அதைத் தொடர்ந்து வேறு ஒன்றை அமைத்துக்கொள்கிறது. இங்ஙனம் பல பிறவிகள் ஒன்றன்பின் ஒன்று வந்து அமைகின்றன. மறுபிறப்பானது இவ்வுலகிலேயே நிகழலாம் அல்லது வேறு உலகங்களிலும் நிகழலாம். பிறப்பு எடுப்பதற்கு உலகங்கள் பல இருக்கின்றன வெனினும் அவைகளுள் இப்பூவுலகமே சாலச் சிறந்ததெனக் கருதப்படுகிறது. ஏனென்றால் வினைப்பயனை ஒழிப்பதற்கு இது உதவுவது போன்று மற்றவைகள் உதவமாட்டா. அவ்வுலகங்களில் துக்கம் என்பது மிகக்குறைவு என்ற முடிவுக்கு வந்திருக்கின்றனர். துன்பம் கலவாத இன்பம்தானே நாம் வேண்டுவது என்று சிலர் நினைக்கலாம். ஆனால் துன்பம் துய்க்காதவர்கள் முன்னேற்றமடைவது துர்லபம். ஏனென்றால் எப்பொழுதும் இன்பத்திலேயே திளைத்திருப்பவர்க்கு அவ்வின்பத்திலும் மேலானது எதையும்பற்றி நினைக்க அவகாசமில்லை. இவ்வுலகத்திலோ வெனின் இன்பம்சிறிதளவும் துன்பம் பெரிதளவும்இருக்கின்றன. துன்பத்தினால் மொத்துண்கின்ற ஜீவன் ஒருகாலம் அல்லாவிட்டால் ஒருகாலம் தனது பரிதாபகரமானநிலையைக் குறித்து எண்ணிவிழிப்படைகிறான்; இதினின்று தன்னை விடுவித்துக்கொள்ளுதற்கு உபாயம் ஏதாவது உண்டா என்று ஆலோசித்துப் பார்க்கிறான். ஆனால் சுவர்க்கவாசம் என்பதோ இவ்வுலகில் பணக்காரர் வாழ்க்கைக்கு ஒப்பானது. பணம் மிகப்படைத்திருப்பதில் திருப்தியடைகிறவர்களும், சுகஜீவனத்தில் பற்று வைத்திருப்பவர்களும் அதற்கு

மேலான எதையும் பற்றி எண்ணிப்பார்ப்பதும் கிடையாது. இம்மையில் செல்வன் பெறுகிற இந்திரிய சுகத்தைத்தான் மறுமையில் சுவர்க்கவாசியும் பெறுகிறான். இவனுடைய சுகத்துக்கும் அவனுடைய சுகத்துக்கும் வண்ணத்தில்தான் சிறிது வேற்றுமையுண்டு. இங்கு செல்வன் பெறுவது தினை யளவு சுகம் என்றால் ஆங்கு சுவர்க்கவாசி பெறுவது பனை யளவு சுகம். ஏனென்றால் அவன் படைத்திருப்பது சூக்ஷ்ம சரீரம். அத்தகைய சரீரத்துக்குப் பசியும் தாகமும் பிணி யும் கிடையா. விரும்பியவாறு இன்பத்தைத் துய்த்துக் கொண்டே இருக்கலாம். சுவர்க்க வாசம் பண்ணுகிற ஜீவ னுக்கு சுகபோகங்கள் ஒன்றன்பின் ஒன்று வந்துகொண்டே யிருக்கின்றன. அவைகளில் ரமித்துக் கிடப்பதால் அந்த ஜீவன் தனது யதார்த்த சொரூபத்தைப்பற்றி மறந்துவிடு கிறான். ஆக, மண்ணுலகில் செல்வனுக்கும் விண்ணுலகில் தேவ சரீரத்தைப் பெற்றிருப்பவனுக்கும் கதியொன்றே. சுகமாக ஜீவித்திருப்பதோடு அவர்களின் அலுவல் முடிந்து விடுகிறது. பரஞானத்துக்கும் அவர்களுக்கும் வெகுதூரம். இனி பிரம்மலோகம் போன்ற இடங்களில் போகமும் உண்டு; ஆத்மபரிபாகம் அடைதலும் உண்டு. ஆங்கு ஜீவன் இன் னும் உயர்ந்த நிலையை நாடிப் பரிணமித்துக்கொண்டே போகிறான். துவைத மதக்கொள்கையின்படி பரமபதம் என்று சொல்லப்படும் நிலையொன்று உண்டு. சுவர்க்கங்களுக் கெல்லாம் அது மேலானது. கைலாசம் என்றும் வைகுண் டம் என்றும் வழங்குவது அதுவே. அந்த லோகத்தை அடையும் ஜீவன் சாலோக்கிய முக்தி பெற்றுவிட்டான் எனப்படுகிறான். அத்தகையவன் சாசுவதமாக அங்கேயே வசித்திருக்கிறான். தெய்வத்துக்குப் பக்கத்தில் அவன் வந்திருப்பதால் சாமீப்யம் என்று அந்நிலை அழைக்கப்படு

கிறது. தெய்வத்துக்குப் பக்கத்திலேயே இருப்பதால் அந்த தெய்வத்தின் வடிவம் அவனுக்கு வந்துவிடுகிறது. ஆக, அது சாரூப்யம் எனவும் இயம்பப்படுகிறது. அத்தகைய பதவியைப் பெற்றுள்ள ஆத்மாக்களுக்கெல்லாம் அழகிய திருமேனிகள் வந்துவிடுகின்றன. ரோகமும், ஜரையும், மரணமும் அவர்களை வந்து தீண்டுவதில்லை. எண்ணியதை எண்ணியாங்கு அவர்கள் ஆங்கு எய்தப் பெறுகின்றனர். பரிபக்குவம் அடைந்துள்ள அத்தகைய ஆத்மாக்கள் குறிப்பிட்ட காலங்களில் இம்மண்ணுலகில் திரும்பவும் வந்து பிறப்பதுண்டு. மற்ற ஜீவர்களை தெய்வ நெறியில் நடாத்து தற்கென்றே அவர்கள் அங்ஙனம் அவதரிக்கின்றனர். ஆசாரியர்களாகவும் சமயகுரவர்களாகவும் மண்ணுலகில் வந்துள்ளவர்களெல்லாம் அத்தகைய சித்த புருஷர்களாம். முக்தியடையப் பெற்றவர்களாக அவர்கள் முழுமுதற் பொருளின் சன்னிதியிலேயே பரமபதத்தில் வசித்திருப்பவர்கள். ஆயினும் மண்ணுலகில் உழலும் மாந்தர்பால் அவர்கள் இரக்கம் கொண்டு ஈண்டு இறங்கி வருகின்றனர். அன்புடனும் அனுதாபத்துடனும் இவர்களுக்குப் பெருநெறி புகட்டி இவர்களையும் பரமபதத்தின்பால் செலுத்துதல் ஒன்றே அத்தகைய ஆசாரிய புருஷர்களின் நோக்கமாகும்.

இத்தகைய பதவிகளைப் பெறுவது நமது லட்சியமாகாது என்கிறது அத்வைத வேதாந்தம். விதேக முக்தியே நமது குறிக்கோள் ஆகும். எது கால தேச வர்த்தமானத்துக்குப் பரிச்சின்னமாகிறதோ அது உயர்ந்த லக்ஷியமாகாது. கால தேச வர்த்தமானத்துக்கு அபரிச்சின்னமாவது அதாவது அதீதமாயிருப்பதே ஒப்பற்ற உயர்நிலையாகும். மற்று தேகம்

தாங்கியிருக்கும் நிலையை அனந்தம் என்றோ, அபரிச்சின்னம் என்றோ இயம்பலாகாது. தேகம்என்பதே ஒரு வரையறைக்கு உட்பட்டிருப்பதால் அது அபரிச்சின்னமாகாது. சிந்தை என்று சொல்லப்படுவதும் அபரிச்சின்னமாகாது. ஏனென்றால் சிந்தையும் அளவில் அடங்கியதாகிறது. தேகத்துக்கு அதீதத்திலும் சிந்தைக்கு அதீதத்திலும் நாம் சென்றாக வேண்டும் என்கிறது அத்வைத வேதாந்தம். மற்றொரு முக்கியமான விஷயத்தை அத்வைத வேதாந்தம் புகட்டுகிறது. அதாவது முக்தி என்பது நம்மிடத்து இல்லாதிருந்து இனி அடையப்படுவதன்று. ஏற்கனவே அது நம்மிடத்து இருக்கிறது. மறதியால் நாம் அதைப் புறக்கணித்துவிட்டோம். ஆத்மபரிபாகத்தை இனி முயற்சி செய்து பெறுவதன்று. நாம் யாண்டும் பரிபக்குவமே வடிவெடுத்தவர்களாக இருக்கிறோம். மரணமிலாப் பெருவாழ்வு (அமரத்வம்) என்பது நமக்கு அன்னியமானதன்று; என்றைக்கும் அழியாப் பொருளாகவே நாம் இருக்கிறோம். உலப்பில்லா ஆனந்தம் என்பது முயன்று இனி பெறுதற்கான பெருநிலையன்று. நாம் யாண்டும் ஆனந்த சொரூபமாகவே இருக்கிறோம். இவைகளெல்லாம் நம்மிடத்து இல்லையென்று எண்ணிக்கொண்டு நாம் அழுது புரண்டுகிடந்த காலத்தும் இப்பெருநிலைகள் யாவும் நமக்குச் சொந்தமாய் இருந்திருக்கின்றன. இப்பெருநிலைகளை உணர்ந்திருக்கும்பொழுதும் உணராதிருக்கும் பொழுதும் எப்பொழுதுமே இவை யாவும் நமக்குச் சொந்தம்.

நீ நித்தியமுக்தனாயிருக்கிறாய் என்று இந்த நொடிப் பொழுதில் உணர்ந்து இயம்புவாயாகில் நீ இப்பொழுதே முக்தன் ஆய்விடலாம். நீ பந்த பாசங்களில் கட்டுண்டு கிடக்கிறாய் என்று எண்ணிக்கொண்டு வருந்துவாயாகில்

அப்படி நீ எண்ணிக்கொண்டிருக்கும் வரையில் நீ பத்தாத் மாவேயாம். அத்வைத வேதாந்தமானது இப்பேருண்மை யைத் துணிந்து முரசறைகிறது. துவைத வாதத்தை அடிப் படையாகக் கொண்டுள்ள சமயங்கள் என்ன புகட்டுகின்றன என்பதையும் இதுகாறும் எடுத்து இயம்பியாய் விட்டது. இனி எத்தகைய சாதனத்தைக் கடைப்பிடிப்பது என்பதை உனக்கு நீயே தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

வேதாந்தம் புகட்டுகின்ற உயர்ந்த லக்ஷியத்தைக் கிர கித்துக் கொள்வது மிகக்கடினமானது. இதைக் குறித்து மாந்தர் காலமெல்லாம் வீண் விவாதம் செய்து கொண்டிருக் கின்றனர். இதற்கெல்லாம் அடிப்படையான சங்கடம் ஒன்று உண்டு. அதாவது ஏதோ சில கொள்கைகளை மாந்தர் ஆழ்ந்து பற்றிப் பிடித்துக் கொள்கின்றனர். பிறகு அவைகளுக்கு மாறான கொள்கைகளை மறுக்கவும் தாக்கவும் செய்கின்றனர். மானுடா, இத்தகைய பெருவழக்கிலே நீ கலந்துகொள் ளாதே. உனக்குகந்த ஒரு கோட்பாட்டை நீ எடுத்துக் கொள். அவரவருக்குத் தேவையாயிருப்பவைகளை மற்றவர் கள் எடுத்துக்கொள்ளட்டும். மானுடன் என்று அழைக்கப் படும் இந்தச் சிறிய ஜீவ வியக்தியில் உனக்குப் பற்றுதல் இருக்கிறதென்றால் இதை நீ உறுதியாகப் பிடித்துவைத்துக் கொள். இந்த மானுட போகத்துக்குரிய வாசனைகளிலேயே ஊறிக்கிடக்க நீ விரும்புவாயாகில் அவைகளைக்கொண்டு நீ திருப்தியடைந்து அவைகளில் வேண்டியவாறு ரமித்திரு. மனுஷத் தன்மையில் நிலைத்திருப்பதில் நலனும் இனிமையும் உள என்பது உனது அனுபவம் என்பாயாகில் எத்தனை காலத்துக்கு வேண்டுமானாலும் அந்நிலையிலேயே நீ மகிழ் வுடன் இருந்துகொள். அது உனக்கு முற்றிலும் சாத்தியம். அப்படி மனுஷ நிலையிலேயே சர்வகாலமும் பிறந்து பிறந்து

உழன்றிருக்கும் உன்னை வேண்டாமென்று தடுப்பார் யாருமில்லை. உன்னுடைய ஊழ் அல்லது கதியை அமைப்பவன் நீயே. உனக்கென்று நீ படைத்துள்ள மானுட இயல்பை விட்டொழித்துவிடு என்று உன்னைக் கட்டாயப் படுத்துவார் யாருமில்லை. எத்தனை பிறவிகளில் நீ மானுடனாகவே இருக்கவேண்டுமென்று ஆசைப்படுகின்றாயோ அத்தனைப் பிறவிகளில் நீ மானுடனாகவே இருக்கலாம். நீ மானுடனாக இருக்கவேண்டாமென்று உன்னைத் தடுக்க யாருக்கும் இயலாது. இனி நர வடிவம் வேண்டாம்; தேவ கணத்தைச் சேர்ந்தவன் ஆகவேண்டுமென்று நீ விரும்புகின்றாயா? அதுவும் உனக்குச் சாத்தியம். ஏனென்றால் வினைக்கேற்ற வடிவம் எடுப்பதுதான் வாழ்க்கையைப் பற்றிய விதி. மற்று மண்ணுலகத்தவனாக இருப்பதும் வேண்டாம், விண்ணுலகத்தவனாக இருப்பதும் வேண்டாம் என்று இவை யாவிலும் விரக்திகொள்ளும் ஆத்மாக்களும் இருக்கிறார்கள். அப்படி நினைக்கின்றவர்களது கொள்கை அடாதது என்று எண்ணுதற்கு உனக்கு உரிமையேது? ஓர் ஆயிரம் ரூபாயை நஷ்டமாக விட்டுவிடுவதைக் குறித்து நீ திகில் அடைந்து போய்விடலாம். ஆனால் குபேரன் போன்று செல்வம் படைத்துள்ள வேறு யாரோ சிலர் தங்களிடத்துள்ள அனைத்தையும் இழந்துவிட்ட பிறகும் அதைக்குறித்துக் கிஞ்சித்தேனும் கவலைப்படாதிருக்கலாம். அத்தகைய பற்றற்ற பெருமக்கள் முன்பும் உலகில் இருந்திருக்கின்றனர்; இப்பொழுதும் இருந்துவருகின்றனர். உன்னை நீ அளவையாக வைத்துக் கொண்டு அவர்களை மதிப்பிடத் துணிவானேன்? பரிச்சின்னத்தோடு கூடிய ஜீவபோதத்தில் நீ பற்றுதல் வைத்திருக்கிறாய். அற்பமாயுள்ள இவ்வுலக வாழ்க்கையைப் பற்றிய எண்ணங்கள் உனக்கு உயர்ந்ததொரு லட்சியமாகத்

தென்படலாம். வேண்டியவாறு உவகையோடு நீ அவ்வெண்ணங்களைப் பற்றிப் பிடித்துக்கொள். விரும்பியவாறு இவ்வுலகமும் உனக்கு இன்பம் ஊட்டுவதாகும். ஆனால் வாழ்க்கையைப்பற்றிய உண்மையை ஓர்ந்து உணர்ந்தவர்கள் இருக்கிறார்கள். இவ்வுலகின் அற்ப சுகங்களைக்கொண்டு அவர்கள் திருப்தியடைய முடியாது. இப்பொம்மலாட்டங்களை யெல்லாம் அவர்கள் கண்டுகளித்தாய் விட்டது. இதற்கப்பாலுள்ள பெருநிலையை நாடிச்செல்ல அவர்கள் விரும்புகின்றனர். இன்பங்கள் பல நிறைந்துள்ளதென்றாலும் இவ்வுலகத்தைக்கண்டு அவர்கள் மயங்குவதில்லை. சேற்றுக் குழியில் புழுக்கள் இன்பம் துய்க்கின்றன. அத்தகைய சேற்றுக்குழிக்கு ஒப்பாக இவ்வுலகை அவர்கள் கருதுகின்றனர். பரிபாகம் அடைந்துள்ள அப்பெருமக்களை உனது கொள்கையில் கட்டுப்படுத்துவது பொருந்தாது. மனிதர் எல்லார்க்கும் உனது கொள்கையை அளவையாக வைக்கின்ற மனப்பான்மையை நீ அறவே விட்டொழிக்க வேண்டும். வெவ்வேறு பாங்குடைய எல்லார்க்கும் இங்கு இடமுண்டு என்பதை நீ அறிந்து கொள்வாயாக.

பரந்த பாங்குடையவனாக மனிதன் உலகில் வாழ்ந்திருக்கவேண்டும். சாகும் தறுவாயிலும் அதே விதத்தில் பரந்த மனமுடையவனாக இருக்கவேண்டும். இதற்கு எடுத்துக்காட்டு ஒன்று எடுத்துக்கொள்வோம். சில ஆண்டுகளுக்கு முன்பு நீராவி கப்பல்கள் சில தென்கடலில் சென்றுகொண்டிருந்தன. அவைகள் இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் உரிய கடற்போர்க் கப்பல்கள். திடீரென்று புசல் காற்று ஒன்று கிளம்பிவந்து அவைகளைச் சூழ்ந்து கொண்டது. ஒரே ஒரு கப்பலைத் தவிர ஏனையவைகள் ஆபத்தில் அகப்பட்டுக்கொண்டன. மூழ்கிக்கொண்டிருந்த கப்பல்

களில் இருந்த மாலுமிகளும் ஏனைய படைகளும் அந்தந்தக் கப்பலின் மேல்தட்டுக்கு வந்தார்கள். ஆபத்தினின்று தப்பித்துச் செல்லுதற்கிருந்த ஒற்றைக் கப்பல்வாசிகளுக்கு மனமார ஆசி கூறினர்கள். “ நீங்கள் சுகமாய்த் திரும்பிப்போய் இங்கு நிகழ்ந்ததை உலகத்தவர்க்கு எடுத்துச் சொல்லுங்கள் ” என்று இயம்பிவிட்டு அத்தனைபேரும் அலைகடலில் மாண்டு மறைந்து போயினர். அப்படி மடிந்தவர்களின் மனப்பான்மையைத்தான் தைரியம் என்றும், தயாள குணம் என்றும், பரந்த பாங்கு என்றும் பகரலாம். அன்னவர் படைத்திருந்தது போன்று பரந்த மனப்பான்மை படைத்திருக்க ஒவ்வொருவனும் முயல வேண்டும். தான் வகித்துவரும் கீழ்மைக்கு மற்றவர்களையும் இழுக்க முயலுதல் முறையன்று.

மற்ருெரு மடமையிலே ஒவ்வொரு மனிதனும் மயங்கிக் கிடக்கிருன். அது தன்னைக் குறித்துத் தானே பெருமிதமாக மதிப்புப் போடுவதாம். உலகத்தில் நலத்தை நிலைநாட்டுதல் தனது தனிச்செயல் என்று ஒவ்வொரு மனிதனும் தன்னை மதித்து வருகிருன். தான் இல்லாவிட்டால் உலகம் உய்யாது என்றும் அதனல் உலகுக்கு ஒரு பெரிய நஷ்டம் ஏற்படும் என்றும் ஒவ்வொருவனும் எண்ணுகிருன். தனது வியக்தியின்மீது அவன் வைத்துள்ள பெரும் பற்றுதலை அது குறிக்கிறது. தான் எண்ணுவது போன்று ஒவ்வொரு மனிதனும் உலகுக்கென்றே வாழ்ந்திருந்து உலக நன்மைக்கென்றே உயிர்கொடுத்தான் என்பது உண்மையா? தன் மீது இவ்வளவுபெரிய அபிமானம் வைத்திருக்கும் மனிதனுக்குத் தெய்வந்தான் நல்லறிவைக் கொடுத்து ஆசீர்வதிக்க வேண்டும். வாஸ்தவத்தில் தன்நலம் கருதாது உலக நலத்திலேயே கண்ணும் கருத்துமாயிருக்கின்ற ஆடவரும் மகளிரும் சேர்ந்து இருநூறுபேர் ஒருநாட்டில் இருப்பார்களானல்

ஐந்து நாட்களில் அந்நாட்டில் கிருதயுகம் வந்துவிடும். ஜன சமுதாயத்துக்காக நாம் உயிரைக் கொடுக்கிறோம் என்பது உண்மையல்ல. இவையாவும் பொருளற்ற வீண் பேச்சுக் களாம். பிறகு உண்மை யெது என்பதை உலக சரித்திரம் நமக்கு விளக்கிக்காட்டி வருகிறது. தான் தனது என்பன வற்றைப் பற்றிச் சிறிதும் நினையாதிருந்தவர்களே மானுட வர்க்கத்துக்குப் பேருபகாரம் செய்த பெருமக்கள் ஆயினர். ஆண்மக்கள் ஆனாலும் சரி, பெண்மக்கள் ஆனாலும் சரி அவர் கள் எவ்வளவுக்கெவ்வளவு தங்களைப் பற்றியே எண்ணிக் கொண்டிருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் உலகுக்குச்செய்தது ஒன்றுமில்லை. ஒன்று சுயநலம், மற்றது பிறநலம். அற்ப சுகபோகங்களை விடாது பிடித்துக்கொள்ளு தல், இப்பொழுது அமைந்துள்ள உடல் வாழ்க்கையே திரும் பத் திரும்பத் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டே இருக்க வேண்டுமென்று ஆசைப்படுதல்—இத்தகைய மனப்பான் மையே முழுமோசமான சுயநலம் எனப்படுகிறது. மெய்ப் பொருளை அறிந்துகொள்ள வேண்டுமென்று ஆசைப்படுப வர்க்கு இத்தகைய தன்நலம் உதிக்காது. ஜீவகாருண்யம் படைத்திருப்பவர்க்கும் இத்தகைய சுயநலம் வடிவெடுக் காது. "என் சுகவாழ்க்கைக்கு வேண்டிய யாவும் எனக்குக் கைகூட வேண்டும்; மற்றவர்களைப் பற்றிய கவலை எனக்கு வேண்டாம்" என்னும் எண்ணத்திலிருந்துதான் இப்பேர்ப் பட்ட சுயநலம் உருவெடுக்கிறது. மற்றவர்களிடத்திருந்து பிரித்தெடுத்து வைத்துக்கொண்ட தன்னைப்பற்றிய அபி மானமாக இது முடிந்துவிடுகிறது. இதற்கு நேர்மாறாக இத்தொல்லுலகம் கண்டறிந்த பரமாசாரியர்களும், ஞானி களும், முனிவர்களும் வாழ்ந்த வாழ்க்கையை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். ஓர் அற்ப ஜந்துவுக்கு உபகாரம் செய்தற்

பொருட்டுத் தாங்கள் நூறுதடவை உயிரை வழங்க வேண்டும் என்று ஏற்பட்டால் அவர்கள் அங்ஙனம் செய்ய ஆயத்தமாயிருந்தனர். பரந்த பாங்கு படைத்திருந்த அத்தகைய பெருமக்கள் போன்றவர்கள் இப்பாரினுள்ளே இன்னும் பல பேர் தோன்றுவார்களாக. உலகம் உய்தற்கு அவ்வுத்தமர்களே உறுதுணையாகின்றனர். சுயநலமே திரண்டு உருவெடுத்து வந்துள்ள அற்ப மானுடா, சன்மார்க்கத்தைப் பற்றியும் லோக ஹிதத்தைப்பற்றியும் பேசுதற்கு உனக்கு யாது யோக்யதை யுளது?

சன்மார்க்கத்திலே நிலைநின்றவர்களுள் கௌதம புத்தருக்கு ஒப்பானவர் ஒருவரைப்பார்ப்பது அரிதிலும் அரிது. நெறியிலே தலைசிறந்தவர் என்றாலும் அவரது கொள்கை எப்படிப்பட்டது என்பது வியப்புக்குரியதாகிறது. நம்மை ஆளும் ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்பதில் அவருக்கு நம்பிக்கை கிடையாது. ஜீவாத்மா என்பது ஒன்று உண்டு என்று அவர் உணரவில்லை. ஜீவாத்மாவைப்பற்றியோ பரமாத்மாவைப்பற்றியோ அவர் விசாரிக்கவில்லை. அக்ஞேய வாதியாகவே (Agnostic) அதாவது ஆத்ம தத்துவம் தமக்கு ஒன்றும் தெரியாது என்னும் கொள்கையில் ஊறியவராகவே அவர் ஆயுள் காலமெல்லாம் இருந்தார். அதற்கிடையில் மன்னுயிர் எதுவானாலும் அதன் பொருட்டுத் தமது உயிரைப் பரித்தியாகம் செய்ய அவர் ஆயத்தமாயிருந்தார். வாழ்நாளெல்லாம் உலகத்தவர் அனைவர் நலத்துக்கென்றே அவர் உழைத்து வந்தார். உலகம் நலம் பெறவேண்டும் என்னும் ஓர் எண்ணமே யாண்டும் அவர் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. புத்தர் பெம்மானுடைய ஜீவிய சரிதத்தை எழுதியவர் அவரைக் குறித்து நல்லதொரு வாக்குமூலம் வெளியிட்டார். பகுஜன ஹிதத்துக்காகவும்

பகுஜன சுகத்துக்காகவும் அவர் பிறப்பெடுத்தார் என்பது அந்த வாக்குமூலமாகும். தாம் விமோசனம் அடையவேண்டும் என்று எண்ணி அவர் வனத்துக்குப்போய் நிஷ்டை புரியவில்லை. உலகம் யாவும் துன்பத்தில் தவிக்கிறதென்றும், தாம் அதற்கு ஒரு விமோசனம் கண்டுபிடிக்கவேண்டுமென்றும் அவர் உணர்ந்தார். 'உலகத்தில் இவ்வளவு துன்பம் இருப்பானேன்?' என்னும் ஒரு கேள்வியே அவருடைய வாழ்க்கையை முழுதும் கவர்ந்து வந்தது. அத்தகைய புத்தர் பெம்மான் போன்று நாம் நன்னெறியில் நிலைநிற்பவர் ஆவோமா?

சுயநலம் அதிகரிக்குமளவு ஒரு மனிதன் துன்மார்க்கத்தில் ஈடுபடுபவன் ஆகிறான். அதே கோட்பாடு ஒரு ஜன சமூகத்துக்கும் உரியதாகிறது. சுயநலம் ஒன்றிலேயே காலமெல்லாம் கண்ணுங் கருத்துமாயிருக்கிற சமுதாயம் மிகக் கொடூரமானதாகவும் உலகுக்குத் துரோகம் செய்யக்கூடியதாகவும் இருந்து வந்திருக்கிறது. பரலோகத்தில் வசித்திருக்கும் பரம்பொருள் ஒருவர் தங்களைத்தான் அலாதியாக ரக்ஷித்து வருகிறார் என்ற துவைத வாதத்தில் நம்பிக்கை வைத்திருக்கும் சமயத்தார் உலகில் இருக்கின்றனர். மதத்தின் பெயரால் உலகத்தில் ஏராளமாக ரத்தவெள்ளம் சிந்தியவர் இவ்வுலகில் இருக்கின்றனர். புற மதஸ்தரிடத்தில் கொடூரமாக நடந்துகொள்வது இவர்களின் போக்கு ஆகும். அவைகளில் புகட்டப்பட்டுள்ள கோட்பாடுகளை நம்பாத மனிதன் கொல்லப்படவேண்டும் என்னும் கோட்பாடு சில நூல்களில் உண்டு; அப்படி அவனைக் கொன்றுவிடுவது அவனிடத்துக் காட்டும் காருண்யத்துக்கு அறிகுறி என்று மதவெறி பிடித்தவர் நம்புகின்றனர். அத்தகைய நூல்களில் நம்பிக்கை வைக்காதவர்களைக் கொல்லுதல் ஒன்றே சுவர்க்

கத்துக்குச் செல்லுதற்கு உறுதியாக உற்ற உபாயமாம்! புற
மதஸ்தர்களைக்கொன்று சுவர்க்கம் போய்ச்சேருபவர்க்கு
தேவலோக மடந்தையரும் சுகபோகங்களும் ஏராளமாகக்
கிட்டுமாம்! இத்தகைய கொள்கைகளின் விளைவாக உலகில்
நிகழ்ந்த படுகொலைகள் எத்தனையெத்தனை என்பதை
எண்ணிப்பார்க்கவேண்டும்.

சான்றோர்கள் புகட்டிய மதத்தில் எத்தகைய ஒழுங்
கீனமும் கிடையாது. ஏசுகிறிஸ்து புகட்டிய தூயமதத்துக்
கும் வேதாந்தக் கோட்பாட்டுக்கும் வித்தியாசம் இல்லை
யென்றே இயம்பலாம். அத்வைதக் கோட்பாடு ஆங்கி
ருப்பதைக் காணலாம். ஆனால் பாமரஜனங்களுக்கு அவர்
துவைதமதத்தையும் புகட்டியிருக்கிறார். ஆண்டவன், ஆளப்
படுபவர் என்னும் எண்ணத்தில் ஊறி, அதில் திருப்தி
யடைந்தவர்களாகிய அவர்கள் படிப்படியாக மேலாம் லக்ஷி
யத்துக்கு வரவேண்டும். 'பரலோகத்திலிருக்கும் பிதாவே'
என்று புகட்டிய அதே ஏசுநாதர் 'நானும் என் தந்தையும்
ஒன்று' என்ற அத்வைதக் கொள்கையையும் புகட்டியிருக்
கிறார். பரலோகத்தில் இருக்கும் பிதா என்ற கோட்பாடு
தான், 'மனத்தகத்து இருக்கும் தெய்வம்' என்னும் கோட்
பாட்டுக்கு வழிகாட்டுகிறது. கடைசியாக 'மனத்தகத்து
இருக்கும் தெய்வமும் தானும் ஒன்று' என்னும் முடிவை
ஆத்ம சாதகன் எட்டிவிடுகிறான். ஏசுகிறிஸ்து புகட்டிய
போதனையில் சாந்தமும், அருளும், அன்புமே பொலிந்து
கொண்டிருந்தன. அத்தகைய தூயமதத்தினுள்ளும் நாள
டைவில் ஒழுங்கீனம் பிரவேசித்தது. "நான்" என்னும்
அகந்தையை விட்டு விடமாட்டேன் என்று போராடுவது
ஒழுங்கீனமல்லவா? "நான், எனது" என்னும் செருக்கு
இந்த மண்ணுலகில் மட்டுமல்ல, விண்ணுலகுக்கும் அது

தொடர்ந்து வரவேண்டும் என்று அதை பற்றிப்பிடிப்பது கீழ்மையுள் கீழ்மையாகும். சுவர்க்க பதவியை நாடுவது சுயநலமல்லவென்று அவர்கள் நினைக்கின்றனர். மேலும் சுவர்க்க வாழ்வுக்கு ஆயத்தப்படுத்துவதுதான் சன்மார்க்கத்துக்கு உற்ற உபாயம் என்றும் அவர்கள் கருதிவருகின்றனர். இது விந்தைக்குரிய விஷயமாம். ஏனென்றால் ஆசையை வளர்ப்பவன் ஒருநாளும் நன்னெறியில் நிலைத்திருப்பவன் ஆகான். விந்தைக்குரிய மற்றொரு விஷயமும் உளது. "தான்" "தனது" என்பனவற்றை அகற்றிவிட்டால் மனிதனிடத்திருந்து நல்லொழுக்கம் எல்லாம் அகன்று போய்விடும் என்று ஆடவர் மகளிர் ஆகிய பலர் கருதிவருகின்றனர். "தான்" "தனது" என்பன அற்றவிடத்தே சன்மார்க்கம் தலையெடுக்கிறது என்பதைக் கேள்வியுறுங்கால் அவர்கள் திகைத்துப்போய் விடுகின்றனர். அவர்களுடைய விவேகம் எத்தகையது என்பதை அதினின்று நாம் யூகித்துக்கொள்ளலாம். நலன் அனைத்தும் உண்டாதற்கும் நன்னெறிதழைத்தோங்குதற்கும் மூல மந்த்ரம் ஒன்று உண்டு. "நான்" என்பதை வேர் அறக் களைந்துவிட்டு "நீ" என்பதை நிலைநாட்டுதலே அம் மூலமந்த்ரமாம். சுவர்க்கம் என்பது ஒன்று இருக்கட்டும் அல்லது இல்லாது ஒழியட்டும்; அதைப்பற்றிய கவலை வேண்டாம். நரகத்தில் இடர்ப்படுவதைப் பற்றிய எண்ணத்தையும் ஒழித்துவிடுக. ஜீவாத்மன் என்பது ஒன்று இருக்கிறதா, இல்லையா என்ற ஏக்கமும் வேண்டாம். பரிணமம் அடையாத பரம்பொருள் ஒன்று உண்டா என்னும் விசாரமும் வேண்டாம். இதோ, கண்கூடாக உன் எதிரே இவ்வுலகம் இருக்கிறது. இதில் துன்பம் நிறைந்திருப்பது தென்படுகிறது. இதில் உள்ள துன்பத்தைத் துடைக்க புத்தர் பெம்மான் முயன்றது

போன்று நீயும் முயலுக. துன்பத்தைத் துடைக்க உன்னால் இயலாவிட்டாலும் அம்முயற்சியிலேயே உன் உயிரைக் கொடு. உன்னை நீ மறந்துவிடு. நீ கற்கவேண்டிய முதல் பாடம் இதுவே. நீ ஆஸ்திகனா அல்லது நாஸ்திகனா, நீ அக்ஞேயவாதியா அல்லது வேதாந்தியா, நீ கிறிஸ்தவனா அல்லது முஸ்லிமா—இவைபோன்ற கேள்விகள் உனக்கு முக்கியமானவைகளல்ல. மனிதன் தன்னை எப்பெயரிட்டு அழைக்கிறான் என்பதில் பொருள் ஒன்றுமில்லை. பிறர் பொருட்டு உழைப்பதன் மூலம் மனிதன் தன்னையே மறந்து விடுவானாகில் அஹங்காரம் நசித்துவிடுகிறது. அஹங்காரம் நசிக்குமளவு பரபோதம் விகசிக்கிறது — பெரியபொருள் தோற்றத்துக்கு வருகிறது.

சமதூரக் கோடுகள் இரண்டிலே பக்கம் பக்கமாக இரண்டு சக்திகள் வேலை செய்து கொண்டிருக்கின்றன. அவைகளுள் ஒன்று "தனக்கு" என்கிறது, மற்றது "தனக்கல்ல" என்கிறது. இவ் இரு சக்திகளின் தோற்றம் அல்லது விளையாட்டு மனிதர்களிடத்து மட்டுமல்ல மிருகங் களிடத்தும் தென்படுகிறது ; மிருகங்களிடத்து மட்டுமல்ல, அற்பப் புழுக்களிடத்தும் அது தென்படுகிறது. மானுட ரத்தம் கதகதப்பாயிருக்கும்போதே அதை உறிஞ்சி உண்ண வேண்டுமென்று அவன்மீது புலியொன்று தன் பற்களையும் கூறிய நகங்களையும் நாட்டுகிறது. பிறகு அதே புலி தன் குட்டியைக் காப்பாற்றுதற்குத் தன் உயிரைக் கொடுக் கிறது. "தனக்கு" என்கிற முயற்சியையும், "தனக்கல்ல" என்கிற முயற்சியையும், இங்ஙனம் அதே புலியினிடத் துக் காண்கிறோம். கொலைபாதகன் ஒருவன் கொஞ்சம் பொருளுக்காகத் தன் அயலானது தலையைச் சீவி விடு கிறான். பின்பு அதே புல்லிய பெயர்வழியானவன் பட்டினி

கிடக்கும் தன் மனைவி மக்களைப் பேணுதற்குத் தன் உயி ரையே தங்கு தடையின்றி எடுத்து வழங்குகிறான். சிருஷ் டிக்கப்பெற்ற ஜகத் முழுவதிலும் இவ்வாறு இந்த இரண்டு சக்திகளும் பக்கம் பக்கத்தில் இயங்கிவருவதைக் காண லாம். ஒரு சக்தி இருக்குமிடத்தில் மற்றதையும் காணலாம். ஒன்று சுயநலம், மற்றது பிறநலம். ஒன்று பிரவிருத்தி, மற் றது நிவிருத்தி. தனக்கென்று ஒன்று எடுத்துக்கொள் கிறது, பிறர்க்கென்று மற்றது கொடுத்து விடுகிறது. மிக மிகக் கீழ்நிலையிலிருந்து மிக மிக உயர்நிலை வரைக்கும் அண்டங்கள் யாவும் இவ்விரு சக்திகளுக்கு விளையாட்டு மேடையாகின்றன. இதை நிரூபிப்பதற்கு வேறு அத்தாட்சி வேண்டியதில்லை. எல்லார்க்கும் இவ்வுண்மை தானே விளங்குகிறது.

இவ் இரு சக்திகளுள் ஒன்றைப் புறக்கணித்துவிட்டு மற்றதை மட்டும் எடுத்துக்கொள்ளும் கூட்டத்தாரை ஜன சமூகத்தில் காணலாம். போட்டிபோடுவதும் போராடுவதும் ஜகத்தினுடைய முன்னேற்றத்துக்குக் காரணமாகிறது என்று அக்கூட்டத்தார் நம்புகின்றனர். ஒரு சக்தியைப் புறக்கணித்துவிட்டு மற்றதை வற்புறுத்துதற்கு அவர் களுக்கு ஆதாரம் யாது உளது? இயற்கையினுடைய நடை முறை யாவும் ஆசையை அடிப்படையாகக் கொண்டது, போராட்டத்தை அடிப்படையாகக் கொண்டது, போட் டியை அடிப்படையாகக் கொண்டது, திண்டாட்டத்தை அடிப்படையாகக் கொண்டது — இப்படியெல்லாம் பகரு தற்கு அவர்களுக்கு ஆதாரம் எங்கே? போட்டியும் போராட் டமும் இருக்கின்றன என்பதை நாம் மறுக்கிறோமல்லோம். ஆனால் மற்ற சக்திக்கு இயற்கையில் இடமில்லையென்று சொல்லுதற்கு அதிகாரம் படைத்தவர் யார்? அன்பு என்று

அழைக்கப்படுவதும், "தனக்கல்ல" என்று இயம்பப் பெறுவதும், தியாகம் அல்லது நிவிருத்தி என்று சொல்லப் படுவதுமாகிய சக்திதான் உண்மையில் ஆற்றல் யாவும் படைத்துள்ளது என்பதை மறுக்கவல்லவர் யார்? அன்பு என்னும் உயிர்ச் சக்தியை முறைதவறிக் கையாண்டு விட்டால் அதற்கு இத்தகைய விபரீதமான பெயர்களெல்லாம் வந்துவிடுகின்றன. அன்பு என்னும் வல்லமை வாய்ந்த சக்தியே போட்டிக்குப் பிறப்பிடமாம்.

அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை.

ஆழ்ந்து ஆராயுங்கால் நெறி வழுவிய அன்புதான் தீமைக்குப் பிறப்பிடம் என்பதும் விளங்கும். தீமையும் நலத் தினின்றுதான் பிறக்கிறது. பிறகு அது நலமாகவே முற்றுப் பெற்றுவிடுகிறது. இந்த நலத்தை முறைதவறிக் கையாளுங் கால் இது தீமை என்னும் பெயர் பெற்றுவிடுகிறது. உதா ரணம் ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒருவன் மற்றொரு மனிதனைக் கொன்றுவிடுகிறான். கொலைபுரிவது தீய செயல். ஆனால் அவன் ஏன் கொலைபுரிகிறான் என்பது ஆராயப்படுகிறது. வேற்றானைக் கொன்று அவன் பொருளை அபகரித்துத் தன் மகனுக்குக் கொடுக்க எண்ணியுள்ளான் என்பது புலப்படுகிறது. மகன்மீது வைத்துள்ள அன்பின் தோற்றமாம் அது. தந்தை பூண்டுள்ள குறுகிய அன்பு கேடாய் உருவெடுக்கிறது. எண்ணிறந்த உயிர்களைப் புறக் கணித்துவிட்டு ஓர் உயிரின்மீது அன்பாக அது தோன்று கிறது. குறுகிய அன்பு தவறுதலானது. பரந்த அன்பு நேரானது. பின்பு குறுகியது எனினும் அன்பு அன்பேயாம். ஆக, கேட்டுக்கும் அன்புதான் ஏதேனும் ஒரு விதத்தில் பிறப்பிடமாயிற்று. குறுகிய பாங்கிலோ அல்லது பரந்த

பாங்கிலோ அன்பு ஒன்றே உயிர்களை வாழ்க்கையில் ஏவி வருகிறது.

ஜகத்திலுள்ளவைகளெல்லாம் என்னென்ன பாங்கில் தங்களை விளக்கிக்கொண்டு வந்தாலும் சரி அவை யாவுக்கும் உள்ளிருந்து இயக்கும் சக்தி ஒன்றேயாம். வியப்புக்குரிய இச்சக்தியானது வெவ்வேறு சொற்களில் பகரப்பெறுகிறது. சுயநலப் பற்றின்மை யென்றும், தியாகம் என்றும், அன்பு என்றும் இன்னும் பல பதங்களைப் பிரயோகித்தும் அது குறிப்பிடப்படுகிறது. இச்சக்தி ஒன்றுதான் வாழ்க்கைக்கு உண்மையில் உயிர்த் தத்துவத்தை ஊட்டுகிறது. ஆகவே மற்றவர்கள் இரண்டு சக்திகள் என்று சொல்லுவதை வேதாந்தியானவன் ஒரே சக்தி யென்று சாட்டுகிறான். இரண்டு சக்திகள் உள என்று இயம்புபவர்களுக்கு அடிப்படைக் கோட்பாட்டை விளக்கிக் காட்டி, உண்மையில் இருப்பது ஒரே சக்தி என்று நிரூபிப்பது அவசியமாகிறது. ஜகத்தின் நடைமுறைக்குக் காரணங்கள் இரண்டு உள என்னும் கோட்பாட்டை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. கேடு என்பது அன்பினது குறுகிய நிலையே யொழிய அது வேறு அல்ல என்பதை நாம் தெளிவுபடுத்த முடியும். பின்பு உலகங்கள் யாவையும் இயக்குவது ஒரே சக்தி என்பது வெளியாய்விடும். நலம் கேடு என்பனவும், அன்பு பகை என்பனவும் ஒன்றோடு ஒன்று சம்பந்தப்படாதிருந்து உலக நடைமுறைக்கு இரண்டு தனித் தனிக் காரணங்கள் ஆகின்றன என்பது ஒரு கொள்கை. ஒரு சக்திதான் இரண்டு பாங்குகளில் தன்னைத் தோற்றுவித்துக் கொள்கிறது என்பது மற்றொரு கொள்கை. இந்த இரண்டு கொள்கைகளுள் எது யுக்திக்குப் பொருத்தமானதாகத் தோன்றுகிறது என்பது கேள்வி. ஒரு சக்தியே இரண்டுவிதத் தோற்றங்களில்

பொலிகிறது என்னும் கோட்பாடே யுக்திக்கும் அனுபவத்துக்கும் ஒத்திருக்கிறது.

வாழ்வு என்பது ஒரு காட்சி. மறைவு அல்லது மரணம் என்பது அதன் மறுபக்கத்திலுள்ள காட்சி. ஒன்றை விரும்பினால் மற்றதை வெறுத்தாகவேண்டும். பிறப்பு இறப்பு என்பன ஜீவனுடைய இரண்டு தோற்றங்கள். அவைகளுள் விருப்பும் வெறுப்பும் அன்பின் இரண்டு தோற்றங்களாம்.

இது பரியந்தம் துவைதமதக் கோட்பாடுகளை ஆராய்ந்து வந்தோம். மேலும் அவைகளையே ஆராய்ந்து கொண்டிருக்க வேண்டிய அவசியமில்லை. ஏன் துவைத மதக் கோட்பாடுகளை நாம் ஆராய்ந்தோம் என்பதற்குக் காரணம் ஒன்று உண்டு. உயர்ந்த அத்வைத ஞானநிலைக்குப் போய்விட்டால் ஆங்கு சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்து ஒழுகுதற்கோ, சுயநலப்பற்றை ஒழிப்பதற்கோ ஹேது இல்லை என்று சிலர் கருதுகின்றனர். அது தவறுதலான கருத்து என்பதை விளக்கிக் காட்டுதற்கே துவைதமதக் கோட்பாடுகளைத் துருவி ஆராயலானோம். ஞானத்திலும் விக்ஞானத்திலும் உயர்ந்த நிலைக்குப் போகப் போக சன்மார்க்க ஒழுக்கத்துக்கு உறுதியான ஆதரவு கிடைக்கிறது. ஞானத்தில் மேல்நிலைக்குப் போகுமளவு ஒழுக்கத்தில் நிலைநிற்பதும் தானே வந்தமைகிறது. மக்களைப் பற்றிய ஞானம் மக்களுடைய சகஜீவனத்துக்கு முரண்பட்டதன்று. மற்று ஞானம் ஒன்றே வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் நம்மைக் காப்பாற்றவல்லது. மானுடரைப் போற்றி வணங்கத் தூண்டுவது ஞானம் ஒன்றேயாம். ஞானம் அதிகரிக்குமளவு நமக்கு நலன் உண்டாகிறது. காலதேச வர்த்தமானம் என்னும் அளவைக்கு உட்படாத பொருள் அவ் அளவைக்கு உட்பட்டிருப்பது போன்று தென்படுகிறது.

இத்தகைய தோற்றத்தால்அது தோஷத்துக்கு ஆளாயிருப்ப தாகவும் தென்படுகிறது என்கிறது வேதாந்தம். அளவை யில் அடங்கிய அன்பு, சிறு சொரூபங்களில் வைத்த அன்பு தோஷமாகத் தென்படுகிறது. அது துன்பத்தை விளைவிக் கிறது பின்பு அளவையில் அடங்காத அன்பு, எல்லை மருவாத அன்பு தெய்வ சொரூபமாகக் காட்சி கொடுக்கிறது. வேதாந் தம் மற்றுமோர் உண்மையைப் பகர்கிறது. அதாவது நாம் காணும் தோஷத்துக்கெல்லாம் நாமே பொறுப்பாளிகளாகி றோம். நாம் அல்லல் படுவதற்கு யாரோ தேவதைகள் காரணம் என்று நிந்தை கூற வேண்டாம்; மேலும் சோர் வடைந்து நம்பிக்கை யிழந்தவர்களாய் விடலாகாது; வேறு யாராவது வந்து நமக்குக் கைகொடுத்து உதவினுலொழிய இப்பொழுது நாம் அகப்பட்டுக் கொண்டுள்ள சூழ்நிலையி னின்று நம்மை நாம் விடுவித்துக் கொள்ள முடியாது என்ற எண்ணமும் நமக்கு வேண்டாம். இப்படி யெல்லாம் நினைப் பது முறையல்ல என்கிறது வேதாந்தம். நமது நிலையை ஒரு பட்டுப் புழுவினுடைய நிலையோடு ஒப்பிடலாம். தன் உடலினின்றே பட்டுப்புழு நூலை உண்டு பண்ணி, அதைக்கொண்டு கூடு கட்டி அக்கூட்டினுள் அது அடை பட்டுக் கொள்கிறது. அங்ஙனம் நமக்கு நாமே கர்மம் செய்து, அக்கர்ம பந்தத்தினுள் நம்மை நாம் அடைத்து வைத்துக் கொள்கிறோம். ஆனால் இப்படி பந்தத்தில் அடை பட்டுக்கிடப்பது எக்காலத்துக்குமென்று அமைந்ததன்று. பட்டுப்புழுவானது கூட்டினுள் பட்டுப் பூச்சியாக மாறியமை கிறது. கூட்டை உடைத்துக்கொண்டு விடுதலையடைந்து, அழகிய ஜந்துவாக அது வெளியில் வருகிறது. அங்ஙனம் நமது கர்ம பந்தபாசங்களை அகற்றி, முக்த புருஷர்களாக நாம் பிரபஞ்சத்தினின்று வெளியில் வரவேண்டும். கர்மம்

என்கிற வலையை நம்மீது நாமே வீசிக்கொண்டிருக்கிறோம். நமது அக்ஞானத்தால் நம்மைக் கட்டுண்டு கிடப்பவர்களாக எண்ணிக்கொள்கிறோம். நம்மை உய்விக்க யாராவது வர வேண்டுமென்று கதறியழுகின்றோம். ஆனால் புறவுலகி னின்று நமக்கு உதவிவருவது கிடையாது. நம்முள்ளிருப் பவனே நமக்கு உதவி புரிகின்றான். அண்டமெங்கும் வியாபித் துள்ள முப்பத்து முக்கோடி தேவர்களிடம் நாம் முறையிட் டுக்கொண்டே யிருக்கலாம். ஆண்டாண்டுதோறும் இங்ங னம் சாதகர்கள் பலர் அழுது புரண்டு கிடந்தனர். கடைசி யாக அவர்களுக்கு உதவியும் வந்தது. அவரவர் உள்ளி ருந்தே யாண்டும் அப்படி உதவி கிட்டியது. அறியாமை யினால் ஒவ்வொரு சாதகனும் செய்த குற்றத்தைத் தானே அகற்றவேண்டியதாயிற்று. விமோசனம் அடைவதற்கு அது ஒன்றே உற்ற உபாயம். நம்மைச் சுற்றிலும் நாம் வீசிக் கொண்ட வலையை நாமே அறுத்தெறியவேண்டும். இங்ங னம் வலையை வெட்டும் வல்லமை நமக்குண்டு. இதைப்பற்றி யாதொரு சந்தேகமும் வேண்டாம். நல்லது ஆனாலும் சரி, கெட்டது ஆனாலும் சரி, நாம் எடுத்துக்கொள்ளும் முயற்சி யில் ஒன்றும் வீண் போவதில்லை. இப்பொழுது நாம் என்ன நிலையில் இருக்கிறோமோ அது நாம் இதுகாறும் செய்த வினையின் விளைவாம். பாபம், புண்ணியம் ஆகிய இருவினையும் அதற்கு முகாமைகளாகின்றன. குற்றங்கள் பலவற்றை நாம் நமது ஜீவிதத்தில் செய்துவிடுகிறோம். அக்குற்றங்கள் நமக்கு நல்ல பாடத்தைப் புகட்டியிருக்கின் றன. அவைகள் மூலமாக நாம் பெற்றுள்ள அனுபவம் ஒப் பற்றது. அக்குற்றங்களாலன்றி நாம் இப்பொழுது அடைந் துள்ள நல்லறிவைப் பெற்றிருக்க முடியாது. ஆதலால் நாம் செய்த குற்றங்களைக் குறித்து நாம் வருந்த வேண்டியதில்லை;

ஒருவிதத்தில் திருப்தியடைந்தவர்களாகவே இருக்கலாம். இனி ஒவ்வொரு மனிதனும் வேண்டுமென்றே குற்றம் செய்ய வேண்டும் என்பதல்ல இதன் பொருள். அப்படி நாம் விஷயத்தை அனர்த்தம் பண்ணி விடலாகாது. தவறுதல்கள் செய்து விட்டதை முன்னிட்டு ஓயாது வருந்திக் கொண்டிருக்கவேண்டாம் என்பதே இதன் தாத்பரியம். நம்மிடத்துள்ள சில தீக்குணங்களும் கேடுகளும் இறுதியில் நலனுக வடிவெடுத்துவிடும் என்பது உறுதி. வேறு பாங்கில் போய் விட இடமில்லை. ஏனென்றால் நலமே வடிவெடுத்திருப்பது தானே நமது யதார்த்தநிலை. புனிதமே வடிவெடுத்திருப்பதுதான் நமது யதார்த்தநிலை. நமது யதார்த்த நிலையைத் தாற்காலிகமாக மறைத்து வைக்கலாம்; அதை அழித்துவிட எவர்க்கும் இயலாது. நமது யதார்த்தநிலை யாண்டும் உள்ளபடி இருந்து வருகிறது.

இதினின்று நாம் அறியக்கிடக்கும் கோட்பாடு ஒன்று உளது. நாம் புரிகின்ற தவறுதல் அல்லது கேடு நம்மிடத்துள்ள பலஹீனத்தினின்று உதித்ததாம். நாம் பலஹீனர்களாயிருப்பதற்குக் காரணம் நம்மிடத்துள்ள அக்ஞானமாம். இவைகளைத் தவறுதல்கள் என்றுதான் இயம்பவேண்டும். பாபங்கள் என்று சொல்லுவது பொருந்தாது. பாபம் என்னும் பதத்துக்கு ஆதியில் நல்ல அர்த்தம் இருந்தது. நாளடைவில் மனிதனுடைய உள்ளத்தில் பீதியை உண்டு பண்ணுகிற சில கருத்துக்கள் அதனோடு கலந்துவிட்டன. ஆகவே பாபம் என்று நாம் பகர்வோமல்லோம். நம்மை அக்ஞானிகள் ஆக்கியவர் யார்? நாமே நமது கரங்களால் கண்களைப் பொத்திக்கொண்டு எங்கும் இருளாயிருக்கிறதே என்று கூக்குரலிடுகிறோம். கண்களை மூடிக்கொண்டிருக்கும் கரங்களை அப்புறப்படுத்தவேண்டும். பிறகு வெளிச்சம்

தானே தென்படுகிறது. இருள் என்று எண்ணிக்கொண்டிருந்த பொழுதும் நாம் வெளிச்சத்திலேயே இருந்தோம். ஏனென்றால் ஆத்மாவானது யாண்டும் சுயம்ஜோதியானது. நவீன பௌதிக விக்ஞானம் என்ன பகர்கிறது என்று பார்க்கவேண்டும். உயிர்களெல்லாம் சிறு நிலையிலிருந்து பெருநிலைக்கு ஆவிர்பவித்து வருகின்றன. அப்படி அவை பரிணமித்து வருவதற்கு அடிப்படைக்காரணம் யாது? ஆசை. ஏதேனும் ஒன்றைச் செய்ய விலங்கு ஒன்று விரும்புகிறது. ஆனால் சூழ்நிலையோ அதற்கு அனுகூலமாயில்லை. சூழ்நிலையை சமாளிப்பதற்கு ஏற்ற புதிய சரீரத்தை அது அமைக்க எத்தனிக்கிறது. அந்த யத்தனத்தில் வெற்றியடைவதுதான் பரிணாமம் என்பது. புதிய சரீரத்தை அமைப்பது யார்? அந்த விலங்கு தனக்குத்தானே புதிய சரீரத்தை அமைத்துக்கொள்கிறது. தனது இச்சாசக்தி அதை அச்செயலில் தூண்டிற்று. அணுப்போன்ற சிற்றுயிர் நிலையிலிருந்து மானுடா, உன்னை நீ ஓயாது சிருஷ்டித்துக் கொண்டு வந்திருக்கிறாய். உன்னுடைய இச்சாசக்தியை மேலும் கையாண்டுவா. அதனால் இன்னும் உயர்ந்த நிலைக்கு நீ போவாய். எல்லாம் வல்லது இச்சாசக்தி. அது எல்லாம் வல்லது என்றால் விரும்பியதையெல்லாம் நான் ஏன் செய்யலாகாது என்று ஒருவன் கேட்கலாம். அப்படிக் கேட்கின்றவன் தனது அற்ப சொரூபத்தை எண்ணிக் கொண்டிருக்கிறான். அணுவுயிராயிருந்தவனே மானுட உயிராய் மேலோங்கி வந்திருக்கிறான். இத்தனை பெரிய மாறுதல்களை யெல்லாம் செய்தது யார்? உன்னுடைய இச்சா சக்தியைக்கொண்டே நீ செய்துள்ளாய். இச்சாசக்தியானது எல்லாம் வல்லது என்பதை இப்பொழுது நீ மறுக்க முடியுமா? இவ்வளவு தூரம் நீ முன்னேற்றம் அடைவதற்கு

உனக்கு உதவிபுரிந்த அதே இச்சாசக்தியானது நீ மேலும் முன்னேற்றமடைவதற்கும் உதவிபுரியும். இனி, நீ சீலத்தில் சிறந்தவன் ஆவாயாக. மனது தூயதாகுமளவு இச்சாசக்தி வலிவு பெறுகிறது. வலிவு பெற்ற இச்சாசக்தியைக் கொண்டு நீ மேல்நோக்கிப் போகமுடியும்.

மனிதனிடத்துள்ள கேடுகளைப்பற்றி அவனுக்கு ஞாபக மூட்டலாகாது. தன்னிடத்து இன்னின்ன கேடுகள் இருக் கின்றனவென்று ஒருவன் கேள்விப்படுகிறான். பிறகு அவன் ஓர் இடத்தில் போய் மேனி முழுதும் நீறு பூசியவனாய், கந் தையைக் கட்டியவனாய் இருந்துகொண்டு தான் செய்த குற்றத்தை எண்ணியெண்ணி வருந்துகிறான், புலம்புகிறான். அப்படி ஆயுட்காலமெல்லாம் அழுதுகொண்டேயிருந்தால் அவன் முன்னேற்றமடைய முடியுமா? அதனால் அவன் மேலும் பலஹீனனே ஆவான். குற்றத்தையே எடுத்துக் காட்டிக்கொண்டிருப்பவன் சமுதாயத்துக்கு நலம் செய்வ தில்லை. அதில் உள்ள தீமையை இன்னும் அதிகப்படுத்து கிறான். பல்லாயிரம் ஆண்டுகளாக அறையொன்று இருள் சூழ்ந்துகிடக்கிறது. "ஓ, கார் இருளே" என்று சொல்லிக் கொண்டு ஒருவன் அதனுள் வந்து புலம்பத் துவங்குகின் றான். அப்படி அழுவதால் இருள் அகன்றுவிடுமா? அதற் குப் பதிலாகத் தீக்குச்சி ஒன்றைக் கிழித்தால் வெளிச்சம் உடனே வருகிறது. "நான் தீங்கு செய்துவிட்டேன், பல தவறுகள் இழைத்துவிட்டேன்" இப்படியெல்லாம் ஒருவன் வாழ்நாளெல்லாம் எண்ணிக் கொண்டிருப்பதில் யாது நலன் விளையும்? இவ்விஷயத்தை ஞாபகப்படுத்துதற்கு எந்தத் தேவதையினுடைய சகாயமும் வேண்டியதில்லை. நல்லறிவு என்னும் வெளிச்சம் வந்தவுடனே தீமை என்னும் இருள் தானே நொடிப்பொழுதில் அகன்றுவிடுகிறது. ஒவ்வொரு

மனிதனும் நல்லொழுக்கமே வடிவெடுத்தவன் ஆகவேண்டும். சீலத்துக்கு அவன் இருப்பிடம் ஆவது அவசியம். ஆத்ம சொரூபம் அவன்பால் திகழ்வது ஆகுக. தூய்மையே வடிவெடுத்து இருப்பவன் குணம் என்னும் குன்று ஏறியிருப்பவன் ஆகிறான். அவனுடைய ஆத்மபிரகாசம் சுயம்ஜோதியாக நாலா பக்கமும் மிளிரும். மற்ற மனிதர்களும் அத்தகைய நல்வாழ்க்கையில் ஈடுபடவேண்டும் என்று அது அவர்களைக் கவர்ந்து இழுக்கும். பாரமார்த்திகப் பெருநிலையே ஒவ்வொருவனது யதார்த்த சொரூபம் ஆகிறது. அத்தகைய பெருநிலைக்கு ஒவ்வொருவனும் எழுந்திருத்தல் வேண்டும். அங்ஙனம் ஆத்மபோதம் பெற்று எழுந்திருப்பவன் புல்லிய கீழ்மகனிடத்தும் ஆத்ம சொரூபத்தையே காண்பான். ஆத்மபோதம் அடையப் பெற்ற சான்றோன் யாரையும் சிறுமைப்படுத்துவதில்லை. "நீ ஒன்றுக்கும் உதவாத கயவன்" என்று யாரையும் அவன் இகழ்வதில்லை. "ஞான ஒளிக்கு இருப்பிடமானவனே எழுந்திரு" என்று ஒருவனுக்கு அவன் உற்சாகம் ஊட்டுகிறான். "புனிதத்துக்குப் பிறப்பிடமானவனே, பண்பட்ட வாழ்வு உன்பால் பொலிவதாகுக" என்று இன்னொருவனுக்கு அவன் ஆசி கூறுகிறான். "பிறப்பு இறப்பு அற்ற பேராளா" என்று மற்றொருவனுக்கு அவனுடைய மகிமையை ஞாபகமூட்டுகிறான். "பேராற்றல் படைத்த பெருமகனே உனது பேரியல்பைத் தோற்றுவிப்பாயாக" என்று ஒருவனுக்கு ஓதுகிறான். "சிறுமை உனக்கு அடாதது ; பெருமையே உனது நிஜசொரூபம்" என்கிறான் ஒருவனிடம். மனிதன் பண்ணுகிற பிரார்த்தனைகளுள் இத்தகைய பேருணர்வை ஊட்டும் பிரார்த்தனைகளே மிக மேலானவைகள் என்கிறது அத்வைத வேதாந்தம். நமது நிஜசொரூபத்தை இடையறாது சிந்தை

யில் வைப்பதுதான் பிரார்த்தனைகளுள் பெரியது. சித்தமிசை குடிகொண்டுள்ள அறிவான தெய்வத்தை இடையறாது சிந்தித்தல் வேண்டும். அது அகண்டாகாரப் பெரிய பொருள்; எல்லாம் வல்லது; அது சதாசிவம், அதாவது நலமனைத்துக்கும் இருப்பிடம்; கருணையே வடிவெடுத்தது; சுயநலம் என்னும் சிறுமைக்கு அப்பாற்பட்டது; உபாதிகளையெல்லாம் கடந்தது. ஜீவபோதத்துக்கு அது மேலானது. ஆதலால் அதனிடத்திருந்து ஆற்றல் எல்லாம் வடிவெடுக்கிறது. அப்பேருணர்வு அச்சத்தை அகற்றுகிறது. யாரிடத்தில் சுயநலமிருக்கிறதோ அவனிடத்து பயமுண்டு. தனக்கென்று ஒன்றையும் வேண்டாதவன் யாருக்கு அஞ்சவேண்டும்? அவனை பயமுறுத்த வல்லது யாது? மரணத்தைக் குறித்து அவன் அஞ்சுபவனா? ஒருநாளுமில்லை. உலகில் உள்ள தீமைகளைக் குறித்து அவன் அஞ்சுபவனா? அதுவுமில்லை. அத்வைதி ஒருவனுக்கு இத்தகைய இடர் ஒன்றும் இல்லை. அத்வைத வேதாந்தத்தை அனுஷ்டிப்பவன் செய்யக்கிடக்கும் கடமையொன்று உண்டு. தன்னைச் செத்தவன் ஆக்கிக்கொள்ளுதல் அவனுடைய முதற்கடமையாகும். மடிந்துபோன ஆள் தோற்றத்தில் இல்லை. அவனுக்குரிய பெயரில்லை, ஊரில்லை, உற்றார் உறவினர் இல்லை. பழைய கற்பனைகளாக அவை யாவும் மறைந்து போய்விட்டன. கற்பனைகளெல்லாம் ஒழிந்துபோன பிறகு எஞ்சியிருப்பது எதுவோ அது ஆத்ம சொரூபம். மாசு படியாத தூய உணர்வு அது. உறுதிப் பொருள் அதுவே. தன்னில் தானாயிருப்பதால் அது எல்லாம் செய்து சாதித்ததாகிறது. பேரறிவு என்பது அதுவே. கட்டு அற்ற பூரணமாகிய அது ஒன்றே எஞ்சியிருக்கிறது. பிறகு எதைக் குறித்து எதற்கு அச்சம் உண்டாவது? எங்கும் நிறை

பொருளைத் துன்புறுத்துபவன் யார்? இப்பேருணர்விலே நிலைத்திருப்பவனுக்கு மனத்தளர்வு என்பதில்லை. பூரணத்தில் நிலைத்திருந்துகொண்டு தன்னைச் சார்பவர்க்கெல்லாம் அப்பேருணர்வை ஊட்டுதல் ஒன்றே நிறைஞானியின் செயல் ஆகிறது. அகம் புறம் எல்லாம் பரபிரம்ம சொரூபம் என்பதை ஞானி உணர்கிறான். அக்ஞானிக்கு அத்தகைய உணர்வு இல்லை. அவனிடத்து அத்தகைய ஞானத்தை வழங்கவேண்டும். பரபோதம் வளருமளவு மக்கள் மேன்மையுறுவர். உலக முன்னேற்றத்துக்கு இந்த ஞானம் முற்றிலும் தேவையாயிருக்கிறது.

இந்த ஞானம் மிக மிகப் பழையது. மலைகளையெல்லாம் விட இது பழையது எனலாம். பொருளைப்பற்றிய உண்மை சாசுவதமானது. இவ்வுண்மையானது யாருடைய தனியுரிமையுமல்ல. எந்த மனிதனுவது, எந்த சமுதாயமாவது இதன்மீது அலாதியான பாத்தியதை கொண்டாட முடியாது. தான் பரபிரம்ம சொரூபம் என்னும் உண்மை ஜீவர்கள் எல்லார்க்கும் பொதுவானது. இது அலாதியாகத் தன்னுடையது, மற்றவர்களுக்கு இதில் எந்தவிதமான உரிமையும் கிடையாது என்று யார்தான் சொந்தம் பாராட்ட முடியும்? ஆனல் நாம் செய்யக்கிடக்கும் கடமையொன்று உண்டு. எல்லாரும் அனுஷ்டிக்கக்கூடிய அவ்வளவு எளியதாக இவ்வுண்மையை ஆக்கிவிடவேண்டும். நம்மைப்பற்றிய பேருண்மைகள் எளியவைகளில் மிக எளியவைகளாம். ஆகவே இவை யாவும் சமுதாயத்தினுடைய ரத்தத்தில் ஆழ்ந்து ஊறிவிடவேண்டும். பண்டிதன் பாமரன் ஆகிய எல்லார்க்கும் இது பொது உடைமையாவது அவசியம். ஆடவர், மகளிர், சிறுவர், சிறுமிகள் ஆகிய எல்லாரும் இதைத் தெரிந்திருத்தல் வேண்டும். அரிய பெரிய வாதப்

பிரதிவாதங்கள் செய்வதும், மூட்டை மூட்டையாய் தத்துவ விசாரங்கள் செய்வதும், சமயக் கோட்பாடுகளைப் பாகு படுத்துவதும், மதச் சடங்குகள் பலவற்றில் ஈடுபடுவதும் அந்தந்தக் காலங்களில் நலம் தருவனவாக இருந்திருக்க லாம். ஆனால் இக்காலத்துக்கு ஏற்ற பாங்கில் உண்மையை எல்லார்க்கும் உரியது ஆக்கிவிடலாம். எல்லாரும் அதை எளிதில் அறிய முடியும். பின்பு அதை அனுஷ்டிக்குமளவு கிருதயுகம் வந்தமையும். உயிர்கள் யாவும் பரபிரம்ம சொரூ பம். ஒருவரோடு ஒருவர் இணக்கம்கொள்கையில் இந்த உணர்வு அடிப்படையில் இருக்கும். அதினின்று இனிமை யும், இன்பமும், ஒழுங்குப்பாடும் வடிவெடுக்கும். அத்தகைய உயர்ந்த மனநிலையே கிருதயுகம் என்பதாம்.




---

